# இலக்கியக் கட்டுரைகள்

(தெரிவு செய்யப்பட்டவை)



உயர்திரு விபுலாநந்த அடிகள்

யோ. தமிழினி

கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர்தர தேர்வுக்குரியது
[1974 ஆம் ஆண்டு தொடக்கம்.]

# இலக்கியக் கட்டுரைகள்

(தெரிவு செய்யப்பட்டவை)



உயர்திரு விபுலாநந்த அடிகள்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

# பதிப்புரை

விபுலாநந்த அடிகளாரின் பன்னிரண்டு கட்டுரைகள் கொண்ட இத்தொகுப்பு நூல், 1973 ஆம்ஆண்டு தொடக்கம் கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர்தர வகுப்புத் தேர்வுக்குரிய தமிழ்ப் பாடநூல்களில் ஒன்ருகும். பரீட்சைத் திணைக் களத்தின் ஆலோசனைக் கிணங்க, கல்வி வெளியீட்டுத் திணைக்களம் இதனை வெளியிடுகிறது. இந்நூல் செம்மையுற அமைதற்கு மூலப் பிரதிகள் வேண்டப்பட்ட போது, அவற்றைத் தந்துதவிய பேராதனைப் பல்கலைக்கழகம், மட்டக் களப்புப் பொது நூலகம், புராதன சாசனசாலை, யாழ்ப்பாணக் கல்லூரி என்பவற்றுக்கு எமதுநன்றி உரியது. யாழ்நூல் தந்துதவிய பரீட்சைத் திணைக்களத்து உதவி ஆணையாளர் திரு. வி. சதாசிவம் அவர்களுக்கும் பண்டிதமணி முதுபெரும் புலவர் மு. கதிரேசச் செட்டியார் மணிமலர் தந்துதவிய கொழும்பு பல்கலைக்கழகத் தமிழ் விரிவுரையாளர் கலாநிதி. க. கைலாசபதி அவர்களுக்கும் எமது நன்றி.

வ. அ. ஜெயவர்த்தன
ஆணையாளர்.

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்,
சிறீமதிபாய,
கொழும்பு 7.

# முன்னுரை

தமிழகத்திலும் ஈழத்திலும் தலைசிறந்த முத்தமிழ் வித்தகராய்த் திகழ்ந்து, தவவாழ்வு மேற்கொண்டு, தமிழ் மொழிக்கு அருந் தொண்டாற்றியவர் சுவாமி விபுலாநந்த அடிகள் (1892-1947). மீன்பாடும் தேன் நாடெனப் போற்றும் மட்டக்களப்பு நகரிலே காரேறு மூதூர்ப் பழம்பதியிலே (காரைதீவு) இவர் பிறந்தார். தந்தையார் சாமித்தம்பி; தாயார் கண்ணம்மையார். சுவாமிகளுக்கு பெற்றோர் இட்ட பெயர் மயில்வாகனம் என்பது. துறவின் பின் (கி.பி. 1922) பெற்ற பெயர் விபுலாநந்த அடிகள் என்பது.

சுவாமி விபுலாநந்தர் பயிற்சி பெற்ற ஆசிரியர்; மதுரைத் தமிழ்ச் சங்கத் தமிழ்ப்பண்டிதர்; விஞ்ஞானக் கலைமாணி (B. Sc.); விஞ்ஞான 'டிப்புளோமா' பட்டதாரி; சிறந்த கலைஞர்; ஆராய்ச்சி யாளர்; சிறந்த விஞ்ஞான ஆசிரியராகவும், கல்லூரி அதிபராகவும், பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராகவும் கடமையாற்றியவர்; இராமகிருஷ்ண விஜயம் (தமிழ்) வேதாந்த கேசரி (ஆங்கிலம்) பிரபுத்தபாரதம் (ஆங்கிலம்) ஆகிய சஞ்சிகைகளின் ஆசிரியராகவும் அவ்வப்போது பணிசெய்தவர்.

ஆறுமுகநாவலர் வட இலங்கையிற் றோன்றி யாழ்ப்பாணத்திற் கல்வி நிலையங்களை நிறுவி அவற்றின் மூலம் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தமை போன்று, கிழக்கிலங்கையில் விபுலாநந்த அடிகளார் பணி செய்துள்ளார். எனினும் இருவரும் நாடு முழுவதையும் நோக்கிப் பணிசெய்தவர்களே. அடிகளார் தோன்றிய காலம் ஆங்கில ஆட்சி வீறு கொண்டிருந்த காலம். அக்காலத்தில் எம் நாட்டுச் சமயம், கல்வி, கலாசாரம், பண்பாடு என்பன மேலைநாட்டு மோகத் தினால் அழிந்தொழியாது, அவற்றைக் காப்பாற்றி, புத்துயிரளித்த ஈழத்துத் தேசிய வீரர்களுள் அடிகளாரும் குறிப்பிடத்தக்கவர்.

அடிகளார், தமிழ்நாடு சென்று கரந்தைத் தமிழ்ச் சங்கம், மதுரைத் தமிழ்ச் சங்கம், கலைச் சொல் ஆராய்ச்சிக் கழகம் என்பன நடாத்திய விழாக்களிலே பல தலைமையுரைகள் ஆற்றியுள்ளார். அவைகளெல்லாம் சிறந்த ஆராய்ச்சியுரைகள். **யாழ்நூல்** என்னும்

இசைத்தமிழ் ஆராய்ச்சிநூலையும், **மதங்கசூளாமணி** என்னும் நாடகத் தமிழ் நூலையும் ஆக்கிய அடிகள் பல சிறந்த செய்யுள் நூல்களையும் மொழி பெயர்ப்பு நூல்களையும் அளித்துள்ளார். **கணேசபஞ்சதோத்திர பஞ்சகம். கதிரையம்பதி மாணிக்கப் பிள்ளையார் இரட்டைமணிமாலை, சுப்பிரமணிய சுவாமிகள் இரட்டை மணிமாலை, குமார வேணவமணி மாலை** என்பன அவர் யாத்த செய்யுள் நூல்கள். சுவாமி **விவேகாநந்தர் சம்பாஷணைகள், விவேகாநந்த ஞானதீபம், கருமயோகம், ஞான யோகம், நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை** என்பன மொழி பெயர்ப்பு நூல்கள். இவற்றைவிட ஆங்கிலத்திலும் தமிழிலும் பல கட்டுரைகள் எழுதியுள்ளார்; கவிதை, இலக்கியம், இலக்கணம், வரலாறு, விஞ்ஞா னம், இசை ஆகிய பல துறைகளிலும் இவர் தமிழில் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் **'செந்தமிழ்'** (மதுரைத் தமிழ்ச் சங்கத்து மாத சஞ்சிகை) **'தமிழ்ப் பொழில்'**, (கரந்தைத் தமிழ்ச் சங்கத்து மாத சஞ்சிகை) **'செந்தமிழ்ச் செல்வி'**, **'கலைமகள்'**, **'ஈழகேசரி'** ஆகிய பத்திரிகைகள் பெருமையோடு வெளியிட்டு வந்தன. இவற்றுள் தெரிவு செய்யப்பட்ட இலக்கிய, இலக்கண, வரலாற்றுக் கட்டுரைகள் கல்விப் பொதுத் தராதர உயர்தர வகுப்புக்குரிய நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் அடிகளாரின் பன்னிரண்டு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. முதற்கண்ணமைந்துள்ள **இலக்கியச் சுவை** என்ற கட்டுரை கல்முனை ஆசிரியர் விடுமுறைக் கழகத்தில் அடிகளார் இலக்கியங் கற்றலும் இலக்கியச் சுவையிலீடுபடுதலும் என்னும், பொருளில் ஆற்றிய விரிவுரையாகும். இக்கட்டுரையின் முற்பகுதியிலே தமிழிலே தோன்றிய இலக்கியச் செய்யுள் நூல்களையும் உரைநடை நூல்களையும் வரையறுத்துக் காட்டி, அதன் பின்,

'' நகையே அழுகை இழிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம், வெகுளி உவகையென்று
அப்பா லெட்டே மெய்ப்பாடென்ப '' எனத் தொல்காப் பியத்திற் கூறப்பட்ட மெய்ப்பாடுகள் அல்லது சுவைகள் வெளிப் படுமாற்றை வில்லிபாரதச் செய்யுள்கள் மூலம் விளக்கியுள்ளார்.

**ஐயமும் அழகும்** என்னும் இரண்டாவது கட்டுரை, அகத்தி ணையிலே தலைவன், தலைவியரிடத்து நிகழும் காட்சி, ஐயம், துணிவு என்னும் மூன்று துறைகளில், இடையில் நிகழ்வதாகிய ஐயம், காட்சியிலும் சிறப்புடையதாய், அற்புத ரசத்தினைத் தருவதாய் அமைந்துள்ளமையை பல மேற்கோட் செய்யுள்கள் மூலம் விளக்கு கிறது. பொருளியல் நூல்களுக்குக் காட்சி கருவியாகும்; அழகு நூல்களுக்கு ஐயம் கருவியாகும்; மெய்யுணர்வு நூல் (தத்துவஞானம்)

களுக்குத் துணிவு கருவியாகும் என்று கூறும் நூலாசிரியர், ஐயத்தின் வழி அழகு பிறப்பதனை, அணிகள் அழகு பெற நிற்கும் பல அகப் பொருட் செய்யுள்கள் வாயிலாகக் காட்டிச் செல்கின்றார்.

பழங்காலத்திலே மண்ணிலும் மரத்திலுஞ் செய்யப்பட்ட உருவங்கள் பின்னர் குகை ஓவியங்களாக அஜந்தா, சிகிரியா முதலிய இடங்களிலே வரையப்பட்டன. ஓவியனது மனக்கருத்தே ஓவியத்தினது உயிராகும். இது கவிஞனது உள்ளக்கருத்தைச் செய்யுளிலே காண்பதைப் போன்றது. ஓவியம் கண்ணையும் மனத்தையும் கவரும், ஆனால் கவிதை ஐம்புலன்களையும் மனத்தையும் கவரும்; கவிதையில் உவமான உவமேயக் காட்சிகள் அகக் கண்ணிலே தோன்றும் வகையை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவற்றின் செய்யுள் மூலம் **வண்ணமும் வடிவும்** என்ற மூன்றாவது கட்டுரையில் விளக்குகிறார்.

**நிலவும் பொழிலும்** என்பது நான்காவது கட்டுரை. சத்துவ விகற்பங்களை ஓவியன் வண்ணத்தினாலும் வடிவினாலும் வெளிப் படுத்துவான். இசைவல்லோன் அவற்றை இசையுருவாகத் தருவான். கவிஞன் கண்ணினும் செவியினும் நுண்ணிதின் உணர்ந்து அவ்விருவர் செயலினைச் செவ்விதிற் புரிந்து, தான் பெற்ற இன்பத்தினை உலகத்திற் குக் கவிதை வடிவில் வழங்குவன். நிலவும் பொழிலும் தரும் இன்பத்தினை அனுபவித்துச் சுவைத்த புலவன் பிறரும் துய்க்குமாறு காட்டும் வகையினை உதாரணச் செய்யுள்கள் மூலம் இக்கட்டுரையில் அடிகளார் ஆராய்கிறார். மேலும், நிலவும்பொழிலும் தனித்து நின்று பயக்கும் அழகினிலும் பார்க்க இரண்டும் ஒருங்கியைந்து தரும் அழகு சிறந்ததென்ற உண்மையை அடிகளார் இக்கட்டுரையில் வலியுறுத்து கிறார்.

அழகும் உண்மையும் கவிதைக்குப் பொருளாயமைவது போல, செம்மை வயத்ததாகிய சால்பும் கவிப் பொருளாயமையும் என்பதைக் **கவியும் சால்பும்** என்ற கட்டுரை விளக்குகின்றது. வெள்ளகால் சுப்பிரமணிய முதலியாரது தனிப்பாடற்றொகுதி, அவரைப் பற்றி மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரை உள்ளிட்ட அறிஞர் வாழ்த்திய வாழ்த்துரை என்பன வாயிலாக இப்பண்பு புலப்படுத்தப்படுகிறது.

தேவார இசைத்திரட்டும் இசை நாடகச் சூத்திரங்களும் புறவுறுப்பாக அமைந்த **யாழ்நூல்,** பாயிரவியல் முதலாக ஒழிபியலீறாக ஏழு இயல்களையுடையது. சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் யாழாசிரியன் அமைதி கூறும் இருபத்தைந்து அடிகளுக்கு இயைந்த தொரு விரிவுரையாக இந்நூல் அமைந்ததெனலாம். அன்றியும்

இந்நூற்கண் வழக்கொழிந்துபோன இசைநூல் இலக்கணத்தையும் முளரியாழ், ஆயிர நரம்புயாழ் போன்ற வழக்கொழிந்த யாழ்களையும் பற்றிக் கூறுகின்றார். தேவாரப் பதிகங்கள் முழுமைக்கும் யாப்பமைதி, கட்டளையமைதி, சுவையமைதி என்பவற்றைத் தந்து ஆயிரம் ஆண்டுகளாக மறைந்து கிடந்த கலைச்செல்வத்தை மீண்டும் நாம் பெறுவதற்கு இந்நூல் உதவி செய்கின்றது. இந்நூலின் இரண்டாம் அதிகாரமாகிய யாழ் உறுப்பியற் பகுதி இந்நூலில் ஆறுவது கட்டுரையாக இடம் பெறுகின்றது. இப்பகுதியில் வில்யாழ் அமைப்பு, இசைகூட்டு முறை என்பவற்றை ஆராய்கின்றார்.

ஒருகால் தமிழ் மக்கள் பலவகைக் கலைகளும் உடையவராய் உலகத்தின் பல பாகங்களிலும் வாழ்ந்தவர்கள்; வணிகத்தில் மேம்பாடுற்று விளங்கியவர்கள்; பல நாடுகளிலும் சென்று குடியேறியவர்கள்-என்னும் வரலாறுகளை நூல்வடிவில் வெளிவரச் செய்யவேண்டும்; இங்ஙனம் செய்யாமையால் நமது வரலாறு பிறநாட்டவர்களுக்குத் தெரியாமற் போய்விட, அது அழிந்து விடுகிறது; பழைய காலத்திலே தமிழ் அடைந்திருந்த சிறப்பை எதிர்காலத்தவர்களும் அறியவைப்பதற்கும் மற்றைய நாட்டவர் அறிவதற்குமாக நாம் செய்ய வேண்டிய பிரதான தொண்டு வரலாற்றுநூல்களை எழுதுவது; இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழும் ஒன்றோடொன்று தொடர்பு பட்டனவாகையால் ஒவ்வொன்றில் வல்லோர் மற்றையவற்றையும் அறிதல் வேண்டும்; தமிழறிவு நிரம்பியவர்களே தமிழ்த் தொண்டு செய்தற்கு உரியவர்கள் என்ற இத்தகைய செய்திகளை அடிகளார் **இயலிசை நாடகம்** என்னும் கட்டுரையிற் கூறியுள்ளார்.

தமிழ் மக்கள் கலைமகளாகிய சரசுவதியை “வாணி” என அழைப்பர். அதனை ஆதாரமாகக் கொண்டு, ஆங்கில இலக்கியங்களுக்கு ‘**ஆங்கிலவாணி**’ என நாமமிட்டு ஆங்கிலக் கவிஞர்களாகிய சேக்ஸ்பியர், மில்றன், கீத்ஸ், ஏழைகள் கவிஞரான ஷெல்லி, தெனிசன், றெபேட் பிறௌணிங் என்பவர்களது நூல்களாகிய ‘யூலியஸ் சீசர்’ *(Julius Ceasar)*; ‘பறடைஸ் லொஸ்ற்’ *(Paradise Lost)*; ‘எண்டிமியோன்’ *(Endymiod)*; ‘கட்டுநீங்கிய பிரமதேயன்’ *Prometheus Unbound)* ‘கையறுநிலைச் செய்யுள்’ *(In Memoriam)* ‘த றிங் அன் த புக்’ *(The Ring and the Book)* என்னும் காப்பியங்களின் வரலாறுகளையும் ஆங்கிலப் புலவர்களையும் ஆங்கில இலக்கியங்களையும் அறிமுகஞ் செய்து அவ்விலக்கியங்களிலிருந்து சில சுவையான செய்யுட் பகுதிகளைத் தமிழிலே செய்யுளாக மொழிபெயர்த்துயாத்து, ஆங்கில இலக்கியங்களை அறியாதவர்கள் ஆங்கில இலக்கிய நயத்தைச் சுவைக்க இக்கட்டுரை மூலம் வழிசெய்துள்ளார் விபுலாநந்த அடிகள். இக்கட்டுரை ஒப்பியற் கல்வித் துறைக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது.

**மேற்றிசைச் செல்வம்** என்ற கட்டுரையிற் பண்டைய கிரேக்கத்திலும் எகிப்திலும் மற்றைய மேலைத் தேசங்களிலும் உயி ராற்றலுடன் விளங்கிய நாகரிக வரலாற்றை அடிகளார் நுண்ணறிவோடு நடுநின்று ஆராய்கிறுர். இவ்வாராய்ச்சிக்கட்டுரை வாயிலாக மேலை நாட்டாரது அரசியல் முறையும் புலநெறி வழக்கமும், கலைபயினிலைமையும், பொருள் செயல்வகையும் தெற்றென விளங்குகின்றன. அடிகளார் இதனைச் சுருக்க நூலாக எழுதும் எண்ணத்துடன் இக்கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்ததாக அவரது முன்னுரையிலிருந்து அறியக் கிடக்கின்றது. எனினும் நூல் முழுமைபெற்றிலது. '**செந்தமிழி**'லே தொடர்ந்து வெளிவந்த முதலாம் அதிகாரமாகிய முன்னுரையும், இரண்டாம் அதிகாரமாகிய மேனுட்டு நாகரிக வரலாறும் சுமேரிய, அக்கேடிய, ஆசுரேய, பாபிலோனிய, எகிப்திய நாகரிக நிலைமையும் மூன்ரும் அதிகாரமாகிய கிரேக்க, ரோமானிய நாகரிகத்தில் யவனபுரத்துக்கலைச் செல்வமும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அவர் முன்னுரையிற் குறிப்பிட்ட பன்னிரண்டு அதிகாரங்களில் மிகுதி ஏழு அதிகாரங்களும் வெளிவந்ததாகத் தெரியவில்லை. மேற்றிசைச் செல்வத்தை ஆராயப் புகுந்த அடிகளார் தமது முன்னுரையிலே தாய் மொழிக்கல்வி, மொழிபெயர்ப்பு நூல்கள், புறப்பொருளாராய்ச்சி என்பன பற்றிக் குறிப்பிடும் கருத்துக்கள்ஆழ்ந்து சிந்திக்கத் தக்கன.

பத்தாவது கட்டுரையாகிய '**சோழமண்டலத்துத் தமிழும் ஈழமண்டலத்துத் தமிழும்**' தமிழ் மொழி ஒலியியல் பற்றி ஆராய்கிறது. இதில் பேராசிரியர் கணபதிப்பிள்ளையவர்களின் 'நாஞடகத்'தை மையமாகக் கொண்டு ஈழத்து வழக்குத்தமிழ் ஆராயப்படுகிறது. மட்டக்களப்பு, யாழ்ப்பாண வழக்கு மொழி பற்றிய ஆராய்ச்சி; நாடக நூலில் வரும் கொடுந்தமிழ் வழக்கு; அறநூல், பொருணூல், இன்பநூல், வீட்டுநூல் என்பன செந்தமிழில் ஆக்கப்பட வேண்டியதன் அவசியம் என்பவற்றை இக்கட்டுரைவாயிலாகத் தெளிய வைக்கின்ருர் அடிகளார்.

சிறப்பாகப் பூத பௌதிக நூல்களின் பெயரான 'சையன்ஸ்' என்னும் ஆங்கிலப்பதம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பாகுபாட்டோடு தொடர்புடைய சட்டம், கலை, முதலிய ஆங்கில பொருட்கூறுபாடுகளையும் கருதுவது என்பதை இக்கட்டுரையின் ஆரம்பத்திற் கூறிய அடிகளார், ஆட்சியிலுள்ள தமிழ்ச் சொற்களைக் கண்டறிதல், அறிஞர் மூலம் கலை நுட்பங்களைக் கூறும் வடமொழிப் பதங்களை வழக்கு மொழியிற் பெயர்த்தெழுதல், தமிழில் ஆட்சிப்பட்டு வழங்கும் வடமொழிப் பதங்களைக் கையாளுதல் என்பவற்றைக் கலைச் சொல்லாக்கத்தில் மேற்கொள்ளலாம் என்றும்

குறிப்பிடுகின்றார். ஆனால், பிற மொழிப் பதங்களைத் தமிழிற் பெயர்த்தெழுதும்போது முதனிலை, இறுதிநிலை, இடைநிலை மயக்கம் என்பவற்றைக் கருத்திற் கொண்டு, ஈரசை, மூவசைச் சீர்களாக்கி, சிறப்பியல்புகள் மாறுபடா வகையில் அமைத்துக் கோடல் சிறப்புடையது எனவுங் காட்டுகின்றார். அதற்குதாரணமாக இறுதியிலே தம்மால் எழுதப்பட்ட ''மின்சார சாத்திரவரலாறு'' என்னும் கட்டுரைப்பகுதியினையும் தந்துள்ளார்.

பன்னிரண்டாவது கட்டுரையில் அடிகளார் அவர்கள் இடைக்கால இந்திய சமய வளர்ச்சியையும் அவ்வளர்ச்சி பாரத நாடெங்கும் பரவி, சமூக வாழ்க்கையிற் புதிய நம்பிக்கையையும் சிரத்தையையும் உண்டாக்கி, தேசிய உணர்ச்சிக்கு வித்திட்ட வகையைக் காட்டுகின்றார். அதனைத் தொடர்ந்து தென்னாட்டில்ஊற்றெடுத்த அன்புப் பெருக்கு வடநாட்டிற் பரவிய முறையை விரிவாக ஆராய்கிறார்; முதலில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆசாரியரும் ''எல்லோரும் ஓர் குலம்'' என்னும் கொள்கையைக் கடைப்பிடித்து அன்பு நெறியை வளர்த்தமையைக் குறிப்பிட்டு அப்பால் தென்னாட்டு வைணவம் 'ஆழ்வார்களாகிய ஊற்றினின்றும் உதித்து, அன்புவெள்ளம் பெருக்கி, வடக்கு நோக்கி அலையெறிந்து பாய்ந்து, பாரத நாடு முழுவதும் பரவிய' வகையை விளக்குகின்றார். ஸ்ரீராமனுஜரே இவ்வரன்முறையைத் தோற்றுவித்தவர் எனவும் அவரின் பின் இராமாநந்தரும் இரவிதாசர், கபீர்தாஸர் என்போரும் அதனை வளர்க்க, அவர்களின் செல்வாக்கினால் உந்தப்பட்டு மீராபாய், தாதர், துளசிதாஸர், வல்லபாச்சாரியார், ஸ்ரீசைதந்யதேவர், இராமதாஸர், குருநானக் முதலிய வடநாட்டினர் பல பல சமய இயக்கங்கள் வாயிலாக அன்பு நெறியைப் பரப்பினர் எனவும் கூறுகின்றார். பக்திப்பிரவாகம் நாடெங்கும் பரவித் தேசிய உணர்ச்சிக்கு வலிமை தந்தவாற்றையும், நாட்டிற் சமூக எழுச்சி தோன்றிய விதத்தையும் சமரச மனப்பான்மையோடு ஆராய்ந்துள்ளார்.

கடல் வாய்ப்பட்டனவும் காலத்தின் மாறுதலினாற் சிதைந்து அழிந்தனவுமான இலக்கிய சமய நூல்களாகிய கலைச் செல்வத்தை மீண்டும் பெறுவதற்கு முயலும் எண்ணத்தோடு அயராது உழைத்தவர் அடிகளார். அவரது நுட்பமான ஆராய்ச்சியின் பயனாக **யாழ்நூல், மதங்க சூளாமணி** போன்ற அரிய நூல்கள் தோன்றி இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்ப் பிரிவுகள் வளம் பெற்றன. இந்நூற்றாண்டிலெழுந்த தமிழிசை இயக்கத்தின் முன்னோடியும் இவரே.

மேலும், ஆங்கில மொழியிலுள்ள இலக்கியங்களைச் சுவை குன்றாது மொழிபெயர்த்தார். ஆங்கில இலக்கிய வளத்தைத் தமிழர்கள் நுகர

வழி செய்வதோடு ஒப்பியல் இலக்கிய ஆராய்ச்சியாளருக்கும் வழிகாட்டி நிற்கின்றன, **மதங்க சூளாமணி, ஆங்கிலவாணி** என்னும் மொழிபெயர்ப்பு இலக்கியங்கள். அவற்றுள் அடிகளார் கூறிய கருத்துக்களும் ஆக்கவேலை நெறிகளும் தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் துணைசெய்கின்றன.

அடிகளாரின் கட்டுரைகளில் மொழியழகையும் நடையழகையும் காணலாம். சங்க இலக்கியங்களிலே பழகியோராற் பெரும்பாலும் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வந்த அக்காலத்து நடை, இக்கால வாசகர்களுக்குப் புதிய நடையாகத் தோன்றுவது சகசம். எனினும் சமகாலத்தவராயும் நண்பர்களாயும் விளங்கிய வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார், நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், நவநீத கிருஷ்ணபாரதியார் என்பவர்களும் இத்தகைய நடையையே கையாண்டனர் என்பது மனங்கொள்ளத்தக்கது. அவ்வாறாயினும் அடிகளாரின் நடையில் எளிமையும் இனிமையுஞ் சொட்டுவதைக் காணுமலிருக்க முடியாது. இலக்கியக் கட்டுரைகளிலும் வரலாற்றுக் கட்டுரைகளிலும் பொதுத்தன்மை தனித்தன்மைகளைக் காட்டும் அடிகளாரின் ஆராய்ச்சி இயல்பு அவதானிக்கத் தக்கது. தாம் அநுபவித்துச் சுவைத்த இலக்கியப் பகுதிகளையும் அவற்றின் மூலம் தம் சிந்தனைகளில் உதித்த சில புதிய கருத்துக்களையும் (உதாரணமாகக் கன்னனைப் பாரதக் கதாநாயகனாகக் கூறியது போன்றவை) ஆதாரபூர்வமாகக் காட்டியமை நவீன ஆராய்ச்சியாளருக்குப்பாதை வகுத்தது போன்றதாகும்.

பழந்தமிழ் இலக்கியச் சிறப்புக்களையும் சேக்ஸ்பியரின் திறத்தையும் பாராட்டி, பழந்தமிழ் இலக்கியம் போன்று கடின சொற்களாற் கவிதையாத்த அடிகளார் அதே சமயம் புதுமைக்கவிஞர் பாரதியாரையும் போற்றி அவரைப் போல் எளிய சொற்களிற் புதுமைப் பொருளிற் கவிதை தந்து பழமையையும் புதுமையையும் இணைக்கும் பாலம்போல் விளங்குகிறார். அன்றியும்வெறுங் கற்பனையாக அமையாமல் உள்ளத்தின் உண்மை ஒளியைக் காட்டுவனவாகவும் விளக்கிக் கூறுவனவாகவும் அடிகளாரது பாடல்கள் அமைந்திருப்பதையும் காணலாம்.

இந்நூல் கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர்தரவகுப்பு மாணவர்களுக்கு இலக்கிய அறிவு, வரலாற்றறிவு என்பவற்றை உணர்த்தி ஆராய்ச்சி மனப்பான்மையைத் தூண்டக் கூடியவாறு அமைந்துள்ளது.

# பொருளடக்கம்

# 1. இலக்கியச் சுவை

பரந்துபட்ட தமிழ் இலக்கியம் என்னும் பரவையினுள்ளே சங்க மிருந்து தமிழாராய்ந்த நல்லியற் புலவர் வகுத்தமைத்த பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும், பதினெண் கீழ்க் கணக்கு என்பனவும், பின்னரெழுந்த சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சூளாமணி, நீலகேசி என்பனவும், கொங்கு வேண்மாக்கதையும், மூவர் தமிழும், திருவாசகமும், திருக்கோவையாரும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்த மும், பெரிய புராணம், இராமாவதாரம், கந்தபுராணம், வில்லிபாரதம் என்பனவும், திருவிளையாடற்புராண மிரண்டும் ஆரியப்பப்புலவர் பாகவதமும், காசி காண்டமும், நைடதமும், இரகுவமிசமும், தேம்பா வணியும், சீறுபுராணமும், இரக்ஷணிய யாத்திரிகமும் சிறு பிரபந்தங்க ளென நின்றவற்றுள்ளே குமரகுருபரரும், சிவப்பிரகாசரும், மீனாட்சி சுந்தரரும், சுப்பிரமணிய பாரதியாரும் வகுத்தமைத்தனவும் தமிழ் மாணவராலே பயிலப்பட்டு வருகின்றன. இவையாவும் செய்யுள் நடை இலக்கியங்கள். உரைநடை இலக்கியங்கள் தமிழில் அருகி நடப்பன; நக்கீரனார் கண்ட களவியலுரையும், பரிமேலழகியாரீந்த திருவள்ளுவரு ரையும், நக்கினார்க்கினியருவந்தளித்த சிந்தாமணி உரையும், அடியார்க்கு நல்லார் வழங்கிய சிலப்பதிகார உரையும், பெரியவாச்சான் பிள்ளையுதவிய பிரபந்த உரையும், ஆறுமுக நாவலர் அன்பினோடருளிய பெரிய புராண வசனம், திருவிளையாடற்புராணவசனம் என்பனவும், இந்நாளிலே தமிழுக்கு வரம்பாகித் தென்றிசைக் கலைச் செல்வர், பெரும் பேராசிரியர், எழுத்தறிபுலவர் என உலகு புகழ நீடுநின்று தமிழ்த் தொண் டாற்றிவரும் சாமிநாதனாரருளிய மீனாக்ஷி சுந்தரர் சரிதம், உதயணன் கதை, பௌத்த தர்ம சங்கம் என்பனவும் சிந்தாமணி, சிலப்பதிகார, மணிமேகலைக் கதைச் சுருக்கங்களும் உரைநடை இலக்கியங்களாகி நிலவுகின்றன.

இலக்கியம் இவையெனக் கண்டாம். இனி இலக்கியச் சுவையாவது யாது? அச்சுவையி லீடுபடுவதற்கு வேண்டிய மனப்பழக்கம் யாது? இலக்கியங் கற்றற்கு இயைந்த கருவிகள் யாவை? என்றின்னோரன்ன

---

*1939-ஆம் ஆண்டு கல்முனை நகரத்திலே நடைபெற்ற ஆசிரியர் விடுமுறைக் கழகத்தினுக்குத் தலைமைதாங்கி அடிகளார் 'இலக்கியம் கற்றலும் இலக்கியச்சுவையில் ஈடுபடலும்' என்பதுபற்றி ஆற்றிய இலக்கிய நயச் சொற்பொழிவு.*

வினுக்களுக் கெல்லாம் விடையிறுத்தல் வேண்டும். கற்று வல்ல ஆசிரியர் கழகத்தின் முன்னிலையிலே குறைமொழி உரைப்பினும் சார்பு நலம்பற்றி நிறைமொழியாகக் கொள்ளப்படு மென்னுந் துணிவினேடு ஒரு சில கூறத் துணிந்தேன். ஆசிரியத் தொழிலுக்கு மனநூற்பயிற்சி இன்றியமையாத சாதனமாகுமன்றோ? ஆதலினலே முதற்கண் மன நூலாருழைச் சென்று அவர் அரிதிற் கண்டுணர்ந்த ஒரு சில முடிபுகளைப் பெறுதல் இன்றியமையாத தாயிற்று. மனமானது வெளிப்பட்டுத் தோன்றுமிடத்து அறிவு, இச்சை, துணிவு என முத்திறப்பட்டு நிற்குமென்பது மனநூலார் கண்ட முடிபு. அறிதல், இச்சித்தல், துணிதல் என்னும் முத்திறச் செயலும் தெளிவு, இனிமை, உறுதி என்னுங் குணங்களை அளாவிநிற்பன. இவை முறையே உண்மை, அழகு, நன்மை யென்னும் குணிகளைச் சார்வன.

உண்மை உணர்த்தும்நூல்கள், பூத பௌதிக விஞ்ஞான நூல்களும், தருக்க நியாய தத்துவ நூல்களும்; அழகு உணர்த்துவ, இசையோவிய நூல்கள்; நன்மையுணர்த்துவ, அற நூல்கள்; உண்மை, அழகு, நன்மை யாகிய அனைத்தும் உணர்த்துவ, நல்லிசைப் புலவரளித்த இலக்கிய நூல்கள்; இவை செய்யுள் எனப்படும்.

ஏனைய கலைத்துறைகள் உள்ளத்தின் ஒவ்வொரு திறத்தினைப் பற்றி நிற்கச் செய்யுள் மாத்திரம் உள்ளம் முழுவதையும் பற்றிநிற்கும்; ஆதலினலே மதிப்பிடற்கரியதொரு நிறைவினையும் மலர்ச்சியையும் உள்ளத்திற்கு அளிக்கும். இந்நலத்தினை நல்லியற் புலவர் செய்யுளில் வைத்துக்காட்டுதல் மேற்கொள்வாம். பலப்பல இலக்கிய நூலினுட் புகுதற்குப் போதுகாணுதாதலினலே, வில்லியாரதம் ஒன்றினையே எடுத்துக்கொள்வாம்.

பாரதத்திற்குக் காப்பியத் தலைவன்யாவன்? கண்ணபிரான் என்பாரும், அருச்சுனன் என்பாரும், உதிட்டிரன் என்பாரும், சுயோதனன் என்பாருந் தம்முள்ளே முரணி நிற்க, ஈண்டுக் குறிப்பிட்ட அனைவரையுந் தனது அன்பினுற் பிணித்த அங்கர்கோனுகிய கன்னன் காப்பியத் தலைவனுவா னென்பாரது கூற்று வலிமையுற்று நிற்கின்றது.

" பெண்மைக்கிரதி யென வந்த
பெண்ணு ரமுதே பேருலகி
லுண்மைக்கிவனே வலிக்கிவனே
யுறவுக்கிவனே யுரைக்கிவனே
திண்மைக்கிவனே நெறிக்கிவனே
தேசுக்கிவனே சிலைக்கிவனே
வண்மைக்கிவனே கன்னனெனு
மன்னன் கண்டாய் மற்றிவனே "

எனத் திரௌபதியின் செவிலித்தாயார் கூற்ருகக் கவி கூறுகின்ருர்.

"எத்தலங்களினு மீகையாலோகை வாகையாலெதிரிலாவீரன்" நாகாயுதத்தினை மறுகாலு மேவாது பார்த்தனது சரமாரிக்கிலக்காகி நின்ற வெல்லையிலே, முதல்வனுகிய கண்ணபிரான் வஞ்சவேதியன் வடிவங் கொண்டுவந்து, " வறுமையால்வாடினேன் இக்கணத்து எனக்கு இயைந்த தொன்று அளிப்பா " யென இரந்து நின்ருன்.

" என்று கொண்டந்த வந்தண னுரைப்ப
விருசெவிக் கமுதெனக் கேட்டு
வென்றி கொள் விசயவெங்க ணையால்
மெய்தளர்ந் திரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துத் தரத்தகு பொருணீ
நவில்கென நான்மறை யவனும்
ஒன்றிய படிநின் புண்ணிய மனைத்தும்
உதவுகென் றலுமுள மகிழ்ந்தான். "

" ஆவியோநிலையிற் கலங்கிய தியாக்கை
அகத்ததோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெலா நயக்கும்
பக்குவந் தன்னில்வந் திலையால்
ஒவிலாதியான் செய் புண்ணிய மனைத்தும்
உதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வா ழயனு நிகரல னென்ருற்
புண்ணிய மிதனினும் பெரிதோ. "

" என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
இறைஞ்சலர்ச் கெழிலியே றனையான்
கன்னனை யுவகைக் கருத்தினு னேக்கிக்
கைப்புன லுடன்தரு கென்ன
அன்னவ னிதயத் தம்பின்வா யம்பா
லளித்தலு மங்கையா லேற்ருன்
முன்னமோ ரவுணன் செங்கைநீ ரேற்று
மூவுல குமுடன் கவர்ந்தோன். "

குருக்கேத்திரப்போர்க்களத்திலே போர் தொடங்கிய பதினேழா நாளன்று நடந்த இத்தெய்வக் காட்சியை அகக் கண்ணுல் நோக்குவோ மாக. பொழுது மேற்றிசையிலே இரண்டு விற்கிடை உயரத்திலே நிற்கிறது. சூரியனது பொன் போன்ற கிரணங்கள் புதல்வனது ஆகத்தினை மெல்லெனத் தழுவி நிற்கின்றன. அருச்சுனனது ஆயிரம் அம்புகள் துளைத்த துளைகளினின்றும் பாய்கின்ற செங்குருதி, சூரிய

குமாரனது உடலத்திலே ஆயிரங் கிரணங்கள் போலத் திகழுகின்றது. இரு பெரு வீரர்களது ரதத்திற் பூட்டிய குதிரைகளும் செயலற்று நிற்கின்றன. கண்ணபிரான் விசயனைச் ''செருவொழிதி'' யெனக் கையமர்த்திக் கன்னனை நோக்கி வருகின்றான். வேதியன் வடிவமாக வந்த கண்ணபிரான் இரத்தலும் கன்னன் இதயத்திற் பாய்ந்து கிடந்த அம்பினை வாங்கி அங்குப்பாய்ந்த செந்நீரே நீராகத் தான்புரிந்த புண்ணியமனைத்தினையுந் தானஞ் செய்கிறான். பெற்ற கண்ணபிரானாகிய வேதியன் ''வேண்டிய வரங்கேள்'' என்கின்றான்: இது கேட்ட கன்னன்,

'' இல்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா
விதயநீ அளித்தருள் ''

என்கின்றான். கருணை வள்ளலாகிய கண்ணபிரான் உளமுருகிக் கண்களினின்று சொரிந்த நீரினாலே கன்னனை நீராட்டித் தனது தெய்வ வடிவோடு அவன் கண்களிக்கக் காட்சியளிக்கின்றான்.

'' சமரமா முனையிற் றனஞ்சயன் கணையாற்
சாய்ந்துயிர் வீடவுஞ் செங்கண்
அமலநா ரணனைக் காணவும் பெற்றேன் ''

எனக் கூறிக் கன்னன் அகமகிழ்கின்றான். பின்னும் அவன் கண்ண பிரானை நோக்கி,

'' தருமன்மகன் முதலான அரிய காதற்
றம்பியரோ டமர்மலைந்து தறுகணாண்மைச்
செருவிலென துயிரனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் தேவர்கோவுக்
குரைபெறுநற் கவசமுங்குண் டலமு மீந்தேன்
உற்றபெரு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளுஞ் செங்கண் மாலே
மாதவத்தா லொருதமியன் வாழ்ந்தவாறே ''

எனக் கூறுகின்றான். இவ்வெல்லையிலே தாயாகிய குந்திதேவி போர்க் களத்தினை யடைந்து, இறந்து படுகின்ற கன்னனை மார்புறத் தழுவி,

'' ஓரைஞ்சு பேருளரா லறந்த வாத
உதிட்டிரனா தியருரகக் கொடியோனாதி
யீரைஞ்சு பதின்மருளர் தம்பி மார்கள்
இங்கிதங்க ளறிந்தடைவே யேவல்செய்யப்
பாரஞ்சு மொருகுடைக்கீழ் நீயே யாளும்
பதமடைந்தும் விதிவலியாற் பயன்பெ றாமற்
காரஞ்சு கரதலத்தா யந்தோ வந்தோ
கடவுளர்தம் மாயையினாற் கழிவுற்றாயே ''

எனக்கூறி அழுதரற்றுகின்ருள். இத்தகையதோர் காட்சியினை ஹோமர் எழுதிய வீரகாவியங்களிலும் காண்டலரிது. மனமெனும் இந்திர மாஞாலத் தேரிலேறிக் கால வெல்லையையுந் தேச வெல்லையையுங் கடந்து தீர்த்த யாத்திரை புரியும் அருச்சுனன் என்னும் தவசியுடனே பாண்டி நாட்டின் தலை நகரமாகிய மதுரைக்கணித்தாயுள்ள ஒரு பூஞ்சோலையை அடைவோமாக.

'' குன்றிலிள வாடைவரும் பொழுதெல்லா
மலர்ந்ததிருக் கொன்றை நாறத்
தென்றல்வரும் பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின்
மணநாறுஞ் செல்வவீதி. ''

பலப் பலவாக அமைந்த மதுரை மாநகரினைக் காக்கும் பாண்டிய மன்னன் மகள்,

'' சோதியரிச் சிலம்பரற்றத் துணைநெடுங்கண்
செவியளப்பத் தொடித் தோள்வீசி
ஆதியர விந்தையென''

விளையாடற்கு ஆங்கு வருகின்ருள். அவளது,

'' பச்சென்ற திருமுகமுஞ் சேயிதழும்
வெண்ணகையும் பார்வை யென்னு
நச்சம்பு மமுதூற நவிற்றுகின்ற
மடமொழியு நாணும் பூணும்
கச்சின்கணடங்காத கனதனமு
நுண்ணிடையும் ''

பார்த்தனது மனத்தினைக் கொள்ளை கொள்ளுகின்றன.

'' வண்டானந் திரிதடத்து வரிவண்டி
னினம்பாட மயில்களாடத்
தண்டார்மெய்க் கிளிக்கூட்டஞ் சான்ருேர்க
ளுரைபயிற்றத் தமிழ்கண் மூன்றும்
கொண்டாடி யிளம்பூவைக் குழாந்தலைசாய்ந்
துளமுருகுங் குன்றி னுங்கட்
கண்டாளக் குமரனைத்தங் கொடிக்கயலைப்
புறங்காணும் கண்ணினுளே. ''

"செந்திருவை யனையாளுந் திருமாலை
யனையானுஞ் சிந்தை யொன்றாய்
வந்திருவர் விலோசனமுந் தடையின்றி
யுறவாடி மகிழ்ச்சி கூர்ந்து
வெந்துருவ மிழந்தமதன் மீளவும்வந்
திரதியுடன் மேவு மாபோற்
கந்தருவ முறைமையினூற் கடவுளர்க்குங்
கிடையாத காமந் துய்த்தார்."

ஆங்கது நிகழ்ந்த பின்னர் அரசன் தனது புதல்வியது குறிப்பினையறிந்து மணவினைக்கு வேண்டுவ புரிந்தான்.

"கோமடந்தை களிகூரப் புகழ்மடந்தை
களிகூரக் கொற்ற விந்தை
மாமடந்தை களிகூர மணவினை யொப்
பனைக்குரிய மடந்தை மார்கள்
பூமடந்தை யனையாளைப் பூட்டியவெண்
தரளமணிப் பூண்களாலே
நாமடந்தை நிகராக்கி நாயகன்றன்
வலப்பாக நண்ணுவித்தார்."

மணவினை நிகழ்ந்த பின்னர் ஒத்த காதலராகிய அவ்விருவரும்,

"நோக்கியகண் ணிமையாம ஞேக்கி நோக்கி
நுண்ணியமென் புலவியிலே நொந்து நொந்து
தேக்கியசெங் கனியிதழா ரமுதுண் டுண்டு
சேர்த்தியகைந் நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து
தூக்கியபொற் றுலையினது ராக மேன்மேற்
றொடரவரும் பெரும்போகந் துய்த்தார் முன்னைப்
பாக்கியம்வந் திருவருக்கும் பலித்த தல்லாற்
பாயனலத்திப் படியார் பயன்பெற் றாரே"

எனக் கவி கூறிச் செல்கிறூர்,

இனிப் போர்க்களத்திலும், பூஞ்சோலையிலும் யாம் கண்ட காட்சிகளை ஒப்ப வைத்து நோக்கி இலக்கியச் சுவை எத்தகையது என ஆராயப் புகுவாம்.

போர்க்களத்திலே பெருமிதச் சுவை தலையாய சுவையாகி நிற்கும். செயற்கருஞ் செயல்களைக் கண்டு இறும்பூதெய்தும். உள்ளத்திலே மருட்கை யென்னுஞ் சுவைதோன்றும். எள்ளி நகைக்கின்ற நகையும்,

அசைவு கண்டிரங்கும் அவலமும், பகைமேற் செல்லும் வெகுளியும், இகழ்ந்துரைபாடும் இளிவரலும், அஞ்சத்தக்கனகண்டுழி நிகழும் அச்சமும், வெற்றியாலெய்திய உவகையும், என ஏனைய சுவைகளும் போர்க்களத்திலே தோன்றுதற்குரிய.

பூஞ்சோலைக் காட்சியினுள்ளே ''காதலிருவர் கருத்தொப்ப ஆதரவு பட்ட உவகையும்'' இனிய நகையும், வியப்பின் பாலதாகிய மருட்கையும், பிரிவு நோக்கிய அச்சமும், பிரிவாலெய்திய அவலமும், பெருவரவின் பொருள் குறித்தெழுந்த சுவையினுல் மாத்திர மன்று. பாவினகத்து எழுத்துக்கள் அமைந்து நின்ற தாலவிகற்பங்களினுலும் கவிஞர் தமது உள்ளக் குறிப்பினை வெளிப்படுத்துவர்.

''வளவன்பதி முதலாக வயங்கும்பதி தோறும்
துளவங்கம ழதிசீதள தோயங்கள் படிந்தே
இளவண்டமி ழெழுதேடுமுன் னெதிரேறிய துறைசூழ்
தளவங்கமழ் புறவஞ்செறி தண்கூடல்புகுந்தான்''

என்னும் செய்யுளின் பின்,

''குன்றிலிளவாடை வரும்பொழுதெல்லாம்'' என்னுஞ் செய்யுள் வருகிறது. இடையின வெழுத்துப் பயின்று மெல்லென்று நீர்மையாகி நிற்கும், ''துளவங்கம ழதிசீதள தோயம்'', ''இளவண்டமி ழெழு தேடு'', ''தளவங் கமழ் புறவம்'' என்னும் சொற்றுடர்களின் நயத்தை நோக்குக.

தண்ணென்னும் நீர்த்துறையினையும், முல்லைமலர்களின் நகையினை யுங்கண்டு இறும்பூதெய்தி நிற்பேமிடையே இளவாடைக் காற்றும், மலயத்துதித்த மந்தமாருதமும் வருதல் போல அடுத்த செய்யுள் வருகின்றது.

தனதந்தன தனதந்தன தனதந்தன தான என்னுஞ் சந்தத்தின் பின்னர் தந்தான தனதான தனதந்த தனதான தனனதான ''வண்டா னந்திரி பொழிலில் வரிவண்டினினம்பாட மயில்களாட'' என்னுஞ் சந்தந் தோன்றித் தென்றற் காற்றினையும், வசந்த காலத்தையும் நினைவூட்டி உவகையளிக்கின்றது.

பதினெட்டாம் போர்ச்சருக்கத்திலே துரியோதனனும் வீமனும் கதாயுத்தஞ் செய்யும் வேளையிலே வீமன்மரபு தவறித் துரியோதனனைத் தொடையிலடித்ததைக் கண்ட பலராமன் வெகுண்டெழுதலையும், கண்ணபிரான் இடை நின்று விலக்குதலையும் கூறுகின்ற பாகத்திலே

செயல் விரைவினை நோக்கிச் சந்தமானது ஒவ்வொரு பாடலிலும் விகற்பித்துச் செல்வது உளங் கொண்டு உவப்புறு நீர்மையது.

1. தந்த தானன தானன தானன
2. தனதனத் தனத்த தானதன
3. தனனதன தான தானன தானன
4. தனனு தனனு தனனு தனனு
5. தந்தன தனன தனன தானன
6. தத்த தனதன தத்தன தானன
7. தந்த தானன தானன தானன
8. தனதந்த தானன தான்ன தானன
9. தான தனனதன தானதன தானதன
10. தனன தனனதன தந்த தானன
11. தனத்தன தனத்தன தானன தானன
12. தனதன தனத்தன தந்த தானந்தன
13. தனத னத்தன தனதன தானன
14. தானன தனந்தன தனன தானு தனன

என வேறுபட்ட சந்தங்களினுலே அப்பாடல்கள் நடக்கின்றன.

இனி, ''நோக்கிய கண்ணிமையாமல்'' என்னும் செய்யுளினுள்ளே ''நோக்கி நோக்கி'' ''நொந்து தொந்து'' ''உண்டு உண்டு'' ''சேர்ந்து சேர்ந்து'' என்னும் மடக்குகள் எத்துணை யழகொடு பொருந்தி நிற்கின்றன!

''கோமடந்தை களிகூர'' என்னுஞ் செய்யுளிலமைந்த மடக்கினையும் நோக்குக.

''கண்ணினுஞ் செவியினுந் நுண்ணிதினுணரும் உணர்வுடைய மாந்த'' ராகிய கவிகளுக்கு இயற்கையிலுள்ள அற்புதக் காட்சிகள் தத்தங் கருத்தினை வெளியிட்டுரைக்கும். திரௌபதியினது சுயம்வர மண்டபத்தினை நாடிப் பஞ்சபாண்டவர் செல்கின்றனர். இளவேனிற் காலத்துக் குயிலினேசை அவர் செவிப்படுகின்றது. அக்குயில் என்ன செய்தியுரைத்தது என்னுமுண்மை கவிக்குப் புலப்படுகின்றது.

''மாக்குர லளக வல்லி வதுவையி னழகு காணத்
தாக்குர லடிகொள் யானைத் தரணிப ரெவரும் வந்தார்
வீக்குகள் மிளிர்பொற் பூணீர்! விரைவுடன் வம்மி னென்று
கூக்குரல் விளிப்ப போலுங் கோகிலக் குரலுங் கேட்டார்.''

ஓசையும் சுவையும் ஒத்து நடப்பதற்கு எடுத்துக் காட்டாக இச்செய்யு ளையும் நோக்குக.

'' பூபால ரவையத்து முற்பூசை
பெறுவார் புறங்கானில் வாழ்
கோபால ரோவென் றுருத்தங்
கதித்துக் கொதித் தோதினன்
காபாலி முனியாத வெங்காம
னிகரான கவினெய்தி யேழ்
தீபால டங்காத புகழ்வீர
கயமன்ன சிசுபால னே. ''

இதன் கணமைந்த வெகுளிச்சுவையை நோக்குக.

''உருத்தங்கதித்துக் கொதித்தோதினன்'' என வல்லொற்று மிக்கு வருவது இச்சுவைக்கு மிகப் பொருத்தமுடையதாகும்.

'' வாரடாவுனக் கியாதுதா னர்தம்
மகளடுக்குமோ வானமாதர் தோள்
சேரடாமலேந் துயிரை மெய்யினைத்
தின்று தேவரூர்சேரு விப்பன்யான்
போரடா துன்னோடாளி யேறுபுன்
பூனைதன்னுடன் பொரநினைக்குமோ
பாரடாவெ னுண்மையை யரக்கர்கைப்
பட்டபோதில் யார்பாரில் வைகினர். ''

இடும்பன் கூற்றாகிய இப்பாடலினும் வல்லொற்று மிக்கு வருதலை நோக்குக.

'' கரியணிக்குளெக் கரிகள்புண்படா
கடவுதேரிலெத் தேர்கலக்குறா
பரியணிக்குளெப் பரிதுணிப்புறா
பாகர்தம்மிலெப் பாகர்வீழ்கலார்
நரனும்வெற்றிகூர் வசவுமுற்றபோர்
நவிலுகிற்கினும் நாநடுங்குமால்
இருதளத்தினும் இருவரம்பினும்
ஏவுறுதபே ரெந்தமன்னரே ''

என்னுஞ் செய்யுளை நோக்குக.

வாளபிமன்னு பட்டபின்னர் கடோற்கஜன் கூறிய இவ்வுரையை நோக்குக.

“ இருவரெதி ரெதிர்த்தம்மி லிகல்பொருத
ஓலகியற்கை யாருங் கூடிப்
பருவமுருத் தனிக்குதலைப் பாலகனுக்
காற்ருமற் பறந்து போனீர்
ஒருவனெடுந் தேரளிக்க ஒருவன்மலர்க்
கைதுணிக்க ஒருவன் பின்னைப்
பொருவனென அறைகூவிப் பொன்றுவித்தா
னிதுகொண்டோ புகல்கின் றீரே. ”

“ வரைக்குவமை பெறுதடந்தோள் வீமன்மக
னிப்படியே மதியா ஞகி
உரைக்குமொழி கேட்டிருந்த வுரகமணி
கொடிவேந்த னுருத்து நோக்கி
இருக்குமெழி லவைக்கேற்ப வியம்பாமற்
றன்மதத்தா லியம்பு கின்ற
அரக்கிமக னுடனென்று கழறேலென்
றனனிருந்த வரசர் யார்க்கும் ”

“ அந்தவுரை மீண்டவன்கேட் டாங்கவனே
னகைத்துரைப்பா னரக்க ரேனுஞ்
சிந்தனையில் விரகெண்ணுர் செருமுகத்தில்
வஞ்சகமுஞ் செய்யா ரையா
வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார்
நிரைக்கழுவில் வீழச் செய்யார்
உந்துபுன லிடைப்புதையா ரோரூரி
லிருப்பகற்ரு ருரையுந்தப்பார். ”

“ செழுந்தழல்வாழ் மனைக்கொளுவார் செய்ந்நன்றி
கொன்றறியார் தீங்கு பூணுர்
அழுந்துமனத் தழுக்குரு ரச்சமற்
றருளின்றிப் பொய்ச்சூ தாடார்
கொழுந்தியரைத் துகிலுரியார் கொடுங்கான
மடைவித்துக் கொல்ல வெண்ணுர்
எழுந்தமரின் முதுகிடா ரிவையெல்லா
மடிகளுக்கே யேற்ப வென்றுன். ”

இப்பாடலிலே நகையும் இளிவரலும் தோன்றி நின்றன.

“நின்றனையே யெனைக்காத்து நீயேகென்
றியானுரைப்ப நெடுந்தே ரூர்ந்து
சென்றனையே யிமைப்பொழிதிற் றிகிரியையு
முடைத்தனையே தெவ்வ ரோட
வென்றனையே சுயோதனன்றன் மகவுடனே
மகவனைத்தும் விடங்கா லம்பிற்
கொன்றனையே நின்னுண்மை மீண்டுரைக்கக்
கூசினையோ குமர ரேறே.”

இதனுள் அவலச்சுவை தோன்றுகின்றது. மன்னைக் காஞ்சிச் செய்யுள்ளே ‘ஙகரமெய்’ பெருவரவிற்றுதலை நோக்குக.

“அஞ்சின மஞ்சின மென்றுவி ரைந்துய
ரண்டர்ப ணிந்திடவுந்
துஞ்சின மின்றென வன்பணி யின்கிளை
துன்பமு ழந்திடவும்
வஞ்சமனங்கொடு வஞ்சக னின்றிடு
வஞ்சனை நன்றிதெனு
நெஞ்சில்வெ குண்டுல கொன்றுப டும்படி
நன்றுநி மிர்ந்தனனே.”

முன்னிரண்டடியிலும் அச்சச்சுவை; பின்னிரண்டடியிலும் வெகுளிச் சுவை. வில்லி பாரதத்தினை இந்நாளில் யாம் மறந்திருக்கின்றோம். ஒரு காலத்தில் மட்டக்களப்பிலே வில்லிபாரதமானது கோயில்களிலே படித்துப் பயன் சொல்லும் நூலாக இருந்தது. ஆசிரிய வகுப்புக்கும் அஃது இன்றியமையாத பாடமாயிருந்தது. சங்கநூல்கள், காப்பியங்கள், இராமாயணம், கந்தபுராணம், பெரிய புராணம் என்றிவற்றைப் படிப்பதற்குமுன் மாணவர்கள் பாரதத்திற் பயிலலாம். அப்பயிற்சி மேலிலக்கியக் கல்விக்குச் சிறந்த அஸ்திபாரமாகும். இலக்கணச் சுருக்கமும் ஒரு சில கீழ்க்கணக்கு நூல்களும் பயின்றபின் பாரதத்தை எடுத்துக் கொள்ளலாம்.

சந்தச் செய்யுட்களைச் செம்மையாக வாசிப்பதற்கு ஒரு சிறிது சந்த விருத்தத்தின் இலக்கணத்தை அறிந்திருக்க வேண்டும். தனதான, தத்த, தந்த எனச் சந்தக்குறிப்புகளை எழுதப்பயின்று கொண்டாற் போதும். தெளிவுபெற வாசிக்க வேண்டும்; ஓசைக்காக ஒரு முறையும், பொருளுக்காக மற்றொரு முறையும் வாசிக்கலாம். செய்யுளிற் குறிப்பிட்ட இடங்கள், மக்கள், சந்தர்ப்பம், நிகழ்ச்சி என்றிவற்றை அகக்கண்ணானோக்குதல் வேண்டும், செய்யுளிற் குறிப்பிட்ட பேச்சு, ஓசை என்னும் இவற்றை அகக்காதினாற் கேட்க வேண்டும். சுவையோடு கூடிய மெய்ப்பாடு வாசிப்போரது உடலத்தில் ஒரு சிறிது தோற்றுதல் வேண்டும். உயர் குணங்களையும் செயற்கருஞ்

செயல்களையும் நோக்கி உள்ளமானது உருகுதல் வேண்டும். கவிநுண்ணிதினமைத்து வைத்த அரும்பொருளின் செவ்வியை ஆழ்ந்து நோக்கிப் பாராட்டுதல் வேண்டும். சுருங்கக் கூறுமிடத்து உள்ளத்தின் முத்திறமாகிய அறிவு, இச்சை, துணிவு என்பன தெளிவு, இனிமை உறுதி யென்னுங் குணங்களை மருவி, உண்மை, அழகு, நன்மை யென்னு மிவற்றிலீடுபட்டு நிற்க, கண்ணுஞ் செவியுமானந்தமுறக் கண்டுங் கேட்டும் இறும்பூதெய்த உடல் செயலற்றுப் பரவசப்பட்டு நிற்கும் எல்லையிலே வானவர் நாட்டின்பம் ஓரளவிற்கு வந்தெய்தும். ஆங்கது பற்றியன்றோ ''தேவரனையர் புலவர்'' என ஆன்றோர் கூறினர். ''வண்டானந்திரி தடத்து'' என்னும் பாடலினை ஆராய்வாம்.

நமது அகக்கண் முன்னே ஓர் அழகிய மலையும் மரங்களடர்ந்த இளஞ் சோலையும், அகன்ற தடாக மொன்றுங் காணப்படுகின்றன. சோலையகத்து இளமயில்கள் ஆடுகின்றன. தடாகத்திலே வெள்ளிய சிறையை உடைய நீர்ப்பறவைகள் திரிகின்றன. அலர்ந்த செந்தாமரை மலர்மீது ரீங்காரம் செய்யும் வண்டினம் படிகின்றன. மரக்கிளைகளிலே கிளிகளும், நாகணவாய்ப் புட்களும் காணப்படுகின்றன. இவ்வழகிடையே வனப்புமிக்க ஆடவனொருவனும் மடவரலொருத்தியும், ஒருவரை யொருவர் வியப்போடு நோக்குகின்றனர். இம் மடவரலது கண்கள் கயல் மீனினை வென்ற தோற்றத்தையுடையன. இக்காட்சியினாலே பற்றப்பட்ட அகக்கண் பிறிதொன்றினை நோக்காது, குறித்த காட்சியிலே படிந்துகிடக்கின்றது. வண்டுகளினது ரீங்காரவோசையும், கிளிகளும் நாகணவாய்களும் மொழியும் தமிழினோசையும், மந்தமாருதத்தின் மெல்லென்ற ஓசையும், மலையினின்று விழுகின்ற அருவியினோசையோடு கலந்து அகச் செவியை நிறைக்கின்றன. கிளியும், நாகணவாயும் சான்றோருரையினையும், முத்தமிழினையும் விளம்புகின்றன என்றமையினாலே, பாண்டிநாடு தமிழுக்கு உறையுள் என்பதும், சான்றோர் வாழும்பழம்பதி என்பதும் உய்த்துணர வைக்கப்பட்டது. ''தங்கொடிக் கயலைப் புறங்காணும் கண்ணினாள்'' என்றமையினாலே, ஆங்குத் தோற்றிய மேதகவுடையாள் பாண்டிய மன்னனது செல்வப் புதல்வி யென்பதும் அக்குமரன் என்றமையின் முருகனனைய வனப்பினையுடையான் அவ்விளைஞ ரேறுஎன்பதும் பெறப்பட்டது இவ்விருவரது உள்ளமும் ஒரு வழிப்பட்டு நின்றமையைக் கண்கள் தடையின்றிக் காட்டினமையின் இவர்தமது நோக்குப் பொதுநோக்கன்று; அன்பு நோக்கென்பது பெறப்பட்டது. உயர் குலத்துதித்தாராதலினாலே நிறையழிந்து ஒருவரை யொருவர் தீண்டினாரல்லர். இவர் தம் கண்ணிணைகள் உறவாட இருவர் மனமும் ஒருமித்தன வென்பது. என்றிவ்வழி யாராயுமிடத்து இச் செய்யுளிலமைந்து கிடந்த தெளிவும், இனிமையும், உறுதிப்பாடும் உள்ளத்தை நிறைத்து மகிழ்ச்சியைத் தருகின்றன. இதுவே இலக்கியச் சுவையிலீடுபடுதலாகும்.

# 2. ஐயமும் அழகும்

காட்சிக்கும் துணிவுக்கும் இடையே ஐயம் நிகழும். காட்சி ஐம்புலவாயிலாக எய்தும் உணர்வு. துணிவு, 'யாதொரு பொருள் யாதோரியல்பிற்றுய்த் தோன்றினும், அத்தோன்றிய வாற்றைக் கண்டொழியாது அப்பொருளின் கண் நின்று மெய்யாகிய பொருளைக் காணும் மெய்யுணர்வு'. ஆதலின், ஐயத்தினீங்கித் தெளிந்தாரான் எய்துதற்குரியது. அளவினுல் எல்லைப்பட்ட பொருளினைக் கண்ணுற்றேன், ஒரு நோக்கோடு அமைவான்; நோக்குந்தோறும் நோக்குந்தோறும் புதிய புதிய அழகினைத் தோற்றுவிக்கும் ஒரு பொருள் கண்ணெதிர்ப்படுமாயின், அதனைக் கண்டோன், ' நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி' அப்பொருளின் காட்சி நலனைத் துய்த்தற்கு முயல்வான்; இம்முயற்சியே ஐயவுணர்வினுக்கு அடிப்படையாயிற்று. ஆதலினுலே, ஈண்டு நாம் ஆராயும் காட்சி, ஐயம் என்னும் இரண்டினுள்ளும், காட்சியினும் ஐயம்சிறப்புடையதென்று அறிதல் வேண்டும்.

ஐயமானது வியப்பு எனவும் மருட்கையெனவும் தமிழ் நூலார் வகுத்துக் கூறிய அற்புத ரசத்தினைச் சார்ந்து வருவது.

'' ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
வருவகை தானே வழக்கென மொழிப ''

என ஆசிரியர் தொல்காப்பியனுரும்,

'' ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே ''

எனப் பிற்காலத்தாரும் கூறிய விதி சொல்லிலக்கணத்திற்குப் போலவே பொருளிலக்கணத்திற்கும் பொருந்துவது. அங்ஙனமாதலின் கைக்கிளைத் திணை, ஐந்திணை, பெருந்திணையென ஆன்றோர் வகுத்துக் கூறிய அகத்திணை யொழுக்கமானது, ஆடவன் ஒருவனுக்கும் மடவரல் ஒருத்திக்கும் இடையே நிகழ்ந்த காமக் கூட்டத்தின்வழிப் பிறந்த அன்பு ஒன்றினையே சிறப்பித்துக் கூறுவது என்பதனேடமையாது, ஆங்கு அஃது இன்பப்பகுதியவாய அன்பு நெறியனைத்தினுக்கும் பொது விலக்கணமாமெனக் கொள்வது பொருத்தமாகும்.

---

செந்தமிழ் : தொகுதி 38. (1940) பசகம் 29-34.

''அன்பினைந்திணை'' என ஆலவாயில் அவிர்சடைக்கடவுளும்,

'' இன்பமும் பொருளும் அறனு மென்றுங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை ''

என ஆசிரியர் தொல்காப்பியனாரும் கூறினமையின், இன்பப் பகுதி அன்பினொடு ஒன்றி நிற்பது என அறிந்து கொண்டாம்.

'' எல்லா வுயிர்க்கும் இன்ப மென்பது
தானமர்ந்து வரூஉ மேவற் றாகும் ''

என்றமையின், அறமும் பொருளும் மக்கட்கே சிறப்பாகவுரிய என்பதும், இன்பமோவெனின் மக்களும், தேவரும், நரகரும், மாவும், புள்ளும், மரனுமாகிய அனைத்துயிர்க்கும் பொதுவாக அமைந்ததென்பதும் தெளிவாகிறது. ஆதலினாலே, இவ்வுயிரனைத்தும் அன்பு செய்தற்கும் உரியவென அறிதல் வேண்டும்.

நல்லிசைப்புலவர் யாத்தமைத்த கவியிலே ஈடுபட்டு நெஞ்சமுருகி இன்புறுவோன் அக்கவிதையின்பால் அன்பு செலுத்துகிறான். கவிதையை யாத்த புலவன், படிப்போருக்கு இன்பம் பயப்பது கருதியே யாத்தான். ஆதலின், படிப்போனுக்கும் படிக்கப்படும் கவிதைக்கும் இடையே அமைந்த தொடர்பு பெருந்திணை யன்று. கைக்கிளைத் திணையாமென்பது வெளிப்படை.

மலையும், கடலும், கானலும், கழியும், யாறும், பொழிலும், ஊரும், வயலும், செஞ்சுடர்ப்பரிதியும், தண்கதிர் மதியமும், நீல விசும்பும், விசும்பிலொளிரும் விண்மீனும், மழலைக்குழவியும் இளநகை மாதரும், அருந்திறல் மறவரும், பெருங்கொடை வீரரும் என நின்ற கவிதைப்பொருள்வயின் இயைந்து நின்று நெஞ்சமுருகும் செஞ்சொற்புலவன், அப்பொருள்வயின் அன்பு செலுத்துகிறான், அப்பொருட்பகுதியனைத்தும் அழகுடையவாதலின்.

இயற்கை என்னும் பெண்ணணங்கு தலைவியாக, அத்தலைவி யினது பேரழகிலே ஈடுபட்ட கவிஞன் காதலனாகின்றான். இயற்கை யணங்கும் புனைவன புனைந்தும், பூண்பன பூண்டும் அழகுவிளங்க நிற்பது, தனது காதலனாகிய கவிஞனைக் கருதியேயென அறிதல் வேண்டும், கவியுணர்ச்சியில்லா ஏனைய மாந்தர் இயற்கையணங்கின் அழகைக் காண்பதுமில்லை; காதலிப்பதுமில்லை. இங்ஙனம் நோக்கு மிடத்து, இயற்கைக்கும் புலவனுக்கும் இடையேயுள்ள தொடர்பு கைக்கிளைத் திணையின்பாற் படுவதென அறிகின்றோம்.

இவ்வாறு பொதுவாய் நிற்கும் இன்பம் பற்றிய அன்பினை நூன்முறையாக வகுத்துக் கூறப் புகுந்த ஆசிரியர் மிக்கதின்மேல் வைத்துக் கூறினரெனினும்,

" குழவி மருங்கினும் கிழவ தாகும் "
" ஊரோடு தோற்றமும் உரித்தென மொழிப "

எனக் கைக்கிளைப் புறனகிய பாடாண் பகுதியினுள்ளே பிறவற்றிற்கும் ஏற்றிக் கூறினர்.

ஐம்புல வுணர்வினைக் கூறும் பொருளியல் நூல்களுக்குக் *(Science)* காட்சி கருவியாகும். " நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி " இன்புறுதற்குரிய ஓவிய நூல், வட்டிகைச் செய்தி என்றித் தொடக்கத்தவாகிய அழகு நூல்களுக்கு *(Fine-arts)* ஐயம் கருவியாகும். துணிவு, தத்துவ ஞானம் என வடநூலார் கூறும் மெய்யுணர்வு நூல்களுக்குக் *(Philosophy)* கருவியானது.

ஐயத்தின் வழி அழகு பிறப்பதனை உணர்த்துவதற்கு ஆன்ருேர் செய்தளித்த அழகிய செய்யுட்கள் சிலவற்றை எடுத்துக் காட்டுவாம். பொழில் விளையாட்டு விருப்பினலே ஆயமகளிர் நீங்கத் தமியளாய் நின்ருள் ஒரு தலைமகள். அங்ஙனம், நின்ருளை வேட்ட விருப்பான் இளையார் நீங்கத் தமியனகிய தலைமகன் ஒருவன் வந்து கண்ணுறு கின்ருன். கண்ணுற்றகாலைத் தலைமகளது பெருவனப்புத் தலைமகனது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது.

" அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு "

என ஐயுறுகிருன். அவளது கண்களின் நோக்கம் இன்பமும் துன்பமும் ஒருங்கு நல்கி அளவிடப்படா நீர்மையதாதலின், அது " கூற்றமோ, கண்ணே, பிணையோ ? " என மீட்டும் ஐயுறுகிருன்.

" பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
திங்கண் முகத்திலங்கச் செவ்வாய் எயிறிலங்கக்
கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்கு
எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே "

விமலையாரது நோக்குப் பார்த்த இடமெங்கும் தோன்ருநின்றது; ஆதலின் அளவிடற்கரியதென ஐயுற்ற சீவக நம்பி, இன்பினையும் துன்பினையும் ஒருங்களிக்கும் அந்நோக்குப் பலப்பல பொருளுரு வாக வெளிப்படல் கண்டு,

'' வாளார் மதிமுகத்த வாளோ வடுப்பிளவோ
தாளார் கழுநீரோ நீலமோ தாமரையோ
நீள்வேலோ அம்போ கயலோ நெடுங்கண்ணோ
கோளார்ந்த கூற்றமோ கொல்வான் தொடங்கினவே''

என்கின்றான்.

'' அருணோக்கஞ் செய்தலிற் கண்ணே, கயலோ, வடுப்பிளவோ, கழுநீரோ, நீலமோ, தாமரையோ என்றற்கும் தக்கு, ஒருகாற் பொதுநோக்கமும் செய்து கொல்வான் தொடங்கின வாதலின், கூற்றமோ, வாளோ, வேலோ, அம்போவென்றற்கும் தக்கு இரு பகுதியும் உடையவராயிருந்தன வென்றான்.''

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்ளே தான் கண்ட பேரழகுடையாளைப் பன்முறை நோக்கிய காமுகன், '' ஈங்கே வருவாள் இவள் யார் கொல் ; வல்லவன் தைஇய பாவைகொல்; நல்லார் உறுப்பெல்லாங் கொண்டியற்றியாள் கொல்; வெறுப்பினால் வேண்டுருவங்கொண்டதோர் கூற்றங்கொல் ?'' என ஐயுறுகிறான்.

கங்கை மானிட மடந்தையாகி நிற்க, அவள் பேரெழிலில் ஈடுபட்ட சந்தனு

'' வையக மடந்தை கொல் வரைம டந்தை கொல்
செய்யபங் கயமலர்த் திரும டந்தைகொல்
துய்யவண் கலைவிதச் சொன்ம டந்தைகொல் ''

என ஐயுறுகின்றான்.

பதுமையைக் கண்ணுற்ற சீவகநம்பி,

'' வரையின் மங்கைகொல் வாங்கிருந் தூங்குநீர்த்
திரையின் செல்விகொல் தேமலர்ப் பாவைகொல்
உரையின் சாய லியக்கிகொல் யார்கொலிவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோளியே ''

என ஐயுறுகின்றான்.

''பதுமை முன்பு கண்டவளாயினும் வேட்கை மிகுதியான் ஐயம் நிகழ்ந்தது'' என உரையாசிரியர் கூறிச் செல்கின்றார்.

'' மானிளம் பிணையோ, தெய்வ
வளரிள முகையோ, வாசத்
தேனிளம் பதமோ, வேலைத்
திரையிளம் பவள வல்லிக்

கானிளங் கொடியோ, திங்கட்
கதிரிளங் கொழுந்தோ, காமன்
தானிளம் பருவங் கற்கும்
தனிஇளந் தனுவோ என்ன ''
'' நாடும்இன் பொற்பு வாய்ப்பு
நாளுநாள் வளர்ந்து பொங்க ''

என்னும் சேக்கிழார் சுவாமிகள் திருவாக்கினலே, அழகு புதிது புதிதாக வளர்ந்து பொங்குவது என்னும் உண்மை புலப்படு கிறது. தண்மதியம் என்றும் நிறைமதியாயிருக்குமாயின் ஞாயிற் றினும் குறைந்த ஒளியுடையதென இழித்தொதுக்கப்படும். பிறை யாய்த் தோன்றி வளர்தலின் புதுமையின் பாலதாகிய மருட்கைச் சுவையை நல்கி அழகுடைப் பொருளாயிற்று.

'' நவிற்றொறும் நூனயம் போலும் பயிற்றொறும்
பண்புடை யாளர் தொடர்பு ''

என்னும் குறட்பாவினுள்ளே நாயனர் இன்பந்தரும் நூல் நயத் தினையும் இன்பந்தரும் பண்புடையாளர் தொடர்பினையும் ஒருங்கு வைத்து அழகானது அளத்தற்கரியதாய்த் துய்க்குந்தோறும் துய்க்குந்தோறும் வளர்ந்து தோன்றும் நீர்மையினைக் காட்டினர்.

கற்பியலினுள்ளே தலைவியினது ஊடலானது பின்னர் அவள்பாற் பெறநின்ற நலத்தினுக்குப் புதுமை யளிப்பதாதலின், மதியத்தின் தேய்வுபோல் அழகு விளங்குவதற்கு அடிப்படை யாயிற்று.

பரவையாரின் பேரழகிலே ஈடுபட்ட தம்பிரான்றோழர்,

'' கற்பகத்தின் பூங்கொம்போ
காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ
அறியேன் ''

என்று வியந்து, மேலும்,

" ஓவியநான் முகனெழுத ஒண்ணுமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனுகி முன்னின்றது."

என்கின்ருர்.

பரவையாரும், பதியிலார் குலத்துப் பிறந்தவராதலின் உள்ளத்துதித்த வேட்கையானது நாண், மடம், அச்சம், பயிர்ப்பை வலித்தெழ,

" முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனே பெருகொளியால்
தன்னேரில் மாரனே
தார்மார்பின் விஞ்சையனே
மின்னேர்செஞ் சடையண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனே
என்னேஎன் மனந்திரித்த
இவன்யாரோ "

எனக் 'கண்கொள்ளாக் கவின் பொழிந்த திருமேனி' யழகில் ஈடுபட்டு மருட்கை யெய்துகின்ருர்.

அயோத்தி நகரென்னும் அணங்கின் பேரழகில் ஈடுபட்ட கவிச்சக்கரவர்த்தி,

" நிலமகண் முகமோ திலகமோ கண்ணே
நிறைநெடு மங்கல நாணே
இலகுபூண் முலேமே லாரமோ உயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ ஊழியினிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம் "

என மொழிகின்ருர்.

ஆன்ருேர் ஐயத்திணையின் பாலுரைத்த செய்யுட்களில் தன்மை, உவமை, உருவகம், தீவகம், பின்வருநிலே, வேற்றுப் பொருள் வைப்பு, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற்றம், நிரனிறை, ஆர்வமொழி, சுவை, ஒப்புமைக் கூட்டம் என்னும் செய்யுளணிகளியைந்து நிற்பதை ஆராய்ந்து காணலாம். ஈண்டு உரைப்பிற் பெருகும்.

# 3. வண்ணமும் வடிவும்

முன்னாளிலே, யவனபுரத்திலிருந்த சிற்பாசாரிகள் வெள்ளிய சலவைக் கல்லினைச் செதுக்கி, அழகிய உருவங்களை வகுத்தார்கள். அவ்வுருவங்களிற் சில மேனாட்டிலுள்ள காட்சிச்சாலைகளிலே, இன்றும் பார்ப்போர் கண்ணுக்கு உவகையளித்து நிற்கின்றன.

மிகப் பழைய காலத்திலே தமிழ் நாட்டிலிருந்த சிற்பநூல் வல்லார் வகுத்த உருவங்கள் நமக்குக் கிடைப்பதில்லை. அவ்வுருவங்கள் 'மண்ணீடு' எனப்பட்டன; மண்ணி (சுதையி)னாலும் மரத்தினாலும் இயற்றப்பட்டனவாதலின், இப்பெயர் பெற்றன. இவை தம்மை இயற்றிய சிற்பிகள் மண்ணீட்டாளர் எனப்பட்டார். இவரை ஓவியர் என்பதும் இவர்க்குரிய நூலினை ஓவியச் செந்நூல் என்பதும் பழைய வழக்கு.

இடைக்காலத்திலே நமது நாட்டிலே கருங்கல்லினாலே உருவங்களை அமைத்துக் கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. மதுரையிலும், தென்காசியிலும் பேரூரிலும் மற்றுமிடங்களிலும் கோயில் மண்டபங்களிலே அமைக்கப்பட்டிருக்கிற உருவங்கள் தமிழரது சிற்பவல்லமையைச் சிறப்புறக் காட்டுகின்றன.

> '' எவ்வகை யுயிர்களும் உவமங் காட்டி
> வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
> கண்கவர் ஓவியம் ''
>
> (மணிமேகலை காதை 3.அடி 129-131)

எனவும்,

> '' எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி
> நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்
> கண்ணுள் வினைஞர் ''
>
> (மதுரைக்காஞ்சி. அடி. 516-518)

எனவும் கூறினமையின், பார்ப்போர் கண்களைக் கவருந் தன்மையவாகிய ஓவியங்களை அமைப்போர் நுண்ணுணர்வும் நுழைந்த நோக்கும் உடையராதல் வேண்டுமென அறிகின்றாம்.

வெண்சுதையில் தீட்டிய உருவத்தினது இயற்கை வண்ணம் வெளிப்படுமாறு வர்ணந்தீட்டுவோரும், வட்டிகைப்பலகையிலே துகிலிகைக் கோலினாலே பலவித வர்ணங்களை எழுதி அழகிய சித்திரங்களை அமைப்போரும் கண்ணுள் வினைஞர் எனப்பட்டார்.

---

செந்தமிழ் : தொகுதி 38. (1940) பக்கம் 49-56.

''கண்ணுள் வினைஞர்-சித்திரக்காரிகள்'' என அடியார்க்கு நல்லாருரை கூறும்.

'' துவாரவட்டிகை மணிப்பலகை வண்ண நுண்டுகிலிகை'' என்னும் சிந்தாமணிச் செய்யுளடியினுள்ளே கண்ணுள் வினைஞர்க்கு வேண்டிய கருவி மூன்றும் கூறப்பட்டன.

'' வட்டிகை '' என அடியார்க்கு நல்லார் கூறுதலின், இக்காலத்து மேனாட்டுச் சித்திரகாரிகள் வழங்கும் (*Palette* என்னும்) பலகையினை யொத்த வட்டிகைப் பலகைகளே பண்டை நாளிலும் இருந்தன என எண்ண இடமுண்டு.

தென்னாட்டுச் சித்திரவன்மையைக் காட்டும் பழைய சித்திரங்கள், சித்தண்ணவாசலிலும் தஞ்சைப் பெரிய கோயிலிலும் ஈழநாட்டுச் சிகிரியாக் குகையிலும் வடநாட்டு அஜந்தாக் குகையிலும் உள்ளன. இவற்றைக் கூர்ந்து ஆராயின், பழந்தமிழ்நாட்டு அணிகலன், உடை, கூந்தலமைப்பு என்று இன்னவும்; ஆடவரும் மகளிரும் அறங்கூறவையத்தும் விளையாட்டிடங்களிலும் வாழ்மனையிலும் வேற்றிடத்தும் எவ்வெச்செய்திகளை மேற்கொண்டிருந்தார்களென்பதும் தெளிவாகும்.

மண்ணீட்டாளர், கண்ணுள்வினைஞர்—ஆகிய இரு பாலாரையும் ஓவியர் என்பதும் வண்ணம், வடிவம் என நுணுகி வேறுபடுத்தாது அனைத்தினையும் ஓவியம் என்பதும் ஒருதலை.

ஓவியனானவன் படாத்தில் வர்ணம் தீட்டியோ, சுவர் மீது சுதையினாற் புனைந்தோ, வெண்சலவைக்கல்லைச் செதுக்கியோ, கருங்கல்லைப் பொளிந்தோ வெளிப்படுத்திய உருவத்தை அறிவுடையோன் நோக்கும்போது ஓவியனது கைவன்மையை வியப்பதோடமையாது, '' ஓவியனுள்ளத்து உள்ளியது '' இதுவெனக்கண்டு வியத்தல் வேண்டும். ஓவியனது உள்ளக்கருத்தே ஓவியத்திற்கு உயிர்போன்றது.

நவிலுந்தோறும் இனிமை பயக்கும் நூல்நயம் போலவும், பயிலுந் தோறும் இனிமை பயக்கும் பண்புடையாளர் தொடர்பு போலவும் பார்க்குந் தோறும் அறிவுடையோனுக்கு உவகையளிக்கும் ஓவியமே அழகிய ஓவியமாகும்.

'ஐயமும் அழகும்' என்னும் வியாசத்திலே காட்சியினும் ஐயம் மிக்கதெனவும் ஐயத்தினின்று வியப்புச் சுவை தோன்று

மெனவும் காட்டினும். இயற்கைப் பொருளை இயற்கையிற் றோன்றுமாறுபோலத் தீட்டிய வுருவம் காட்சியோடு அமைவதாகும்.

“பஞ்சரத்திலுள்ள கிளிப்பிள்ளை பொன்வட்டிலிற் பாலடிசில் உண்ணுவதை இவ்வோவியம் காட்டுகின்றது” எனக் காட்சி மாத்திரத்திலே அளந்து தீர்ப்பிடுதற்குரிய ஓவியம் அறிஞர்க்கு உவகை பயப்பதில்லை. “இப்பொழிலகத்தே நிற்கும் மாமரத்தின் கனியினை இக்கிளிப்பிள்ளை உண்கின்றது” எனற்குரிய ஓவியமும் முன்னையதைப் போல்வதே. ஆனுல் ஓர் ஓவியன் இவ்விரண்டினையும் ஒரு படத்திலே சித்திரித்துத் தருகின்றான் என வைத்துக்கொள்வோம். பொழில் நடுவில் அழகிய மாளிகை; மாளிகை மேன்மாடத்தில் ஒரு மடவரல் பஞ்சரத்திற் கிளிக்குப் பாலடிசிலூட்டுகின்றாள். பக்கத்திலுள்ள மாமரக் கிளையிலிருக்கும் கிளி தன்னிச்சையாக மாங்கனியினை உண்கின்றது.

இப்படத்தினைப் பார்த்தவுடனே நமது சிந்தையிலே பல வேறு எண்ணங்கள் உதிக்கின்றன. இப்படம் சுதந்தர வாழ்க்கையையும் அடிமை வாழ்க்கையையும் குறிப்பிடுகின்றதா ? அன்றேல் மனை வாழ்க்கையையும் துறவு வாழ்க்கையையும் காட்டுகின்றதா? பட்டின வாழ்க்கையையும் பட்டிக்காட்டு வாழ்க்கையையும் காட்டுகின்றதா ? என இவ்வாறெல்லாம் சிந்திக்கிறோம். கண்ணினைக் கவர்ந்த படம் மனத்தினையும் கவர்ந்து விட்டது.

“மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே”
(தொல். பொருள், செய்யு.104)

எனத் தொல்லாசிரியர் செய்யுளுக்குக் கூறிய ‘நோக்கு’ என்னும் இலக்கணம் ஓவியத்திற்கும் அமையவேண்டும். ‘கவியிதயம்’ எதுவென நாம் ஆராய்ந்து கண்டு மகிழ்வுறுவதுபோல ஓவியனுள்ளத்தினையும் நாம் ஆராய்ந்து கண்டு மகிழ்வுறுமாறு ஓவியம் அமையவேண்டும்.

இளையோரும் அறிவிற் சிறியோரும், ‘பொரிமாவை மெச்சினுன் பொக்கைவாயன்’ என்றபடி, வெள்ளைப் பாடல்களையும் இயற்கைத் தோற்றத்தை அப்படியே அமைத்துக் காட்டும் ஓவியங்களையும் பாராட்டுவர். உண்மை அழகு இதுவென உணரும் ஆற்றலுடைய அறிஞர், உண்மைக் கவிகள் எழுதிய செய்யுள் நலனையும் உண்மையோவியன் அமைத்த சித்திரநலனையும் ஆராய்ந்துணர்ந்து மகிழ்வுறுவர்.

கவிதையானது ஐம்புலன்களையும் மனத்தினையும் கவரும் ஆற்றல் வாய்ந்தது. மண்ணீட்டாளரும் கண்ணுள் வினைஞரும் கண்ணினையும் மனத்தினையும் கவர்வார். இசைவல்லோர் கண்டத்தினாலும் கருவியினாலும் உளத்தைக் கவர்ந்து, செவிக்கு அமுதளிப்பார்.

'' கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள ''

(திருக்குறள், 1101)

என விழைவு வயப்பட்ட தலைமகன் கூறுவது போலக் கவிச்சுவை தேர்வோன்,

'' கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்கவி கண்ணே யுள் ''

எனக் கூறி விண்ணவரின்பத்தினும் மிக்க கவியின்பத்தை நுகர்வான்.

செவியின்பம், நாவின்பம், மூக்கின்பம், ஊற்றின்பமாகிய நான்கும் எடுத்துக்கொண்ட ஆராய்ச்சிக்குப் புறம்பானவை யாதலின், அவைதம்மை யொழித்து, வண்ணமும் வடிவமும் காட்டும் செய்யுளானது, வல்லான் வகுத்த ஓவியம் போன்று அகக்கண்ணுக்கு உவகையளிக்கும் மாண்பினை ஆன்றோர் செய்யுட்கள் சிலவற்றை எடுத்துக்காட்டி நிறுவுதல் மேற்கொள்வாம்.

'' வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம் ''

என்னும் தொல்காப்பிய உவமவியற் சூத்திரத்தினுள்ளே மெய்யென்பது வடிவம் (வட்டம், சதுரம், கோணம் முதலாயின); உருவென்பது நிறம், வண்ணம் (வெண்மை, பொன்மை முதலியன) எனக் கூறப்பட்டது.

சொற்களாலே கவிவல்லான் புனையும் ஓவியமானது, கண்ணுள் வினையரும் மண்ணீட்டாளரும் புனையும் ஓவியத்தினும் சிறந்த இயங்கும் ஓவியமாகும். அஃதன்றியும் கவிதையோவியம் உவமம் தழுவி நின்று ஆராயுந் தோறும் ஆராயுந்தோறும் புதிய புதிய நலத்தினைக் காட்டவல்லது.

'' வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு

நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையினேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்
என்கண் காட்டென் றென்னுளம் கவற்ற
வந்தேன் ''

(சிலப்பதிகாரம், காதை. 11. அடி 41–53)

என மாங்காட்டு அந்தணன் வாய்மொழியாக இளங்கோவடிகள் ஓவியக் கவிதை புனைகின்றார். உவமானம் ஒரு தனியோவியம்; உவமேயம் மற்றேரோவியம். ஈரோவியமும் அகக்கண்முன் தோன்றி இரண்டற்ற (அத்துவித) நீர்மையாய் நிற்கின்றன. நாம் கண்டு பரவசமடைகின்றோம்.

முதலிலே உவமானத்தைத் தனித்து நோக்குவாம். ஒவ்வொரு மொழியினாலும் குறிப்பிடுகின்ற வண்ணத்தினையும் வடிவினையும் அகக் கண்ணினாலே நோக்குதல் வேண்டும்.

வாளா ''வேங்கடம்'' என்னாது ''வீங்குநீர் அருவி வேங்கடம்'' என்றார், மலைக்கு அணிகலன்போன்று அழகினை நல்குவது நீரருவி யாதலின்.

''ஓங்குயர்மலையம்'' என்புழி மெல்லொற்றுத் தொடர்ந்த நெட்டெழுத்துத் தனக்குரிய மாத்திரையினும் நீண்டொலித்துக் குறவரும் மருளும் தெய்வக் குன்றின் உயர்வினை யுணர்த்தி வியப்பினை அளிக்கின்றது.

''விரிகதிர் ஞாயிறு'' என்னும் தொடர், பரிதிவட்டத்தினையும் அதனைச் சூழ்ந்து எத்திசையினும் பரவும் ஆயிரங்கதிர்களையும் கண்முன் கொண்டுவருகிறது. நிறைமதிக்கு அடுத்த நாளிலே குணதிசையில் ஞாயிறு உதிக்கக் குடபாலிலே வான வட்டத்தின் மேல் நிற்கும் திங்களை ஈண்டுத் ''திங்கள்'' என அடையின்றிக் குறிக்கப்பட்டது. அந்திமாலையிலே காவிரிப்பூம் பட்டினம் என்னும் பெண்ணணங்கு தோற்றிய தன்மையினை உரைக்கப்புகுந்த கூலவாணிகன் சாத்தனார்,

> "குணதிசை மருங்கின் நாண்முதிர் மதியமும்
> குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்
> வெள்ளிவெண் டோட்டொடு பொற்றோ டாக
> எள்ளறு திருமுகம் பொலியப் பெய்தலும்"
>
> (மணிமேகலை. காதை 5. அடி 119–122)

என்றாரெனின், அவர் கூறியது "வீழ்கதிர்", இவருரைத்தது "விரிகதிர்' என்க'.

"நன்னிற மேகம்" நல்ல நீலநிறத்தையுடைய மேகம் என உரையாசிரியர் கூறுவார்.

வானவில்லானது வட்டாகாரமாய் இந்திரநீலம், பூநீலம், நீலம், பச்சை, மஞ்சள், பொன்மை, செம்மை என்னும் ஏழு நிறங்களும் பொருந்தி ஒளியொடும் திகழ்வது.

> "உருவு கொண்ட மின்னே போலத்
> திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்"
>
> (மணிமேகலை. காதை. 6. அடி. 9–10)

எனவும்,

> "மின்னுக்கொடி யொன்று மீவிசும்பிற் றோன்றுமால்"
>
> (சிலப். 29. செங்குட்டுவன்கூற்று, அடி 4.)

எனவும் வருதலின், வானவில்லும் மின்னற்கொடியும் தெய்வ வொளி வீசுந்தகைய என அறிகின்றோம்.

"மிக்க அருவிநீரையுடைய வேங்கடமென்று பெயர் கூறப் படும் மலையினுச்சிமீதே ஞாயிறும் திங்களும் இரு மருங்கும் ஓங்கி விளங்கிய இடைப்பட்ட இடத்தே நீலநிறத்தையுடைய மேகம், தன் மின்னாகிய புதுப் புடைவையையுடுத்துத் தன் வில்லாகி பணியைப் பூண்டு நின்றது" என உவமான ஓவியம் காட்டப்பட்டது.

நீனிறமேகம் நெடியோனுக்கும், விரிகதிர் ஞாயிறு பகை யணங்கு ஆழிக்கும், திங்கள் பால்வெண்சங்கிற்கும் மின்னல் பொற் பூவாடைக்கும், வானிடுவில் அணிகிளராரத்திற்கும் ஒப்பாயின.

மேல்வரும் எடுத்துக்காட்டுச் செய்யுட்களையும் விரித்துரைத் துக்கொள்க.

“ கோல நெடுங்கண் மகளிர்
கூந்தல் பரப்பி யிருப்பப்
பீலி மஞ்ஞை நோக்கிப்
பேடைமயிலென் றெண்ணி
ஆலிச் சென்று புல்லி
யன்மை கண்டு நாணிச்
சோலை நோக்கி நடக்கும்
தோகை வண்ணங்காண்மின் ”

(சீவக சிந்தாமணி, 919)

“ தீம்பாற் பசியி னிருந்த
செவ்வாய்ச் சிறுபைங் கிளிதன்
ஓம்பு தாய்நீர் குடைய
ஒழிக்கும் வண்ணம் நாடிப்
பாம்பா லென்ன வெருவிப்
பைம்பொற் றோடு கழலக்
காம்பேர் தோளி நடுங்கிக்
கரைசேர் பவளைக் காண்மின் ”

(சீ. சி, 924)

“ தாய்தன் கையின் மெல்லத்
தண்ணெண் குறங்கி னெறிய
ஆய்பொன் னமளித் துஞ்சும்
அணியார் குழவி போலத்
தோயுந் திரைக ளலைப்பத்
தோடார் கமலப் பள்ளி
மேய வகையிற் றுஞ்சும்
வெள்ளை யன்னங் காண்மின் ”

(சீ. சி. 930)

“ திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரு மோராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர் ”

(மதுரைக்காஞ்சி. 461–465)

“ சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செவ்வாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவங் கூடலிழைப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதின போது

பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்
கவிழ்ந்திறங் கிச்செவி யாட்டகில் லாவே''
(பெரியாழ்வார் திருமொழி. 3–6–8)

'' திரண்டெழு தழைமழை முகில்வண்ணன்
செங்கமல மலர்சூழ வண்டினம் போலே
சுருண்டிருண் டகுழல் தாழ்ந்த முகத்தான்
ஊதுகின்ற குழலோசை வழியே
மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்தபுல் லுங்கடை வாய்வழி சோர
இரண்டு பாடுந்துலுங்காப்புடை பெயரா
எழுது சித்திரங்கள் போலநின் றனவே''
(பெரியாழ்வார் திருமொழி 3–6–9)

'' மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவு
மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும்
செம்பொற் றூளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும்
தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப்
பரவிச் செல்வார்''
(திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம், 225)

'' ஞானத்தின் திருவுருவை நான்மறையின்
தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர்
மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார்
சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக்
கண்டார்கள்''.
(திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம், 728)

# 4. நிலவும் பொழிலும்

> "கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
> உணர்வுடைய மாந்தர்க் கல்லது தெரியின்
> நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

என ஆசிரியர் தொல்காப்பியனுர் மெய்ப்பாட்டியலுக்கு முடிவுரை கூறுகின்ருர். உயிர்ப்பொருள் உயிரில்பொருள்களிற் காணப்படும் சத்துவ வேறுபாடுகளைக் கண்ணுள் வினைஞரும் மண்ணீட்டாளரும் நுண்ணிதினேக்கி வண்ணத்தினுலும் வடிவினுலும் வெளிப்படுத்திக் காட்டுவார். இசைவல்லோர் செவி கருவியாக ஆராய்ந்து, சத்துவ விகற்பங்களை இசையுருவாகத் தருவார். கவிஞனே வெனிற் கண்ணிலும் செவியினும் திண்ணிதின் உணர்ந்து இம் மூவர் செயலினையும் செவ்விதிற் புரிந்து, தான் பெற்ற இன்பத்தினை வையகம் பெறுமாறு செய்வான்.

நிலவும் பொழிலும் தரும் இன்பத்தினை நுகர்ந்த புலவன் எவ்வெக் கருவிகளினுலே தான் நுகர்ந்த இன்பத்தை யாமும் நுகருமாறு செய்கின்ருன் என்பதை ஆராய்ந்துணர்வதே இப்பொருளுரையின் நோக்கமாகும்.

இன்பப்பொருளனைத்தும் அழகினேடு இயைந்து நிற்பன. அழகினை அளத்தற்கு மனிதர் கொள்ளும் அளவுகோல் இரண்டு உள.

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள"

என்றமையின், மகளிர்பாற் பெறும் இன்பவிழைவின் வயப் பட்டோருக்குப் "பனிமலர்க்குழற் பாவைநல்லா"ரே எல்லா அழகிற்கும் அவ்வழகின் வழியெய்தும் எல்லா இன்பங்களுக்கும் நனிசிறந்த எடுத்துக்காட்டாவரென்பது வெளிப்படை.

---

செந்தமிழ் : தொகுதி 38 (1941) பக்கம் 113–120

காமவிழைவினீங்கி அருணெறிநின்று வீடுபெற முயல்வாருக்கு அவ்வீடு பேற்றினை நல்கும் தனிப்பெருந் தலைவன்றானே இனிய வற்றுளெல்லாம் இனியவனுவான். அழகுடைப் பொருளனைத் தினிலும், தலைவனது ஒளிவிளக்கத்தைக் கண்டு பரவசப்படுவது அன்பராயினருக்கு இயல்பாகும்.

கவிஞன் கண்ணாடிபோன்று பிறர்நிகழ்ச்சியைத் தன்னிகழ்ச் சியாகக் காட்டும் ஆற்றல் வாய்ந்தவனாதலின், மேற்கூறிய அளவு கோல் இரண்டினாலும் அழகினை அளத்தல் அவற்கு இயல்பாகும்.

'' பவளம் அழகிது, அன்புக்குரியாளது செவ்விதழினை யொத்தலின் ; முத்து அழகிது, அவளது பல்வரிசையை யொத் தலின் ; பொன் அழகிது, அவளது மார்பிற் படர்ந்த திதலை போறலின் ; தாமரை அழகிது, அவள் கையிலேந்திய இளங்குழவிக்கு ஒப்புடையதாதலின் ; மேகம் அழகியது, அவளது கூந்தலை நிகர்த்தலின் ; நீலம் அழகிது, அவளது கண்களுக்கு உவமை கூறுதற்கு இயைந்ததாதலின் ; பிறை அழகிது, அவளது ஒண்ணுதலுக்கு ஒப்பாதலின்; '' எனக் காமுகன் உவமான உவ மேய ஒப்புமைகண்டு உளமகிழ்வுறுவான்.

'' பவளமால்வரையில் நிலவெறிப்பதுபோற் பரந்த நீற்ற ழகு பச்சுடம்பில் திவள மாதுடனின்றாடிய பரமன் '' எனப் பாடிய புலவனதுகண்களுக்குப் பவளம் சிவபிரானது திருமேனியின் வண்ண மாகக் காணப்படுகிறது. '' பொன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி '' எனப் பாடிய கவிஞர் அத்திருமேனியைச் செம்பொன்னின் வண்ணமாகக் காண்கின்றார். '' கருமுகில் தாமரைக்காடு பூத்து '' எனப் பாடிய பாவாணர் கருமுகிலினையும் தாமரையையும் காவற்கடவுளது திருமேனியாகவும் அவயவங் களாகவும் தரிசிக்கின்றார். '' கறைமிடறணியலு மணிந் தன்று '' என்றோர், செம்மேனிக்கு அழகு செய்யும் நீலக் கறை யினை இறைவனுருவிற் பார்க்கின்றார். ''பிறை நுதல் வண்ணமா கின்று, அப்பிறை பதினெண் கணனுமேத்தவும் படுமே '' என் புழிப் பிறையினுயர்வுக்குக் காரணம் இறைவன் திருமுடிமே லிருத்தலென்பது குறிக்கப்பட்டது.

'' இனியாரோடு தலைப்பெய்த இடங்கண்டாலும் அவ்வினி யாரைக் கண்டாலே போலும் '' என நக்கீரனார் கூறினாராத லின், அன்பிற்கினியாளோடு தலைப்பெய்த பொழிலும் அவள் போன்று இன்பந்தரும் நீர்மையதாயிற்று. '' ஏர்மன்னுகோதை

யைப்போ லினிதாயிற்றிவ் வீர்ம்பொழிலே '' எனக் காதலனொரு வன் கூறுகின்றான்.

இறைவனிடத்து அன்புசெலுத்தும் பெருந்தகையோனுக்கு இறைவனது திருக்கோயிலும் அவனது மெய்யடியாரது திருவுருவமும் அவனுகத் தோன்றி இன்பமளிப்பன.

'' மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே ''

என்னும் பெரியார்வாக்கினை நோக்குக,

உளத்தின் நீர்மைக்கேற்பப் புறத்தே தோன்றும் பொருள் உருவேறுபட்டுத் தோன்றுமாதலின், புணர்ந்தார்க்கு இன்ப மளித்து ஒண்ணுதலும் பிறவுமாகத் தோன்றிய பிறை தணந் தார்க்கு அச்சச் சுவையொடு கூடிய கொடியவுருவாகத் தோன்று தலுங் கூடும்.

'' ஒன்றே யெயிற்ற தொருபெரும்பே யுலகம்
விழுங்க வங்காந்து
நின்றாற் போல நிழலுமிழ்ந்து நெடுவெண்
டிங்க ளெயிறிலங்க
இன்றே குருதி வானவா யங்காந்
தென்னை விழுங்குவான்
அன்றே வந்த திம்மாலை அளியே
னாவி யாதாங்கொல் ''

எனப் புலம்பிய கனகமாலையார் கண்ணுக்கு அந்திமாலையானது ஓரெயிற்றினையுடைய கரிய பெரிய பேயாகத் தோன்றிற்று. அவ்வெயிறு பிறைத்திங்கள்.

'' மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பிற்
றெக்க பேரிருள் மாதரொத் தனவுடுத் தோற்றஞ்
செக்க ரீசனை யொத்ததொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே ''

எனக்கூறிய அன்பர் கண்ணுக்குப் பிறையானது இறைவன் கைக் கபாலமாகக் காணப்பட்டது.

'பிறைக்கோட்டியானை', 'பிறைவில்' என்றலின் வீரர் கண்ணுக்குப் பிறையானது யானைக்கோடாகவும் வில்லாகவும் தோன்றிற்று.

உலகளித்தலால் நிறைமதியமானது சோழனது கொற்றக் குடை போன்றதென இளங்கோவடிகள் இயம்பினர்.

'' ஒன்றிய திங்களைக் காட்டி ஒளிமணி
வண்ணனே யென்னும்
நின்றகுன் றத்தினை நோக்கி நெடுமாலே
வாவென்று கூவும்
நன்றுபெய் யும்மழை காணின் நாரணன்
வந்தானென் றாலும்
என்றின மையல்கள் செய்தார் என்னுடைக்
கோமளத் தையே ''

என அந்தீந் தமிழ்ச்செய்யுள் யாத்த ஆழ்வார் கண்களுக்குத் திங்களும் குன்றமும் மழையும் ஸ்ரீமந் நாராயணனது திருவுருவாகத் தோன்றிநின்றன.

'' காழகச் சேற்றுட் டீம்பால் கதிர்மணிக்
குடத்தி னேந்தி
வீழ்தரச் சொரிவ தேபோல் விளங்கொளித்
திங்கட் புத்தேள்
சூழிருட் டொழுதி மூழ்கத் தீங்கதிர்
சொரிந்து நல்லார்
மாழைகொண் முகத்திற் றேன்றி வளைகடல்
முளைத்த தன்றே ''

என்றமையின், காப்பியக் கவிஞர் கண்ணுக்கு விளங்கொளித் திங்கட் புத்தேள் மகளிரது பசத்தல்கொண்ட முகமாகத் தோன்றிற்று.

மேற்பொந்த அனைத்தும் வண்ணமும் வடிவும் பற்றியெழுந்த வுவமங்கள். வினையும் பயனும்பற்றிய உவமங்களினலும் அறிவுடையோர் திங்களின் அழகினை அளந்து கண்டார். இப்பரிசினை,

'' திங்க ளன்ன கல்வியும் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும் ''

எனவும்

'' தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து ''

எனவும் கூறியவற்றுட் காண்க.

அழகுடைப் பொருளனைத்தினிலும் தனிப்பெருந் தலைவனைக் காணும் நீர்மையை ஆழ்வார் செய்யுளுட் போலவே மேல்வரும் கடுவன் இளவெயினனார் செய்யுளுள்ளும் காணலாம். அது,

“ நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலும் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின், நாற்றமும் வண்ணமும் பூவையுள
நின், தோற்றமும் அகலமும் நீரினுள
நின், உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின், வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள
அதனால், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏம மார்ந்தநிற் பிரிந்தும்
ஏவல் சான்றன வெல்லாம்
சேவலோங் குயர்கொடி யோயே ”

என வரும். திருமங்கை மன்னனளித்த,

“ மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்ப்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணா தெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூத மைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவிற் றிகழுஞ் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமே லவே ”

என்னும் திருநெடுந்தாண்டகச் செய்யுளையும் நோக்குக.

இனி ஒளியும் இருளும், வெண்மையும் கருமையும், பொன்மையும் பசுமையும், வெம்மையும் தண்மையும் என முரணுறத் தோன்றும் பண்புகள் சிவசத்திபேதம் போன்று அழகுடைப் பொருள்வயின் ஒன்றிநின்று அதனது அழகுக்குக் காரணமாவன.

சிவபிரானது செம்பவளமேனியின் பாங்கர் உமாதேவியாரது மரகத மணிபோன்ற திருவுருத் தோன்றி அழகினைத் தருகின்றது. “ பச்சைமாமலை போல்” மேனிபடைத்த இராமபிரான் பக்கத்திலே ‘பொன்னின்சோதி’ விளங்கும் திருமேனியோடு கூடிய சீதாபிராட்டியார் தோன்ற அழகு பொலிவினை அடைகின்றது. இப்பரிசே நீலமணி போன்ற விசும்பிலே நித்திலம்போன்ற வெண்டிங்கள் தோன்ற அழகு விளங்குகின்றது.

"காழகச்சேற்றுட் டீம்பால்" எனக் காட்டிய சிந்தாமணிச் செய்யுளினுள்ளே நிறைமதியம் பளிக்குக்குடத்தினுக்கும், நிலவு அக்குடத்தினின்று சொரியப்பட்ட பாலுக்கும், இருள் கருஞ் சேற்றுக்கும் ஒப்பாகக் கூறப்பட்டன.

"வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோற்
கள்ளவிழ் பூம்பொழி லிடையிடைச் சொரிய"

எனவரும் மணிமேகலை யடிகளினுள்ளே நிலவும் பொழிலும் கூறப்பட்டன. 'தண்மதியம் என்றும் நிறைமதியா யிருக்கு மாயின் ஞாயிற்றினுங் குறைந்த ஒளியுடையதென இழித்தொதுக் கப்படும் ; பிறையாய்த் தோன்றி வளர்தலின் புதுமையின் பாலதாகிய மருட்கைச் சுவையை நல்கி அழகுடைப் பொருளா யிற்று' என ஐயமும் அழகும் என்னும் உரையினுட் கூறினும். பரிசனங்கள் புடை சூழ்ந்த மன்னனைப் போன்றும், தோழியர் கூட்டத்தி னடுவண் வைகும் தலைமகள் போன்றும், பதினுயிரம் வித்தியார்த்திகள் நடுவண் வைகும் குலபதி போன்றும், எண் ணற்ற வெள்ளாம்பல்மலர்கள் பரவிய நீனிற மணி நீர்ப்பொய்கை நடுவண் அரிதினலர்ந்த வெண்பதுமம் போன்றும், விண்மீன்க ளிடையே விளங்குவது, தண்மதியத்திற்குப் பேரழகினைத் தரு வதாகும். முயற்கறையும் மதியத்திற்கு அழகினைத் தருவது; மழலைக்குழவிமுதல் முதியோரீறுக அனைவரும் மதியத்தினை உற்று நோக்குதற்குக் கறையே காரணமாகும்.

நிலவும் பொழிலும் ஒளியும் இருளுமாக இயைந்து நின்று அழகு பயப்பன.

"இருள்பரந் தன்ன மாநிழன் மருங்கின்
நிலவுகுவிந் தன்ன வெண்மண லொருசிறை"

என்பதனையும் நோக்குக.

"வெயில்நுழை பறியாக் குயில்நுழை பொதும்பர்"

என மணிமேகலையும் பெரும்பாணுற்றுப்படையும் மரமடர்ந்த சோலையின் இருளினைத் தெளிவுபடுத்துகின்றன.

மரமும் செடியும் கொடியும் யாங்கணும் விரவி அடர்ந்து வளர்ந்து நிற்பதுவே சோலைக்கும் பொழிலுக்கும் அழகாகும். அங்ஙனமாதலின், அவை தம்மை உருவப்படுத்தி நமது அகக்கண்முன் காட்டுவதற்குக் கவிஞர்,

" குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும்
நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமும் தளவமும் முடமுட் டாழையும்
குடவமும் வெதிரமும் கொழுங்கால சோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
எரிமல ரிலவமும் விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம் "

என மரப்பெயர் பலவற்றை நிரைபெற அடுக்குவாராயினர்.

கபிலரும் பெருங்குறிஞ்சியுள்ளே "ஒண்செங்காந்தள் " எனத் தொடங்கி நூற்றெட்டுப் பூப்பெயர் கூறியதும் பொழிலின் பொலிவினைச் சொல்லினால் அமைத்துக் காட்டுதற்கேயாம்.

" சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்தும், நாகமும் திலகமும் நறவமும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பாவைஞாழலும் பைங் கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகும் முருக்கொடு முகை சிறந்து, வண்டறைந்து, தேனார்ந்து, வரிக் குயில்கள் இசைபாடத் தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்" என்னும் களவியலுரையினுள்ளே நக்கீரனார் பெயரினோடு தொழிலினையும் விளக்கி அழகிய சொற்களை மோனையெதுகைத் தொடையியைய வைத்துப் பூம்பொழில் ஒன்றினை ஆக்கித் தருகின்றார்

திருத்தக்கதேவர் பொழிலானது மணமகளிரொப்பப் பொலிந்து தொன்றியதெனக் கூறி, அப்பொலிவினை விளக்குதற்கு மலர் மரங்களின் வண்ணத்தினையும் வடிவினையும் கண்ணுள் வினைஞர்போலச் சித்திரிக்கின்றார். அவர் செய்யுட்கள் வருமாறு:

" பாசிப் பாசத்துப் பைம்பொனிரைத்
தாலிபூத்த வேங்கை
மாசில் வெண்டுகிலை நீர்தோய்த்து
மேற்பார்த்த வண்ணமேபோற்
காசில் மட்டொழுகப் பூத்தவழிஞ்சில்
கண்ணார்கவின் கொண்டன
பேசிற் செந்தலைய வெண்கறைய
புன்கம் பொரி யணிந்தவே "

" கோடுதையாக் குழிசியோ டாரங் கொளக்குயிற்றிய
ஓடுதேர்க் கான்மலர்ந்தன்ன வகுள முயர்சண்பகம்
கூடுகோழிக் கொழுமுள் ளரும்பினவண் கோசிகம்
ஆடை பூத்தன பாதிரி வெண்கடம்புபந் தணிந்தவே "

" வெருகு வேட்பச் சிரிப்பனபோன் முகைத்த
முல்லை வெய்யவாள்
அரவு பைத்தா வித்தன்ன அங்காந்த
ளவிழ்ந் தலர்ந்தன
குரவங் கொண்ட குறும்பூழ்போற்
கொழுங்கான் முகைசுமந்தன
குருதிக் கூரெயிறு கூத்தியர்கட்
கொண்ட கொடித்தளவமே "

தில்லையம்பதியின் எல்லையினமைந்த நந்தவனத்தினை வரு ணிக்கும் சேக்கிழார் சுவாமிகளும் முன்னோர் மரபின் வழிநின்று மரப்பெயர் பலவற்றை அழகுபெற அடுக்கிச் செல்கின்றார். அவரளித்த செய்யுள் வருமாறு :

" நாக சூதவகு ளஞ்சர ளஞ்சூழ்
நாளி கேரமில வங்க நரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழை மதூகம்
பொதுளும் வஞ்சிபல எங்கு நெருங்கி
மேக சாலமலி சோலைக ளாகி
மீது கோகில மிடைந்து மிழற்றப்
போக பூமியினு மிக்கு விளங்கும்
பூம்பு றம்பணை கடந்து புகுந்தார் "

" வன்னி கொன்றைவழை சண்பக மாரம்
மலாப்ப லாசொடு செருந்திமந் தாரம்
கன்னி காரங் குரவங் கமழ்புன்னை
கற்பு பாடலங் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவல்
துதைந்த நந்திகர வீர மிடைந்த
பன்ம லர்ப்புனித நந்த வனங்கள்
பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான் "

வண்டினது ரீங்காரமும் குயிலின் இசையும் பொழிலுக்கு அழகு செய்வன. நக்கீரனுர் இரண்டினையும் கூறினுர் ; சேக்கிழார் சுவாமிகள் கோகிலத்தை மாத்திரம் கூறுகின்ருர்.

நிலவும் பொழிலும் தனித்துநின்று பயக்கும் அழகினிலும் பார்க்க ஒருங்கியைந்து நின்று தரும் அழகு சிறந்ததென்னும் உண்மையினையும் இப்பொருளுரையில் ஒரு சிறிது காட்டினும்.

## 5. கவியும் சால்பும்

'' திருமலி யழகுடைச் செழும்பொருள் தானே
உவகை நீர்மையது ; ஆங்கவ் வுவகை
பன்னாட் கழியினும் கழியா வியல்பிற்
றண்டா வின்பந் தந்துநிற் பதுவே ''

என ஆங்கிலமொழிப் பெரும்புலவராகிய கீற்சு (*Keats*) என்பவர் தாம் இயற்றிய எந்திமியோன் (*Endymion*) என்னும் பெருங்காப்பியத்திற்குத் தோற்றுவாய் கூறினர். ''அழகுடைப் பொருள் என்றும் உவகை தருவது ; அழியாவின்பத்தின் நீர்மையது ; ஆதலின், அதுவே புலவராற் பாடுதற்கமைந்தது' என்பது கீற்சு நிறுவிய முடிபு. இப்புலவர் தாமே மற்றொரு செய்யுளகத்து,

'' அழகே உண்மை, உண்மை அழகென
உலகினில் அறிந்தோர் அறிவுபிற வேண்டார் ''

எனக் கூறினர். ஆண்டு அழகிற்கு உண்மை ஒப்புடைப் பொருளாகக் கூறப்பட்டது.

அறிவு, இச்சை, செயல் (ஞானசக்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி) எனும் மனநீர்மை மூன்றனுள் அறிவு உண்மைப்பாலது ; இச்சை அழகின்பாலது ; செயல் செம்மைப்பாலது. உண்மை அழகு, செம்மை என்பன முறையே அறிவு, இச்சை, செயலுக்கு எல்லையாகவும் நிலைக்களமாகவும் அமைந்தன.

மனநீர்மை மூன்றாயினும் மனம் ஒன்றே. ஆதலினாலே உண்மை, அழகு, செம்மை என்பன தம்முள்ளே ஒப்புடையவாயின. அழகே உண்மை, உண்மையே அழகு, அழகே செம்மை செம்மையே அழகு ; உண்மையே செம்மை, செம்மையே உண்மை.

---

செந்தமிழ் : தொகுதி 38. (1941) பக்கம் 177–184.

செம்மை, உண்மை, அழகென்னும் இவற்றை வட நூலார் சிவம், சத்தியம், சுந்தரம் என்பர். ஆங்கில நூலார், Goodness, Truth, Beauty என்பர்.

" நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையாற் கல்வியழகே யழகு" என்புழி 'நெஞ்சத்து நல்லம்' எனச்செம்மையும், 'கல்வியழகு' என அறிவும், அழகின் வேறின்மை யாதல் கூறப்பட்டது. "உருவின்மிக்கதோர் உடம்பினைப் பெற்றோரும் கல்வியறி வில்லாதவழி அறிவுடையோரால் அழகில ரெனக் கருதப்படுவராதலின், 'கல்வியழகே யழகு' என்னுமிடத்து வந்த ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாயிற்று.

அழகும் உண்மையும் கவிப்பொருளாயினவாறு போலச் செம்மை வயத்ததாகிய சால்பும் கவிப்பொருளாயிற்று. காப் பியத் தலைவனிடங் காணப்படும் சால்பே காப்பியக்கவிகள் விரித்துக் கூறும் பெரும்பொருள்.

வாழ்க்கையிலே சால்புவாய்ந்தோனாகிய கவிஞனொருவன் சால் பினைக் கவிப்பொருளாகக்கொண்டு செய்யுள் செய்வானாயின், அச் செய்யுள் இனிமையும் மாண்பும் உறுதியுந் தந்து மிளிருமென்பது அறிஞராயினருக்கு உடம்பாடேயாம்.

வெள்ளகால் சுப்பிரமணியமுதலியார் என்னும் தமிழ்ப் பெருங் கவியினது தனிப்பாடல்களின் தொகுதியும், அப்பெரி யாரது எண்பதாம் ஆண்டு நிறைவு விழாவிலே, மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரையுள்ளிட்ட தமிழறிஞர் கூறிய வாழ்த்துரை, வாழ்த்துச் செய்யுட்களின் தொகுதியும் கையகத்துள்ளன.

'புதுவது கிளந்த யாப்பின்மேற்'றாகிய கவிதை பெருவர விற்றாகிய இக்காலத்திலே, தொன்மைநலஞ் சிறிதுங் குன்றாத செய்யுள் செய்யும் புலவர் மிகச் சிலரேயாவர். அப்புலவர் வரிசையிலே முதற்கண்வைத்து எண்ணுதற் குரிய வெள்ளகால் கிழார் இயற்றிய தனிச்செய்யுளகத்துக் காணப்படும் கவியழ குகள் பல துறைய. அவை அனைத்தினையும் ஆராய்ந்து கூறப் புகின் உரை பெருகுமாதலின், மக்களைத் தேவராக்கும் நீர்மை யதாகிய "சால்பு" என்னும் பெரும் பொருளினைக் குறித்து, வாழ்க்கையிலே சால்பு வாய்ந்த இப்பெருங்கவி கூறிய பலகவிதை களிலே ஒரு சிலவற்றை யாராய்ந்து அவை தம்முட் பொதிந்த அழகினை எடுத்துக் காட்டுதலே 'கவியும் சால்பும்' என்னும் இப் பொருளுரையின் நோக்கமாகும்.

'அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ டைந்து சால்பூன்றிய தூண்' என ஆசிரியர் திருவள்ளுவனார் சால்பிற்கு நிலைபேறுவன இவையெனக் கூறுமுகத்தாற் சால் பினது வரைவிலக்கணங் கூறினார். சுற்றத்தார் மேலேயன்றிப் பிறர்மேலு முளதாய அன்பும், பழிபாவங்களினாணலும், யாவர் மாட்டும் ஒப்புரவு செய்தலும், பழையார்மேற் கண்ணோடலும், எவ்விடத்தும் மெய்ம்மை கூறலுமே சால்பிற்கு நிலைபெறுவன.

"என்றும், நல்லோ ரிணக்கமே நான்இணங் கிடுக ;
நல்லோர் நினைவே நான்நினைந் திடுக;
நல்லோர் உரையே நான்உரைத் திடுக;
நல்லோர் நடையே நான்நடந் திடுக;
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
உயிர்களை வருத்தல் ஒழிவே னாக;
உயிர்போ மெனினுமெய் உரைப்பே னாக;
களவினைக் கனவினுங் கருதேனாக;
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அயலவர் பொருளினை அவாவே னாக;
அவர்கள்தம் வாழ்வுகண் டழுக்கறே னாக;
அவர்செய்யும் நன்றியை அயர்த்திடே னாக;
முன்புபின் பவர்பழி மொழியே னாக;
எங்கணும் அவர்புகழ் இயம்புவே னாக;
அவர்குறை காண்டலிற் குருடனே னாக;
அவர்மறை கேட்டலிற் செவிடனே னாக;
அவர்க்கின்னா கூறலில் ஊமனே னாக;
அவர்க்கூறு செய்தலில் முடவே னாக;
அவர்கேடு சூழ்தலில் அறிவிலே னாக;
எனைக்கெடுத் தவர்க்கும்நன் றியற்றுவே னாக;
வைதவர் தம்மையும் வாழ்த்துவே னாக;
வெறுத்தவ ரெவரையும் விரும்புவே னாக;
ஒறுத்த வருக்கும் உதவுவே னாக;
பகைவருக்கும் அன்புசெய் பண்பினே னாக;
இத்தனை நல்லொழுக் கியைந்துளே மென்று
பெருமைபா ராட்டிடும் பிழையிலே னாக;
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
என்னை எவரும் இகழினும் புகழினும்
செல்வம் என்னைச் சேரினும் தீரினும்
இன்றே இறக்கினும் என்றும் இருக்கினும்
எவ்வெவ் வின்பையும் எய்துதற் கெனினும்
எவ்வெத் துன்பையும் இரித்தற் கெனினும்

உண்மை வழுவி ஒழுகே ணுக;

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

எச்செய லெனினும்யான் இயற்றிட நேருமேல்
என்மனம் அமைதியை இழந்திடா தாக;
வருத்தம் என்மனத்தினை வருத்திடா தாக;
கடல்மலை வனம்இரு காடுகள் முதலா
வெருவிடு தனியிடம் மேவினே னாயினும்
பாய்புலி பிடிக்கினும் பாம்பு கடிக்கினும்
என்மனம் நடுக்கினை எய்திடா தாக;
அலையா உறுதியுற் றசைக்க வொண்ணேனாய்
வச்சிர வெற்பென வற்பினை உற்று
விருப்புறு பொருள்கள் விட்டு விலகினும்
வெறுப்புறு பொருள்கள் மேவிச் சேரினும்
ஒழுக்கம் வழுக்கா உளத்தே னாக''

எனக் கவி ஆண்டவனை வேண்டுமுகத்தால் மேலும் மேலும் பெறுதற்குத் தாம் அவாவிய சால்பு எனும் அழியாச்செல்வத்தின் நல்லியல்புகளை வகுத்துரைக்கின்றார்.

யாம் முன்னர்க் காட்டிய ஐந்தினோடு 'அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொ னான்கும் இழுக்கா வியன்ற அறமு'ம், 'அஞ்சாமை யீகை அறிவு ஊக்கம்' எனும் நான்கும், குடிமையும், மானமும், பெருமையும், பண்புடைமையும் இதனுட் கூறப்படுதல் காண்க.

'' நல்லொழுக் கத்துடன் வாழ்தலே நீடித்த
நல்வாழ்க்கை யாகும் நடைபிறழ்ந்த
புல்லொழுக் கம்முடை யோர்நீடு வாழ்ந்தாலும்
பொன்றின வர்களே யென்றறிவீர்'' எனவும்,

'' உண்மைக்கு மேலாம் மதமில்லை; எல்லா
உயிர்க்கன்பின் மிக்கதோர் பத்தியில்லை;
வண்மைக்கு மேலுப காரமில்லை; நல்
வசனத்தின் மேலுப சாரமில்லை '' எனவும்,

'' ஒக்க ஊக்கமோ டுறுதிநம் உளத்தினுக் குதவி'' எனவும்,

'' விண்ணி டிந்து விழுந்திடு மாயினும்
மண்ணில் நீதி வழங்கக் கடவதே'' எனவும்;

" மெய்மைதேர் அறிவினை மேவி யுள்ளவர்
செம்மனப் பாக்கியச் சிறப்பின் ஒப்பிலார்;
தம்மைத்தாம் உடையர்; அத்தகைமை சார்ந்திலா
மம்மர்மன் னவரினும் சிறந்த மன்னரே " எனவும்,

" உண்மையி னும்முய ரொருமத மும்மிலை;
அனைத்துண் மையினுக் களவிலை யாதலால்
உண்மைய னைத்தும் உடைய மதமிலை;
உண்மை யொன்றும் உறுமத மும்மிலை;
எம்மதம் எவ்வள வுண்மையொ டியையுமோ
அம்மதம் அவ்வள வுயர்வின தாமால்;
மெய்யர் இவர், பொய் வேடத்தினர் இவர்,
என்ன ஐயுற வின்றி அறியுமாறு
உள்ளத் துள்ளதை உணரவல் லார்க்கலால்
மற்றவர் உண்மை மதமறி வரிதால்;
மனிதனை மதத்தால் மதியா தொழுக்கால்
மதித்தலே உண்மை மதிப்பா குங்காண்;
'கருமமே யல்லது பிறிதென் கண்ட'தென்
றுரைசெய் கம்பன் உட்கருத் திதுவே "

எனவும் வருபவற்றுள்ளே சால்பின்துறை பல செவ்வியுறத் தரப் பட்டிருத்தல் காண்க.

வெள்ளகால்கிழாரது வாழ்க்கையிலும் செய்யுளிலும் இயைந்து நின்ற சால்பின் பொலிவினை உற்றுநோக்குங்கால்,

" ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்"

எனும் நல்லந்துவனார் கூற்று நினைவிற்கு வருகிறது.

இம்முதுபெரும்புலவர் நம்மனோரை நோக்கி, ருபெர்ட் பிரவுணிங் (*Robert Browning*) எனும் ஆங்கிலமகாகவியின் உரையே தம்முரையாக,

"என்னோடு
யாண்டுபல வாக நீவிரும் வாழுமின்;
காண்டகு செம்மை ஈண்டுதற் குரிய;
நாள்பல வாக நலம்பல பெறுகுவீர்;
வாணாள்,
பின்னவைக் காக முன்னவை யியைந்தன;"

"அனைத்தும் ஒருபிழம் பதனுள் இளமை
ஒருபாற் பயனை உயர்த்தும்; மற்றொருபால்
அமைதியுங் காண்மின்; அச்சம் அகற்றுமின்;
நாதனை நம்புமின்; என அவன் நவின்ற
போதம் உளநம் வளாணாள் அனைத்தும்
அவன்திருக் கரத்தில் அமைந்தன கண்டீர்"
என அறிவுரை கூறி வாழ்த்துவார்போலும்.

இவரை வாழ்த்திய தமிழ்ப்புலவரது செய்யுட்பாகங்கள் சில வற்றைத் தருகின்றோம்.

"தொண்டை மண்டல முதன்மையோர் மரபினிற்றோன்றி
எண்டி சைக்கணுந் தன்பெயர் வழங்கவந் திருநீர்
மண்ட லத்தையாள் மன்னவர் மகிழ்வுடன் வழங்கு
திண்டி றற்பேறு பட்டமும் புனைதரு சீலன்"

"செந்த மிழ்க்கொரு தாயக மெனப்புவி செப்ப
வந்த மாமது ரைத்தமிழ்ச் சங்கநா வலரோ
டெந்த நாளுநற் றமிழ்தழைத் திடமுயன் றிடலே
முந்து மாதவ மெனக்கொளு முத்தமிழ்ப் புலவன்"

"மிக்க கேளிருங் கிளைஞரு மெய்ந்நெறி வழுவா
மக்க ளும்பிறர் யாவரு மாண்புபெற் றுயர்தற்
கொக்கு மென்றுதன் சொற்செயல் குணமெலா மொருங்கு
தக்க கட்டளை யாக்கொளத் திகழ்ந்திடு சதுரன்"

"மாசில் உள்ளம் தூய ஒழுக்கம்
ஈசற் கன்பு தேசுறு செல்வம்
என்னும் பெருமைகள் துன்னும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
திருவுடைச் சீர்சால் பெரியர்"

"தொண்டை மண்டலத் தொல்வே ளாண்குலப்
பண்டைநற் பண்புகள் பலவும் பாங்கினில்
விளங்குங் குலநல விளக்கே"

"பணத்தால் மேன்மைக் குலத்தால் நல்வங்
கணத்தால் உயர்கவி மணத்தால் ஆயிரம்
முழுமதி நோக்கிய செழுமையாற் பெரியோன்".

என அவையகத்தார் கூறிய இவையனைத்தும் இவர்க்கு ஒவ்வுவ வாதலின், யாமும் இவர்தாம்,

"குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின் பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின் மையென
இருபெரு நிதியமும் ஒருதா மீட்டும்
தோலா நாவின் மேலோர்"

ஆமென அறிந்து உளமகிழ் வெய்துகின்றேம்.

# 6. யாழ்நூல்

## யாழுறுப்பியல்

### 1. வில்யாழ்

பழந்தமிழ்நாட்டுப் பஃறுளி யாற்றங்கரைக்குச் செல்வோமாக. மிகமிகப் பழையகாலம். முல்லைநிலம். மரங்களடர்ந்த சோலையின் பாங்கர் ஒரு பசும்புற்றரை. புற்றரையிலே, பசுக்களுங் கன்றுகளும் மேய்கின்றன. கார்காலம்; செடி கொடிகளிலே பூக்கள் நிரம்பி யிருக்கின்றன. இடையனொருவன் வருகிறான். காலிலே செருப்பு அணிந்திருக்கிறான். உறுதியான உடல்; மயிரடர்ந்த தோட்கட்டு; பால்மணம் நாறுகின்ற தலைமயிர். அரையிற்கட்டிய ஆடையின் ஒரு தலைப்பினைத் தோளிற்போட்டிருக்கிறான். பலநிறமாகிய கோட்டுப் பூக்களையும் கொடிப் பூக்களையும் கலம்பகமாகத் தொடுத்த மாலையொன்று தோளிற்கிடக்கிறது. இடுப்பிலே ஒரு மூங்கிற்குழல் செருகப்பட்டிருக்கிறது. ஒரு கையிலே கோல், மற்றொரு கையிலே வில் வடிவமான ஒரு பொருள். ஒரு வில்லல்ல, பலவிற்கள் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கக் காண்கின்றோம்.

நண்பகற்காலமாகிறது. இடைச்சி ஒரு குடுவையிலே பாலிட்டுக் காய்ச்சிய கூழ் கொண்டு வருகிறாள். இடையன் கூழினை யுண்டு நீரருந் துகிறான். பின்பு கையிலே குழலை எடுக்கிறான். சிலநாட்களுக்குமுன் அம்மூங்கிற்குழல் இடையனால் இசைக்கருவியாக்கப்பட்டது. தீக்கடை கோலினாலே, புகையெழக் கைம்முயன்று தீயைக் கடைந்துகொண்டு, அக் கடைகோலிலுள்ள தீயினாலே மூங்கிலிலே துளையிட்டான். குழலிலே பாலைப்பண் வாசிக்கிறான். இடைச்சி கேட்டு மகிழுகிறாள்.

அவள் போனபின்பு வில்வடிவமான கருவியை யெடுக்கிறான். அஃது ஒரு வில்யாழ். அக் கருவியையும் இடையன் தானே செய்து கொண்டான். உள்ளே துளையுடைய* குமிழமரக் கொம்புகளை வில்லாக வளைத்து, †மரல் நாரினாலே திரித்த கயிற்றினை நாணாகக் கட்டி யிருக்கிறான். ஒரே அளவான ஏழு விற்கள் இருக்கின்றன. நாண்கள்

---

* குமிழ் – பெருங்குமிழ மரம்; *Gmelina Asiatica.*

† மரல் – மருள்; *Sanjevicria Rox burghiama.*

மாத்திரம் தாழ்த்தியும் உயர்த்தியுங் கட்டப்பட்டனவாய், அளவு வேறு பட்டிருக்கின்றன. வில்யாழின் உருவத்தைப் படத்திற் காண்க. இடையன் நரம்புகளைத் தெறித்து இசையொப்புமையினை ஆராய்கிறான்.

மாலைக்காலமாய்விட்டது. குழலிலே முல்லைப்பண் வாசித்துக் கொண்டு, பசுக்களையுங் கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு தன் குடிசைக் குச் செல்கிறான். உணவுக்குப்பின், தான் இசைகூட்டிவைத்த வில்யா ழினை யெடுத்து, இனிய குறிஞ்சிப்பண் வாசிக்கிறான். இடைச்சி கேட்டு மகிழுகிறாள்.

இடையனுடைய வரன்முறை நமது சொந்தக் கனவு அல்ல. தலைச் சங்கத்துக்கு முன்னடந்த இந்நிகழ்ச்சியினைக் கடைச்சங்க காலத்துப் புலவராகிய கடியலூர் உருத்திரங்கண்ணனார் கனவுகண்டு, தாம் தொண்டைமான் இளந்திரையனைப் பாடிய பெரும்பாணாற்றுப் படையினுள்ளே பொதிந்துவைத்தார். அவ்வாறு பொதிந்துவைத்த செய்யுட் பகுதியினைத் தருகின்றோம்.

தொடுதோல் மரீஇய வடுவாழ் நோனடி
விழுத்தண் டூன்றிய மழுத்தின் வன்கை
உறிக்கா வூர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்
மேம்பா லுரைத்த வோரி யோங்குமிசைக்
கோட்டவும் கொடியவும் விரைஇக் காட்ட
பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
ஒன்றமர் உடுக்கைக் கூழார் இடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
அந்து ணவிர்புகை கமழக் கைம்முயன்று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்
இன்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன் புலம் போகி.

பல்காற்பறவை யென்றது தேன்வண்டினை. இடைய னிசைத்த குறிஞ்சியிசையினைக்கேட்ட வண்டுகள், அவ்விசை தமது சுற்றத்தின் ஓசையெனக் கருதிச் செவிகொடுத்துக் கேட்டனவெனப் புலவர் கூறுகின்றார்.

வண்டின் இமிர்தல், சேய்மையிலுள்ளோர் செவிப்படாது, அண்மையிலுள்ளோருக்கு மாத்திரம் புலப்படுதல்போல, வில்யாழின்

இசையும் மெல்லென்ற முரற்சியாய் அண்மையிலுள்ளோருக்கு மாத்திரம் புலப்படுவது. இதற்குக் காரணமெதுவெனில், உள்ளே துளையுடைய குமிழங்கொம்பு வில்யாழிலே பத்தராகவும் கோடாகவும் அமைந்து நின்றதாதலின், ஒலிபல்குதற்கு இடமில்லாது போய்விட்டது. பத்தரென்னும் உறுப்புத் தனியாக அமைந்து, அளவிற் பெரிதாகுமிடத்து, ஒலி பல்கும். முதலிலே வில்யாழிற்குப் பயன்பட்ட குமிழங் கொம்பு இனிய ஓசை பிறத்தற்கு இடமாயிருத்தலினைக் கண்ட இசைக்கருவியாளர்கள், பத்தர் செய்தற்கு அம்மரமே தகுதியுடையதெனக் கொண்டார்கள். மரம் பருத்தபின்பு கொம்பிலே இயல்பாக அமைந்த உட்டுளை மறைந்துவிடும். இம்மரத்தினை வேண்டிய கணக்குக்குத் துண்டமாக அறுத்தெடுத்து, இலக்கணமமைந்த உருவாக்கி, உள்ளே குடைந்து வறுவாயாக்கி, அவ் வறுவாயினைப் போர்வைத் தோலினால் மூடி, அத்தோல் இறுகும் வண்ணம் சுள்ளாணிகளை முடுக்கிப் பத்தரினை அமைத்துக் கொண்டார்கள். இவ்வாறு அமைந்த பத்தர் ஒலியினை நன்றாகப் பல்கச்செய்தது. மற்றைய யாழ்களைக் கூறும்போது இப்பொருளினை இன்னும் விரிப்பாம்.

நரம்புகள் தளரின் அவற்றில் எழுகின்ற நாதம் மந்தசுரமாதலையும், இறுகக் கட்டப்படின் நாதம் உச்சசுரமாதலையும், நரம்புக்கருவிகளனைத்திலும் காணலாகும். உச்சசுரமாக்குதல் மந்தசுரமாக்குதலென இக்கால வழக்கிலே கூறப்படுஞ் செயல்களைப் பழந்தமிழர் 'வலித்தல்', 'மெலித்தல்' என வழங்கினார்கள். மாடகம் என்னும் முறுக்காணி சிற்சில கருவிகளிலே நரம்பினை வலித்தல், மெலித்தல் செய்தற்குப் பயன்பட்டது. கோட்டிலே அமைந்து நரம்பு துவங்குவதற்கு இடமாய்நின்ற வார்க்கட்டுச் சில கருவிகளிலே வலித்தல், மெலித்தல் செய்தற்கும் பயன்பட்டது. இவற்றின் விரிவெல்லாம் பின்னர்க்கூறுதும். வில்யாழிலே நரம்பினை வலித்தல், மெலித்தல், செய்தற்குரிய உறுப்பு எவ்வாறு அமைந்து நின்றது எனக் காணும் பொருட்டு வில்யாழின் அமைப்பினைச் சிறிது உற்று நோக்குவோமாக.

இக்கருவி முற்றிலுங் குமிழங் கொம்பினாலும் மரல் நாரினாலும் அமைந்தது. இதன் அளவுகளை ஆராய்ந்து காணப்புகுவாம். பழைய காலத்து அளவுகோல் இருசாண் அளவானது. ஒருசாண் பன்னிரண்டு விரலாகப் பிரியும். இக்காலத்து மேனாட்டு அளவின்படி, சாண் என்பது 9 அங்குலம் ( *inch* ); விரல் $\frac{3}{4}$ அங்குலம். பழைய காலத்துச் செய்தி கூறுகின்றோமாதலினாலே, பழைய அளவுகோலைக் கொள்வதே முறையாகும்.

ஆறு சாண் நீளமும், ஆறு விரலுக்குக் குறையாத சுற்றளவுமுள்ள நேரிய குமிழங் கொம்புகள் ஏழு தேடிக்கொள்க. மேலும், முன்னர்க்

குறித்த சுற்றளவுள்ளனவாய் ஐஞ்சாண் நீளத்தில் இரண்டு, இருசாண் நால்விரல் நீளத்தில் ஒன்று, இருசாண் நீளத்தில் பதினாறு, ஒருசாண் நால்விரல் நீளத்தில் இரண்டு ஆக இருபத்தொரு கொம்புகள் தேடிக் கொள்க.

நரம்புக்குப் பயன்படுகின்ற மரல்நார்க் கயிறு, சுத்தமான நாரினை மெல்லிய நூலாக நூற்றுக், கொடும்பின்றிக் கயிறாகத் திரிக்கப்பட்டதாக இருக்கவேண்டும். அதன் பருமனை அநுபவத்திற் கண்டறிந்துகொள்க. கொம்புகளைக் கட்டுதற்கியன்ற கயிறு சணற் கயிற்றுப் பருமனாக விருக்கலாம்.

ஐஞ்சாண் நீளத்துண்டு இரண்டினையும், இருசாண் நீளத்துண்டு களில் இரண்டினையும் எடுத்துக்கொள்க. இவற்றை நேர்கோண நாற் கோண வடிவாக வைத்து நார்க் கயிற்றினாலே இறுக்கமாகக் கட்டிக் கொள்க. கட்டுதற்குமுன் துண்டுகளின் இரு தலைகளிலும் தடை வெட்டிக் கொள்க.

அறுசாண் நீளத்துண்டு இரண்டினை எடுத்து, வில்வடிவாக வளைத்து, நாற்கோணத்தினுள்ளே இருமருங்கிலும் வைத்து, வில்நடு வையும், ஐஞ்சாண் நீளத்துண்டின் நடுவையும் இணைத்துநிற்பனவாக, ஒருசாண் நால்விரற் றுண்டிரண்டினையும் பக்கத்துக்கு ஒன்றாக வைத்துக் கட்டுக. இவற்றினைக் கணையென்பாம். அறுசாண் நீளத்துண்டுகள் எஞ்சிநின்ற ஐந்தினையும் எடுத்து, வில்லாக வளைத்து, இடையிலே நிரையாக வைத்து, நாற்கோணத்தின் இருதலையிலும் நின்ற குறுக்குத் தடிகளில் ஏழு விற்களின் இருதலையினையும் நன்றாக வரிந்து கட்டிவிடுக.

இனி, நரம்பு கட்டுதலைக் கூறுவாம். மிகமேலே நிற்கும் நரம்பு வில்லினுள்ளே நாலுசாணளவாக நிற்கும்படி, வில்லினிருதலையிலும் மெல்லிய துளையிட்டுநரம்பினைத் துளைகளினூடே செலுத்தி, வலக்கைப் பக்கத்திலே நரம்பின் தலைப்பினுக்கு நேராக இருசாண் துண்டொன்றினை ஏழு விற்களுக்கும் அணையவைத்து, இருதலையினும் நின்ற விற்களோடு கட்டி, அத்துண்டிலே நரம்பின் தலைப்பினை நன்றாகக் கட்டிவிடுக. மற்றத் தலைப்பிலே முறுக்காணி அமைக்கும் முறையினைப் பின்பு கூறுவாம். இனி, ஏழாவது வில்லிலே, அஃதாவது படத்தில் நமக்கு அணிமையாக விருக்கிற வில்லிலே, நரம்பானது இருசாண் இருவிரல் நீளம் வில்லிடையே நிற்ப தாகவும், வில்லின் நடுவிலிருந்து இருதலைப்பும் சமதூரத்தில் நிற்பதா கவும் அமைத்துத், துளையிட்டு, நரம்பினைச் செலுத்தி, முன்போல வலப்புறத்துத் தலைப்பினை இருசாண் துண்டொன்றிற் கட்டி, அத்துண் டினை, விற்களோடு அணையவைத்து, இருதலையினுங் கட்டிவிடுக. முதல் நரம்பு ஏழாம் நரம்புத் துளைகளை இணைக்கின்ற நேர்கோடொன்றினை

ஏழு விற்களின்மீதும் இடப்புறத்தில் வரைந்து கொள்க. அத்தகைய நேர்கோட்டினை வலப்புறத்திலும் வரைந்து கொள்க. குறித்த நேர் கோட்டு நிரையிலே, இருபுறத்திலும், முன்போலவே துளையிட்டு, நரம்புகளைச் செலுத்தி, வலப்புறத்துத் தலைப்புகளை முன்போலவே இருசாண் துண்டுகளிற் கட்டி, அத்துண்டுகள் விற்களில் அழகுற அணை யும்படி வைத்துக் கட்டிவிடுக.

இனி, முறுக்காணி அமைக்கும் முறையினைக் கூறுவாம். இருசாண் துண்டுகளில் எஞ்சிநின்ற ஏழினையுமெடுத்து, ஒருதலை ஆறுவிரற் சுற்றள வாக இருக்க, மற்றத்தலை மூன்றுவிரற் சுற்றளவாகும்படி, சுற்றிலும் சாய்வாகச் சீவி (இழைத்து)க் குறைத்துக் கொள்க. ஏழு துண்டினையும் இவ்வாறு சீவியெடுக்க அவை ஏழுமுறுக்காணி ஆயின. ஏழினையும் நரம் புக்கு ஒன்றாக வைத்து, வில்லினின்று நரம்பு வெளிவருமிடத்துக்கு நேரே துளையிட்டு, நரம்பினைத் தொடுத்து, மூன்றுநான்கு சுற்று முறுக்காணியிலே சுற்றிய பின்பு, நரம்பு இறுகும் வண்ணமாகக் கட்டிக்கொள்க. ஏழு முறுக்காணிகளையும் நிரலாக வைத்து, இருதலை யினும் நின்ற விற்களிலே செம்மையாகக் கட்டிக் கொள்க.

இனி, ஒற்றுறுப்பு அமைக்கும் முறையினைக் கூறுவாம். இருசாண் நால்விரல் நீளமாகிய துண்டினைச் சுற்றிலும் நன்கு சீவி உருட்டும் பொழுது முட்டின்றி உருளுவதாக்கிக் கொள்க. இத்துண்டினை ஏழு நரம்புகளின் கீழும் நெல்லளவு இடைவெளி நிற்கும்படி கணையிரண்டி லும் அணையவைத்து இறுக்கிக் கட்டிக்கொள்க. இவ்வொற்றுறுப்பிலே நரம்புகளழுத்தப்படின், அவை தமது நீளத்திற் செம்பாலாதல் வேண் டும். அதற்குத் தகவாகக் கணையிரண்டினையும் இடம் பெயர்த்துக் கட்ட வேண்டியிருப்பின், அப்படிச் செய்துக் கொள்க. கட்டுக்களையெல்லாம் இறுக்கமாக்கி, அவற்றின்மீது பிசின் பூசி உலரவிடுக.

வில்யாழிலே இசைகூட்டும் முறையினை இனி ஆராய்வாம். முறுக் காணி சாய்வாகச் சீவப்பட்டனவாதலினாலே, தலையினைப்பற்றி முன்னாக இழுக்கக் கட்டில் நின்று நெகிழ்தலும், பின்னாகத் தள்ளக் கட்டிலே யிறுகுதலும் அவை தமக்கு இயல்பாகும். முறுக்காணியை முறுக்கி நரம்பினை வலித்தல், மெலித்தல் செய்தபின், அதனைப் பின்னாகத்தள்ளி யிறுக்கிக்கொள்ளுதல் வேண்டும். நரம்புகளை உழைமுதற்கைக்கிளை யிறுவாக இசை கூட்டவேண்டும். அது செய்யும் முறையினைச் சுருக்கமாகக் குறிப்பிடுவாம். இசைநரம்பியலிலே கட்டளையாழினைக் குறித்துப் பேசுமிடத்து இப்பொருள் இன்னும் தெளிவடையும். யாழிசைக்கு அளக்குங்கோல் குழலிசையென்பதைப் பண்டையோர் அறிந்திருந்தனர்.

''நரம்பின் றீங்குரல் நிறுக்குங் குழல்போல்''

எனப் பாலைக்கலியினுள்ளே கூறியதனை மேலே எடுத்துக் காட்டினும். குழலிலே கேட்கும் உழைநரம்பிசையோடு ஒப்பிட்டு, இடையன் தனது வில்யாழி லுள்ள உழை நரம்பிற்கு இசை கூட்டினன். நாமும் அப்படியே செய்வோம். குழலமைக்குங் கணக்கு இசைநரம்பியலுட் கூறப்படும். உழைக்குக் கிளையாக ஒன்றி நிற்கும்படி ஐந்தாம் நரம்பாக நின்ற குரல்நரம்பினுக்கு இசை கூட்ட வேண்டும். உழைக்கு நட்பாக ஒன்றி நிற்கும்படி நான்காம் நரம்பாகி நின்ற தார நரம்புக்கு இசை கூட்ட வேண்டும். கிளைநட்பாக இசைகூட்டும் முறை இசைநரம்பியலிலே கூறப்படும். பிற்காலத்தார் கிளையினை விட்ஜ பஞ்சம சம்வாதித்வம் எனவும், நட்பினை விட்ஜ மத்திம சம்வாதித்வம் எனவும் வழங்கினர். குரலுக்குக் கிளையாக இளிநரம்பிற்கு இசை கூட்ட வேண்டும். இரண்டாம் நரம்பாகிய இளி மெலிவுத்தானத்திலே நின்றதாதலின், குரலுக்குக் கிளையாகிய சமன் தானத்து இளி அதன் செம்பாலாகும். அங்ஙனமாதலின், இளிநரம்பினை ஒற்றுறுப்பிலே அழுத்திக்கொண்டு இசையைக் கேட்க வேண்டும். இளிக்குக் கிளையாகத் துத்தத்துக்கு இசை கூட்ட வேண்டும். துத்தத்துக்குக் கிளையாக விளரிக்கு இசை கூட்ட வேண்டும். விளரி மெலிவுத்தானத்தில் நிற்றலின், நரம்பினை ஒற்றுறுப்பிலழுத்தி அதன் செம்பாலிலே இசையைக் கேட்க வேண்டும். விளரிக்குக் கிளையாக ஏழாம் நரம்பாகிய கைக்கிளைக்கு இசை கூட்ட வேண்டும். ஏழு நரம்புகளும் அவை தமது செம்பாலுமாகப் பதினுன்கு இசைநரம்புகள் வில்யாழிலே பெறப்படுவன. இவை, மெலிவு நான்கு, சமன் ஏழு, வலிவு மூன்றுகக் கொள்ளப்படுவன, மெலிவு நான்காவன முதல்நான்கு நரம்புகளும், சமன் எழாவன ஐந்தாம் ஆறும் ஏழாம் நரம்புகளும், முதல்நான்கு நரம்புகளின் செம்பால்களும், வலிவு மூன்றுவன ஐந்தாம் ஆறும் ஏழாம் நரம்புகளின் செம்பால்களும் ஆம்.

குறிஞ்சிப் பண்ணினியல்பு பண்ணியலினுள்ளே கூறப்படும். இங்கு ஏழ் பெரும் பாலைகளின் இயல்பைச் சுருக்கமாக ஆராய்வாம். வில்யாழிலே கட்டப்பட்டிருக்கின்ற நரம்புகளை முதனரம்பிலிருந்து ஏழாம் நரம்பு வரையியக்கி, ஈற்றிலே முதனரம்பின் செம்பாலினையும் இயக்கப் பெறுவது உழைகுரலாகிய அரும்பாலையாகும். இக்காலத்துக் குறியீட்டெழுத்துகளினுலே எழுதின், இது நி ச ரி க ம ப த நி என நிற்கும். இளி முதல் இளி யீருக, அஃதாவது, இரண்டாவது முதல் ஏழாவது நரம்புவரையியக்கி, முதலிரண்டு நரம்புகளின் செம்பாலினையும் இயக்கப் பெறுவது கோடிப்பாலையாகும். இது ச ரி க ம ப த நி ச என நிற்கும். விளரி முதல் விளரி யீருக, அஃதாவது, மூன்று முதல் ஏழு வரை யியக்கி, முதல் மூன்று நரம்புகளின் செம்பாலினையும் இயக்கப்

பெறுவது விளரிப்பாலையாகும். இது ரி க ம ப த நி ச ரி என நிற்கும். தாரம் முதல் தாரம் ஈறுக, அஃதாவது, நான்கு முதல் ஏழுவரை யியக்கி, முதல் நான்கு நரம்புகளின் செம்பாலினையும் இயக்கப் பெறுவது மேற்செம்பாலையாகும். இது க ம ப த நி ச ரி க என நிற்கும். குரல் முதற் குரலீறுக, அஃதாவது, ஐந்து, ஆறு, ஏழு என நின்ற நரம்புகளை யியக்கி, முதலைந்து நரம்பின் செம்பாலினையு மியக்கப் பெறுவது செம்பாலையாகும். இது ம ப த நி ச ரி க ம என நிற்கும். துத்தம் முதற் றுத்த மீறுக அஃதாவது, ஆறும் ஏழாம் நரம்புகளை யியக்கி, முதலாறு நரம்பின் செம்பாலினை இயக்கப் பெறுவது படுமலைப்பாலையாகும். இது ப த நி ச ரி க ம ப என நிற்கும். கைக்கிளை முதல் கைக்கிளை யீறுக, அஃதாவது, ஏழாம் நரம்பினை இயக்கியபின் ஏழு நரம்புகளின் செம்பாலினையும் இயக்கப்பெறுவது செவ்வழிப்பாலையாகும். இது த நி ச ரி க ம ப த என நிற்கும். இங்ஙனம் ஏழ்பெரும்பாலையுமாயினவாறு காண்க.

வில்யாழ் என்னும் இத் தலைப்பெயர்க்கீழ் யாம் இதுவரையும் எழுதியது,

"குமிழின்
புறக்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யா ழிசைக்கும் விரலெறி குறிஞ்சி"

என நின்ற பெரும்பாணாற்றுப்படை யடிகளுக்கு விளக்க வுரையாக அமையும்.

வில்யாழ்க் கருவியிலே, நரம்பாகக் கட்டப்பட்ட மரலானது, 'மரையாமரல் கவர மாரிவறப்ப' எனப் பாலைக்கலி ரு–ஆம் பாடலிலும், 'மரல்சாய மலைவெம்ப மந்தியுயங்க' எனப் பாலைக்கலி கஉ–ஆம் பாடலினும் சுட்டிக் கூறப்பட்டது. இது பாலை நிலத்திற்குரியது. மற்ற நிலங்களிலும் வளர்வது. தமிழ்நாட்டுக் குன்றுகளினும் பிறவிடங்களிலும் இன்னும் வளருகின்ற மருள் என்னும் செடியின் நீளமான கோடுகளிலிருந் தெடுக்கும் நார் நரம்புபோல் இசைதருகிறதாதலின் இக்காலத்து 'மருள்' பழைய 'மரல்' எனக்கொள்ள இடமுண்டு. பட்டுநூற் கயிற்றினை நரம்பாகக் கட்டுமிடத்து நல்ல நாதம் பிறக்கக் காண்கின்றேமாதலின், மரற் கயிறு கிடையாதிருப்பின், பட்டுநூற் கயிற்றினை நரம்பாகக் கட்டி, இசைகூட்டி இடையன் வாசித்த குறிஞ்சிப் பண்ணை நாமும் வாசிக்கலா.

இடையனமைத்துக் கொண்ட வில்யாழ், ஏழு நரம்போடு கூடிக், குறிஞ்சிப்பண் வாசித்தற்குத் தகவுடையதா யிருந்தது. அதற்கு முன் ஐந்து நரம்போடுகூடிய கருவியும் இருந்திருக்க வேண்டும். அவ்வாறு கொள்வதற்கு ஆதாரம் நமக்குப்பரிபாடலிலே கிடைக்கிறது. எட்டாம்

பரிபாடலிலே, 'ஏழ்புழை', 'ஐம்புழை' என வருவன, ஏழு துளையுடைய குழற்கருவியையும், ஐந்து துளையுடைய குழற்கருவியையுங் குறிப்பன. ஐந்துதுளைக் கருவியே முன்னர் உண்டாயிருக்க வேண்டும். அதனோடு கூட ஐந்து நரம்புடையதாய், வில்யாழ்போன்ற அமைப்பினையுடைய கருவியுந் தோற்றியிருக்கலாம். ஆடவருடைய குரலினையொத்த தாரம், மகளிரது குரலினை யொத்த குரல் என்னுமிவற்றோடு, உழை, இளி, துத்தம் என்னும் மூன்றுங்கூடிய ஐந்து நரம்புமே முதலில் உண்டானவை. ஐந்து நரம்பிலே பிறக்கும் இனிய இராகங்கள் சிலவுள. குரல் முதலாக எடுத்து, விளரி, கைக்கிளையை நீக்கிப்பாட, 'மது மாதவி' என்னும் இராகமாம் என்றும், தாரம் முதலாகவெடுத்து, விளரி, கைக்கிளையை நீக்கிப்பாட, 'இராமகிருதி' என்னும் இராகமாமென்றும், இளிமுதலெடுத்து, விளரி, கைக்கிளையை நீக்கிப்பாடத், 'தந்யாசி' என்னும் இராகமாமென்றும் நாரத சங்கீதமகரந்தம் கூறும். இவை இவ்வாறுதலைப் பண்ணியலினுட் காட்டுதும்.

மேலும், ப்ரதமம், த்விதீயம், த்ருதீயம், சதுர்த்தம் என்னும் நான்கினோடு மந்த்ரம் என ஒன்று சேர்த்து ஐந்து சுவரங்களே இருக் பிராதிசாக்கியத்திலே வழங்கப்பட்டனவென வடமொழியறிஞர் கூறுவர். பின்னுளிலே, க்ருஷ்டம், அதிஸ்வரம் என இரண்டு முறையே முதலிலும் ஈற்றிலும் சேர்க்கப்பட்டுச் சுவரங்கள் ஏழாயின என்பர். இதனுல் வடமொழி யிசைமரபிலும், ஆதியிலே ஐந்து சுவரங்கள் மாத்திரமே யிருந்தன என்னும் உண்மை தெளிவாகின்றது. சீனதேசத்தார் இன்றும் ஐந்து சுவரங்களோடுகூடிய இசையினையே வழங்கி வருகின்றனரென அறிகின்ரும்.

## 2. பேரியாழ்

அமராவதி நகரிலுள்ள சிலப்பதிகார காலத்துக் கல்லோவியம் ஏழின்மிக்க நரம்புகளுள்ள யாழினுருவத்தை நமக்குக் காட்டுகிறது. இவ்வோவியத்தின் நிழற்படத்தினைக் கண்ணுற்ற திரு. ஆனந்த குமாரசுவாமி யென்னும் ஈழநாட்டுப் பேரறிஞர் பழைமையான இக்கருவி சிலப்பதிகார காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் தமிழ் நாட்டிலே வழங்கி வந்தது என்பதையும், மிகப்பழைமையான இசைமரபொன்று தமிழகத்திலே இருந்து இறந்ததென்பதையும் உலகிலுள்ள பேரறிஞர்க்கு வெளியிட்டார்.

ஆச்சுபார்ட் பல்கலைக் கழகப் பதிப்பகத்தார் வெளியிட்ட இந்தியாவின் கலைமுது நிதியம் *(The legacy of India, Oxford Press)* என்னும் ஆங்கில நூலிலே, 329 ஆம் பக்கத்திலே, "வேதத்திற் கூறப்பட்டதும், பஞ்சசிகன் என்னும் இசைவல்லோன் ஏழு சுவரங்களையும், இருபத்தொரு

மூர்ச்சனைகளையும் ஒரே நரம்பிலே வாசித்துக் காட்டுதற்கு இயைந்ததும், பரதமுனிவர் கையாண்டதும் வீணையே'' என்னும் உண்மை சாதிக்கப்பட்டிருப்பதோடு, யாழ்க்கருவிக்கும் வீணைக்கருவிக்கு மிடையேயுள்ள வேறுபாடுந் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.

''புத்தசமயமானது எவ்விடத்திலும் பரவத் தொடங்கிய காலத்திலே, அச்சமயத் தலைவர்கள் வேத ஒழுக்கங்களையும், அவை தமக்குரிய குரு வகுப்பினரையும், பழைய ஆரிய மொழியையும் ஒதுக்கிவிட்டுப், பொதுமக்கள் வழங்கிய மொழியைத்தழுவிப் புதிய குரு வகுப்பையும், ஒழுக்க முறைகளையும் வகுத்துக்கொண்டார்கள். அதுபோலவே, ஆரிய வீணையையும், ஒதுக்கிவிட்டுப் பொதுமக்கள் கைக்கருவியாகிய வில்யாழையும் பிறவற்றையும் திருவிழாக் கொண்டாட்டங்களிலே வழங்கும்படி செய்தார்கள். ஆறும் நூற்றாண்டிலே, புத்த சமயம் நாட்டிலே ஒளி குன்றியதோடு, பழைய யாழும் மறைந்துபோயினது'' என்னுங் கருத்தும் மேற்குறித்த நூலிலே கூறப்பட்டிருக்கிறது.

முன்னாளிலே பாணன் கையிலும் பாடினி கையிலுமிருந்த யாழ்க் கருவியானது, இளங்கோவடிகள் காலத்திலே இசையாசிரியன் கையிலும் நாடக மகள் கையிலும் போய்ச் சேர்ந்துவிட்டது. அதற்கேற்ப அக்கருவியும் ''சித்திரப் படத்துட் புக்குச் செழுங்கோட்டின் மலர்புனைந்து, மைத்தடங்கண் மணமகளிர் கோலம் போல் வனப்பெய்தி'' விளங்கியது. ஆளுடையபிள்ளையாருடைய காலத்திலே, தெய்வமீந்த பொற்பலகைமீதேறி அன்பருள்ளத்தை யுருக்கிய அருட்கருவி யாயிற்று. கொங்குவேளும், திருத்தக்கதேவரும் நூலெழுதிய காலத்திலே, அரசிளங் குமரிகள் கையிலேறி, அவர் மனம் விரும்பிய காதலரை அவருக்கு அளிக்குங் கருவியாயிற்று.

சரித்திரகால வெல்லைக் கெட்டாத காலத்திலே, 'வில்யாழ்' எனப் பெயரிய குழவியாயுதித்து, மழலைச் சொற் பேசி, இடையர் இடைச்சியரை மகிழ்வித்துச், 'சீறியாழ்' என்னும் பேதைப் பருவச் சிறுமியாகிப், பாணனொடும் பாடினியொடும் நாடெங்குந் திரிந்து, ஏழைகளும் இதயங் களிப்பெய்த இன்சொற் கூறிப், பின்பு 'பேரியாழ்' என்னும் பெயரோடு பெதும்பைப் பருவ மெய்திப், பெரும்பாணரொடு சென்று, குறுநில மன்னரும், முடிமன்னரும், தமிழ்ப் புலவரும், கொடைவள்ளல்களும் கேட்டு வியப்பெய்தும் வண்ணம் நயம்பட உரை பகர்ந்து, அதன்பின், மங்கைப்பருவ மெய்தி, அப் பருவத்திற் கேற்பப், புதிய ஆடையும் அணிகலனும் பூண்டு, நாடக அரங்கத்திலே திறமை காட்டி, மடந்தைப் பருவம் வந்து எய்துதலும், திருநீலகண்டப் பெரும்பாணரோடும், மதங்கசூளாமணியாரோடும் அம்மையப்பர் உறைகின்ற திருக்கோயில்கள் பலவற்றை வலம் வந்து, தெய்வ இசையினாலே அன்பருள்ளத்தினை

புருக்கி, முத்தமிழ் விரகராற் பாராட்டப்பட்டு, அரிவைப் பருவம் வந்து எய்துதலும், அரசிளங் குமரிகளுக்கு இன்னுயிர்ப் பாங்கியாகி, அவர்க் கேற்ற தலைவரை அவர்பாற் சேர்த்திச், சீருஞ் சிறப்பு மெய்தி நின்ற 'யாழ்' என்னும் மென்மொழி நங்கை இருந்தவிடந் தெரியாமல் மறைந்து போயினுள்.

பழைமை பொருந்திய இவ் விசைக்கருவி மறைந்ததோடு, அதன் வழி யெழுந்த பண் மரபும் மறைந்துபோயிற்று. யாழ் வாசித்த பாணனுந் தன் தொழிலினை இழந்துவிட்டான்.

திருமுறை கண்ட சோழ மன்னன், செல்லரித்த ஏடுகளிலிருந்து தேவாரச் செழும்பாடல்களை எழுதுவித்துக்கொண்டு, பண் வகுக்க இசை வல்லாரைக் காணுமையினுலே, கவல்கின்ற தருணத்திலே, ஆண்டவனுடைய திருவருளினுலே, திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனுர் மரபிலே யுதித்த பெண்ணெருத்தி பண் வகுத்துத் தந்தனளென அறிகின்ருேம். பழைய இசை யிலக்கணம் வல்லாரோ, அவ் விசையினைக் கூறும் நூலோ அக் காலத்திலிருந்திருப்பின், அரசன் கவற்சி யின்றித் தான் எடுத்த காரியத்தை நிறைவேற்றியிருப்பான். ஆதலினுலே, பழந் தமிழிசை யிலக்கணம் அக்காலத்திற்ருனே வழக்கு வீழ்ந்துவிட்ட தெனக் கொள்ள வேண்டியிருக்கிறது. முற்றிலும் வீழ்ந்துவிடவில்லை யென்பதற்குச்சில சான்றுகள் உள. அவற்றினுட் சிறந்ததொன்று பதின்மூன்ரும் நூற்ருண்டிலே யிருந்த சாரங்கதேவர் தாமியற்றிய சங்கீத ரத்திஞகரத்திலே தேவாரப் பண்கள் சிலவற்றுக்கு இலக்கணங் கூறி, இவை தேவாரத்திற் காணப்படுவ வெனக் குறிப்பிடுதலேயாம்.

சங்கமருவிய பத்துப்பாட்டிலும் தொகை நூல்களிலும் ஆங்காங்குக் கிளந்தோதப்பட்டிருக்கும் இசைக் கருவியி னிலக்கணங்களைத்தானும் இடைக் காலத்துப் பேரறிஞர் ஆராய்ந்துணர முயன்ருரல்லர். ''பழையதோர் பொல்லம் பொத்திய பத்தர்'' எனவும், ''நெடுங் கொடிக் குறுங்காய்ப் பத்தர்'' எனவும், திருவிளையாடற் புராணத்திலே பரஞ்சோதி முனிவர் கூறுதலை நோக்குமிடத்து, அவர் காலத்திலே வரலாற்று முறை எவ்வளவு தூரம் மறக்கப்பட்டிருந்ததென்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

பத்துப் பாட்டினுள் யாழுறுப்புணர்த்தும் பகுதிகளை ஒருங்கு நிறுவி, அவற்றின் உதவிகொண்டும், வெளிநாட்டு இசை வரலாறு களோடு ஒப்பு நோக்கியும், யாழுறுப்புகளின் இயல்பினை ஆராய்ந்தறிய முயல்வோமாக.

''குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்
விளக்கழல் உருவின் விசியுறு பச்சை

எய்யா இளஞ்சூற் செய்யோள் அவ்வயிற் (று)
ஐதுமயிர் ஒழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
அளைவாழ் அலவன் கண்கண் டன்ன
துளைவாய் தூர்ந்த துரப்பமை ஆணி
எண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
அண்ணா வில்லா அமைவரு வறுவாய்ப்
பாம்பணந் தன்ன ஓங்கிரு மருப்பின்
மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவின்
ஆய்தினை யரிசி யவையல் அன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையல்
மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன
அணங்குமெய்ந் நின்ற அமைவரு காட்சி
ஆறலை கள்வர் படைவிட அருளின்
மாறுதலை பெயர்க்குமருவின் பாலை''

—பொருநராற்றுப்படை, 4–22

பத்தலினையும், பொல்லம்பொத்திய பச்சையாகிய போர்வையினையும், ஆணியினையும், வறுவாயினையும், மருப்பினையும், திவவினையும், நரம்பின் தொடர்ச்சியினையும், காட்சியினையுமுடைய யாழ்.

''அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்
பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி
காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற்
பாசிலை யொழித்த பராஅரைப் பாதிரி
வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன்
உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சைப்
பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூக்
கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை
உருக்கி யன்ன பொருத்துறு போர்வைச்
சுனைவறந் தன்ன இருள்தூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன பின்னேந்து கவைக்கடை
நெடும்பணைத் திரள்தோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கும் மெலிந்துவீங்கு திவவின்
மணிவார்ந் தன்ன மாயிரு மருப்பின்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
தொடையமை கேள்வி''

—பெரும்பாணாற்றுப்படை, 1 - 16

பச்சையாகிய போர்வையினையும், வறுவாயினையும், கவைக்கடையினையும், திவவினையும், மருப்பினையும், நரம்பின் தொடர்ச்சியினையுமுடைய யாழ்.

> '' பைங்க ணூரகம் பாம்புபிடித் தன்ன
> அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்துவீங்கு **திவவின்**
> மணிநிரைத் தன்ன **வனப்பின் வாயமைத்து**
> வயிறுசேர் பொழுகிய வகையமை **அகளத்துக்**
> கானக் குமிழின் கனிநிறங் கடுப்பப்
> புகழ்வினைப் பொலிந்த **பச்சை**யொடு தேம்பெய்து
> அமிழ்துபொதிந் திலிற்றும் அடங்குபுரி **நரம்பின்**
> பாடுதுறை முற்றிய பயன்றெரி கேள்விக்
> கூடுகொள் இன்னியம்''

—சிறுபாணாற்றுப்படை, 221 – 229.

பச்சையோடே வாயமைக்கப்பட்டு, வனப்பினையும், திவவினையும், அகளத்தினையும், நரம்பினையுமுடைய இன்னியம்.

> '' தொடித்திரி வன்ன தொண்டுபடு **திவவிற்**
> கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
> குரல்ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி **நரம்பின்**
> அரலை தீர உரீஇ வரகின்
> குரல்வார்ந் தன்ன நுண்டுளை யிரீஇச்
> சிலம்பமை பத்தல் பசையொடு சேர்த்தி
> இலங்குதுளை செறிய ஆணி முடுக்கிப்
> புதுவது புனைந்த வெண்கையாப் பமைத்துப்
> புதுவது போர்த்த பொன்போற் **பச்சை**
> வதுவை நாறும் வண்டுகம ழைம்பால்
> மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்து
> அடங்குமயிர் ஒழுகிய அவ்வாய் கடுப்ப
> அகடுசேர்பு பொருந்தி அளவினிற் றிரியாது
> கவடுபடக் கவைஇய சென்றுவாங் **குந்தி**
> நுணங்கரம் நுவறிய நுண்ணீர் மாமைக்
> களங்கனி யன்ன கதழ்ந்துகிளர் உருவின்
> வணர்ந்தேந்து **மருப்பின்** வள்ளுயிர்ப் பேரியாழ்''

—மலைபடுகடாம், 21 – 37

திவவினையும், நரம்பினையும் பச்சையினையும், உந்தியினையும் மருப்பினையுமுடைய பேரியாழ்.



படம் II

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த யாழ்

கடைச் சங்க காலத்திலும், அதற்கு முன்னுந் தோன்றிய சான்றோர் செய்யுட்களினுள்ளே, வில்யாழும், சீறியாழும், பேரியாழுமே குறிக்கப்பட்டிருக்கின்றன. சகோடயாழும், மகரயாழும், செங்கோட்டியாழும், சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும், பெருங்கதையிலும் காணப்படுவ.

இலண்டன் மாநகர்ப் பழம்பொருட் காட்சிச்சாலையிலேயுள்ள அமராவதி நகர்க் கல்லோவியத்திலே காட்டப்பட்டிருப்பது சகோடயாழ். இதிலே, திவவு என்னும் உறுப்பு இலது. நரம்புகளை வலித்தல் மெலித்தல் செய்யும் மாடகம் என்னும் முறுக்காணி பத்தரிலே அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். பத்தர் யாழ் வாசிக்கும் பெண்ணின் உடலினுல் மறைவுண்டிருத்தலின், நாம் பத்தரினையும், மாடகத்தினையும் காணமுடியவில்லை; கோடும் நரம்புமே தோற்றுகின்றன. கோட்டினுருவத்தையும், யாழ் வாசிக்கும் பெண்ணின் உருவத்தோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்துப் பெறப்படுகிற கோட்டின் நீளத்தினையுங்கொண்டு, இக்கருவியின் வடிவம், அளவு முதலியவற்றை ஒருவாறு கணித்தறியலாம். இரண்டாம் நூற்றுண்டுக் கல்லோவியத்திலே சகோடயாழுருவத்தினை நாம் காணப்பெற்றது, இசை மடந்தை நமக்கு அளித்த பெரியதோர் அருட்கொடையே. பேரியாழினைப் பொறுத்தவரையில், அதனுருவத்தினை நமது நாட்டிலே காணப்பெற்றிலேமெனினும், கடல்கோளின்பின் தமிழர் கடல்கடந்து சென்று குடியேறிய பிறநாடுகளிலே இக்கருவியின் உருவத்தினைக் காணக்கூடியதாயிருக்கிறது.

எகிப்தியரும், பழந்தமிழரைப் போலவே, தாரம் முதலாக நரம்புகளைப் பிறப்பித்தார்களென அறிகின்றும். எகிப்து நாட்டிலே இறந்த மன்னர்களுடைய உடலினைப் பாதுகாத்து வைத்திருக்கும் ஈமக் கோபுரங்களிலே (*Pyramids*) வரையப்பட்ட யாழ் வடிவங்களைக் கண்ட மேனுட்டறிஞர் அவற்றின் உருவச் சாயல்களை வெளியிட்டிருக்கின்றனர். எகிப்திய மொழியிலே யாழ் 'நங்கா' எனப்பட்டதென்பர். இற்றைக்கு மூவாயிரத்தைஞ்ஞூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த எகிப்திய யாழ்கள் சிலவற்றைப் பிரித்தானிய காட்சிச்சாலை (*British Museum*) யிலே நாம் இன்றுங் காணலாம். இக்காலத்திலே மெசப்பொடேமியா என வழங்கும் நாட்டில் ஒரு பாலிலே, முன்னுளிலிருந்த சால்தெயாவின் தலைநகராகிய ஊர் நகர மிருந்தவிடத்தினை அகழ்ந்து ஆராய்ந்தபோது கண்டெடுத்த அழகிய யாழ்க்கருவியொன்று பாக்தாத் நகரத்துக் காட்சிச் சாலை (*Baghdad Museum*) யிலே வைக்கப்பட்டிருக்கிறது. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்த இக்கருவியின் உருவத்தினை *II* ஆம் படத்திற் காண்க.

பழைய எகிப்திய யாழ்களிலும், போர்வைத்தோல் இருகூறுகி, நடுவிலே பொல்லம் பொத்தப்பட்டிருந்தது. போர்வையின் கீழுள்ள

யாப்புறுப்பிலே கட்டப்பட்ட நரம்பு பொல்லம் பொத்தலினூடாக வெளியே கொண்டுவரப்பட்டுக் கோட்டிலமைந்த முறுக்காணிகளிலே தொடுக்கப்பட்டிருந்தது. பத்தரானது தோணி வடிவாகவும், மகரமீன் வடிவாகவும், குடத்தின் வடிவாகவும் பலதிறப்பட்டிருந்ததெனக் காண்கின்றும். போர்வைத் தோலினை நீக்கப் பத்தரின் வறுவாய் தோற்றும். தமிழ் நாட்டு யாழ்களிலே இது எண்ணுட்டிங்கள் வடிவிற்ருக விருந்ததெனத் தமிழ்ப் புலவர் வாய்மொழியால் அறியக்கிடக்கின்றது. இதனுற் பத்தரினது மேற்புறத்தில் ஒருபாதியே வறுவாயாக்கப்பட்டதென்பதும், இதனூடாக மற்றப் பாதி மரமுங் குடைந்தெடுக்கப்பட்டமையின், ''இருள்தூங்கு வறுவா'' யாயிற்று எனவும் அறிகின்றும். மலை முழைகளிலிருக்கும் நீர்ச் சுனைகள் நீர் வற்றிய காலத்து, இருள்தூங்கிய வறுவாயாகத் தோற்றுவதை மலையில் வாழ்வோர் அறிவர். ''குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்'' எனப் பத்தர்ப் புறத்தின் கீழ்ப்பாகம் கூறப்பட்டது. போர்வைத்தோலினைப் பத்தரொடு பொருத்தும் சுள்ளாணிகளின் தலை நண்டின் கண்ணைப் போலப் புறப்பட்டுத் தோற்றும்.

வறுவாயும் துளையுமமைந்து, போர்வைத்தோல் சேர்க்கப்படாதிருக்கும் பத்தரின் மேற்புறத்தோற்றம் மேலே காட்டப்பட்டது. 'குளப்புவழியன்ன கவடுபடு பத்தல்' எனப் பத்தர்ப்புறத்தின் கீழ்ப் பகுதியின் தோற்றம் கூறப்பட்டது. மான் குளம்பு அழுந்திய இடம், நடுவுயர்ந்து, இருபுறமும் தாழ்ந்திருக்கும் தோற்றம்போலப், பத்தரின் கீழ்ப்புறம் அமைந்திருப்பதனை *III* ஆம் படத்திற் காண்க. அப்படத்திலே யுள்ள போர்வைத்தோல் இரு துண்டாக அமைந்து முழுநீளமும் பொல்லம் பொத்தப்பட்டிருக்கிறது. மேலே காட்டிய படத்திற் போல, வறுவாய் எண்ணுட்டிங்கள் வடிவிற்ருக அமையுமிடத்துப், பொல்லம் பொத்துதல் போர்வைத்தோலின் ஒரு பாதியில், அஃதாவது, வறுவாயை மூடுகிற பாதியில் மாத்திரம் அமையும், நரம்பு நிற்கும் பகுதி அதுவாதலின்.

> '' வதுவை நாறும் வண்டுகம ழைம்பான்
> மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத்து
> அடங்குமயிர் ஒழுகிய அவ்வாய் கடுப்ப'' எனவும்,

> '' எய்யா இளஞ்சூற் செய்யோள் அவ்வயிற்று
> ஐதுமயிர் ஒழுகிய தோற்றம் போல'' எனவும்

கூறியிருத்தலின், மடந்தையது மார்பிடத்தையணுகிப், பின்பு இல்லையான மயிர் ஒழுங்குபட்டுக்கிடக்கின்ற அழகிய வயிற்றிடத்தின் தோற்றம், பொல்லம்பொத்திய போர்வையின் தோற்றம் என்பது பெறப்

பட்டது. வறுவாயினை வயிற்றிடமாகவும், மேற்பாதியினை மார்பிடமாகவுங் கொண்டு நோக்கப், பொல்லம்பொத்துதல் வயிற்றிடத்திலே மயிர் ஒழுங்குபோல அமைந்துகிடப்பது தெளிவாகின்றது. அவ்வாறு அமைந்த போர்வைத் தோலின் உருவத்தை *IV* படத்திற் காண்க.

> ''பரியரைக் கமுகின் பாளையம் பசும்பூ
> கருவிருந் தன்ன கண்கூடு செறிதுளை'' எனவும்
>
> ''வரகின் குரல்வார்ந் தன்ன நுண்டுளை'' எனவும்

கூறியது பொல்லம் பொத்துமிடத்திற் றுளையினையாம். ''பாதிரி வள்ளிதழ் மாமலர் வயிற்றிடை வகுத்ததன், உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சை'' எனவும், ''பொன் போற் பச்சை'' எனவும், ''விளக்கழ லுருவின் விசியுறு பச்சை'' எனவும் கூறினமையின், போர்வையாக்குதற்குரிய தோலாகிய பச்சை, துவரூட்டப்பெற்று, அழகிய சிறந்த தோற்றத்தினை யுடையதாயிருந்ததென்பது பெறப்பட்டது.

யாப்பு என்பது, பத்தரின் குறுக்களவே நீளமாகச், சிறுவிரற் புருமனுக, யானைத்தந்தத்தினுலே செய்யப்பட்டு, நரம்பு தொடுப்பதற்கும் நரம்பி னசைவினைப் பத்தரிலே தாக்கி ஒலியைப் பெருக்குதற்கும் அமைந்த தோருறுப்பு. இது பத்தரினுள்ளே செறிக்கப்படும்.

உந்தி யென்பது, போர்வைத் தோலிற்கும் யாப்புறுப்புக்குமிடையே அமைந்து நிற்பதோ ருறுப்பு. 'சென்று வாங்கு உந்தி' யென்றமையின், இது, உயர்ந்து, வளைந்து, பொல்லம் பொத்துதலின் கீழே போர்வைத் தோலினைத் தாங்கி நிற்பது. யாப்பிற் கட்டிய நரம்புகள் இதனூடாக வருவ வாதலின், இதனெரு பகுதி பகுக்கப் பட்டிருக்கும். (படத்தைப் பார்க்க). 'உந்தி' யென்னுஞ் சொல் 'உந்து' என்னும் வினையடியாகப் பிறந்ததென்பது, 'சென்று வாங்கு உந்தி' என்பதனுற் றெளிவாகின்றது. அங்ஙனமாதலின், உந்தி யென்னும் பெயர் கொப்பூழுக்கு உளதாதல்பற்றிக், கொப்பூழ் போன்ற வட்ட வடிவாகிய யாழ்ப் பத்தற் றுளையினை யுணர்த்திற்று எனக் கொண்ட மயிலைநாத ருரை பொருந்தா வுரையாதல் காண்கின்றும்.

இனி, 'மருப்பு' எனப்பட்ட யாழ்க்கோடு எத்தகையதென ஆராய்வாம். ''பாம்பணந் தன்ன ஓங்கிரு மருப்பு'' என்பது வடிவுபற்றிய உவமம். ''மணிவார்ந்தன்ன மாயிரு மருப்பு'' என்பதும், ''களங்கனி யன்ன கதழ்ந்துகிளர் உருவின், வணர்ந்தேந்து மருப்பு'' என்பதும் நிறம் பற்றிய உவமங்களாதலின், யாழ்க் கோடானது, கருங்காலியினுற் செய்யப்பட்டு, அழுத்தம் பண்ணப்பட்டதாய்ப், பாம்பு படமெடுத்தாற் போன்று தலை தூக்கி நிற்கும் என்பது பெறப்பட்டது.



படம் VII
சீறி யாழ்

பழைமை பொருந்திய சீறியாழ், பேரியாழ்களிலே, 'மாடகம்' எனப் பிற்காலத்து வழங்கிய முறுக்காணி அமைக்கப்படவில்லை. நரம்புகளைக் துவக்கும் வார்க்கட்டாகிய திவவு அவைதம்மை வலித்தல், மெலித்தல் செய்தற்கும் பயன்பட்டது.

"மாயோள் முன்கை ஆய்தொடி கடுக்கும்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவு" எனவும்,

"நெடும்பணைத் திரடோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி யேய்க்கும் மெலிந்துவீங்கு திவவு" எனவும்,

"பைங்க ணூரகம் பாம்புபிடித் தன்ன
அங்கோட்டுச் செறிந்த அவிழ்ந்துவீங்கு திவவு" எனவும்

வருதலின், கரிய நிறத்ததாகிய கோட்டின்மீது கட்டப்பட்ட திவவானது, கரிய நிற முடைய பெண்ணின் கையிலணியப்பட்ட வளையல் போலவும், கருங்குரங்கின் கையினைச் சுற்றிய பாம்புபோலவும் வடிவு பெற்றிருந்ததென அறிகின்றோம். *VII* ஆம் படத்திலே, ஒன்பது நரம்புகளைத் துவக்கிய ஒன்பது திவவுகள் கோட்டிலே அமைந்து நிற்றலைக் காண்க.

இனி, நரம்பின் தன்மையினை ஆராய்வாம். நூல் நூற்கும் மகளிர் பஞ்சினையுடைப்பதற்குப் பயன்படுத்தும் வில்லிலே கட்டப்பட்டிருக்கும் நரம்பானது யாழ் நரம்பின் மந்த சுரத்தை ஒலித்தலைக் கேட்டிருக்கின்றோம். அந்நரம்பு புதிதாகவிருக்கும் போது, பொன்போன்று ஒளிருவதையும், இரு புரிகள் ஒருங்கு சேரத் திரிக்கப்பட்டிருப்பதையும் கண்டிருக்கின்றோம். யாழ் நரம்பு இத்தகையது. பஞ்சுடைக்கும் நரம்பு பருமனுயிருக்கும்; யாழ் நரம்பு மெல்லிதாயிருக்கும்; இதுவே இரண்டினுக்கும் வேறுபாடாகும்.

"ஆய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பு" எனவும்,

"பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பு" எனவும்,

"கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக்
குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பு" எனவும்

கூறினமையின், வெண் சிறு கடுகளவும் குற்றமின்றிக், கொடுறு முறுக்கில்லாது செவ்விதாகத் திரித்துச் செய்யப்பட்ட நரம்பினியல்பு

கூறப்பட்டது. நரம்பினின்றெழும் இசையி னினிமையை நரம்பிற்கு ஏற்றித், ''தேம்பெய்து அமிழ்து பொதிந்து இலிற்றும் அடங்குபுரி நரம்பு'' என்றார். மலைபடுகடாத்தினின்று மேலே எடுத்துக்காட்டிய பகுதி, ''தொடிதிரி வன்ன தொண்டுபடு திவவின்'' எனத் தொடங்கி, ''வணர்ந்தேந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்'' என முடிந்து நின்ற தாதலின், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் கண்ட பேரியாழ் ஒன்பது நரம்புகளுடையதென அறிகின்றோம். 'தொண்டுபடு திவவு' என்றமையின் திவவுக்கு ஒன்றாக நரம்பும் ஒன்பது உள என்பது பெறப்பட்டது. ஆசிரியமாலையினுள்ளும், ''தொண்டுபடு திவவின் முண்டக நல்யாழ்'' எனக் கூறப்பட்டது. அளவிற் பெரி தாய், ஒன்பது நரம்போடு கூடிப், பேரியாழ் எனப் பெயர் பெற்ற கருவி யொன்று முன்னுளிலிருந்த உண்மையினை மேற்காட்டியவற்றி னாலே துணிகின்றோம். சகோடயாழ் பதினான்கு நரம்போடு கூடிய தென்பதைப் பாயிர வியலினுள்ளே காட்டினும். மெலிவு நான்கு, சமன் ஏழு, வலிவு மூன்றாக, மொத்தம் பதினான்கு நரம்பாயின. 'இருபத்தொரு நரம்பினாற் றொடுக்கப்படும் பேரியாழ்' எனப் புறநா னூறு, 152 ஆம் செய்யுளுரையினுள்ளே கூறப்படுதலானும், 'இருபத் தொரு கோவை முதலாக, நானாற் கோவையீறாகக் கிடந்த கோவை களுள்' என வேனிற்காதை யுரையினுள்ளே அரும்பதவுரையாசிரியர் கூறுதலானும்,

> '' ஒன்று மிருபதும் ஓரேழ்மேற் பத்துடனே
> நின்றபதி னாறேழு நேடுங்காற் – குன்றாத
> நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே
> மேல்வகை நூலோர் விதி''

என அரங்கேற்றுகாதை யுரையினுள்ளே அடியார்க்குநல்லார் காட்டும் மேற்கோட் சூத்திரத்தினுலும், 'ஒன்பதும் பத்துடனே, நின்ற பதினான் கும்' என மேலைச் சூத்திரத்திற்குப் பாடபேத முளதாதலானும், பேரியாழ் இருபத்தொரு நரம்புடைய தென்பதும், சகோடயாழ் ஒரோவழி பதினாறு நரம்போடு நிற்குமென்பதும், இவற்றிடையே நின்ற மகரயாழ் பத்தொன்பது அல்லது பதினேழு நரம்புகளோடு கூடியிருந்ததென்பதும் பெறப்படுகின்றன. ஆசிரியமாலை யுரைத்த திவவுத் தொகையினைச் சீறியாழுக்குக் கொள்ளுமிடத்து, அது ஒன்பது நரம்பினை யுடையதாதல் வேண்டும்.

பெரும்பாணாற்றுப்படையினுள்ளே, ''பிறைபிறந்தன்ன பின் னேந்து கவைக்கடை'' என்றது, பேரியாழினை நிறுத்துதற்குத் தகவாக, அதன் பின்னே யமைக்கப் படுவதோ ருறுப்பு. இதனைப் படத்திற் காண்க. சிறுபாணாற்றுப்படையினுள்ளே 'அகளம்' என்றது பத்தரினை.

பத்தர் குமிழ மரத்தினுற்செய்யப்பட்டதென்பதை, மேலே, 'வில்யாழ்' என்னும் பகுதியுட் கூறினும். அது முருக்கு, தணக்கு என்னும் மரங்களினுலும் ஆக்கப் படுவதுண்டு. கோடு கருங்காலியினுற் செய்யப்பட்டதென்பதை மேலே கூறினும். அது கொன்றைமரத்தினுலும் செய்யப்படுவதுண்டு. 'கோட்டிற்கு மரம் கொன்றையும், கருங்காலியுமாம்; பத்தர்க்கு மரம் குமிழும், முருக்கும் தணக்குமாம்' என நச்சினுர்க்கினியர் பொருநராற்றுப்படை உரையினுட் காட்டினுர்.



படம் VIII
கவைக்கடை

பண்ணேடு உளராது, இன்பமில்லாத ஓசையாக விசைக்கின்ற செம்பகையும், அளவிறந் திசைக்கின்ற ஆர்ப்பும், மழுங்கி யிசைக்கின்ற கூடமும், இழுமென வின்றிச் சிதறி யுச்சரிக்கின்ற அதிர்வும் மரக்குற்றத்தினுலாவன வென்பதும், அக்குற்றங்கள் மரமானது நீரிலே, நிற்றல், அழுகுதல், நெருப்பில் வேதல், திணை மயங்கிய நிலத்தில் நிற்றல், இடி வீழ்தல், நோய்ப்படல் என்னுங் காரணங்களினுலாவன வென்பதும், சீவகசிந்தாமணியுரையினுள்ளே, நச்சினுர்க்கினியராற் காட்டப்பட்டன. அப்பொருள்பற்றிய செய்யுட்களும், உரையிற் காட்டிய மேற்கோட் சூத்திரங்களும் வருமாறு:

"நீர்நின் றிளகிற் றிதுவேண்டா நீரின் வந்த திதுபோக
வார்நின் றிளகு முலையினுய் வாட்புண் ணுற்ற திதுநடக்க
ஒருமுருமே றிதுவுண்ட தொழிக ஒண்பொ னுகுகொடியே
சீர்சால் கணிகை சிறுவன்போற் சிறப்பின் றம்ம
விதுவென்றுன்."

"கல்சேர் பூண்கொள்க திர்முலையாய் காமத் தீயால்
வெந்தவர்போற்
கொல்லை யுழவர் சுடப்பட்டுக் குரங்கி வெந்த திதுகளிறு
புல்ல முரிந்த தெனப்போக்கித் தூம மார்ந்த துகிலுறையுள்
நல்யாழ் நீட்ட வதுகொண்டு நங்கை நலத்த திதுவென்றுன்."

'' நீரிலே நிற்றல் அழுகுதல் வேதல் நிலமயக்குப்
பாரிலே நிற்றல் இடிவீழ்தல் நோய்மரப் பாற்படல்கோள்
நேரிலே செம்பகை ஆர்ப்பொடு கூடம் அதிர்வுநிற்றல்
சேரில்நேர் பண்கள் நிறமயக்கப்படுஞ் சிற்றிடையே.''

'' செம்பகை யென்பது பண்ணோ டுளரா
இன்பமி லோசை என்மனுர் புலவர்.''

'' ஆர்ப்பெனப்படுவது அளவிறந் திசைக்கும்.''

'' கூடம் என்பது குறியுற விளம்பின்
வாய்வதின் வராது மயங்கி யிசைப்பதுவே.''

'' அதிர்வெனப் படுவது இழுமெனல் இன்றிச்
சிதறி யுரைக்குநர் உச்சரிப் பிசையே.''

நரம்பினுள் மயிர், தும்பு என்றிவையிருத்தலும், அது கொடும்புரியா கவோ, ஏறிய முறுக்காகவோ இருத்தலுங் குற்றமாம். இப்பொருள், 'கொடும்புரி மயிர் தும்பு முறுக்கிவைநான்கும், நடுங்காமரபிற் பகையென மொழிப' என்னும் சீவகசிந்தாமணியுரை மேற்கோளினுட் காட்டப்பட்டது.

'' பணிவரும் பைம்பொற் பத்தர் பல்வினைப் பவள வாணி
மணிகடை மருப்பின் வாளார் மாடக வயிரத் தீந்தேன்
அணிபெற ஒழுகியன்ன அமிழ்துறழ் நரம்பி னல்யாழ்
கணிபுகழ் காளை கொண்டு கடலகம் வளைக்க லுற்ருன்.''

என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுளுரையிலே, மாடகமென்பது நால்விரலளவான பாலிகை வடிவாய், நரம்பினை வலித்தல், மெலித்தல் செய்யுங் கருவியெனக் கூறப்பட்டது.

'' மாடக மென்பது வகுக்குங் காலைக்
கருவிளங் காழ்ப்பினை நால்விரல் கொண்டு
திருவியல் பாலிகை வடிவாக் கடைந்து
சதுர மூன்ருகத் துளையிடற் குரித்தே.''

என அரும்பதவுரையாசிரியர், வேனிற்காதை யுரையினுள்ளே, மாட கத்தி னிலக்கணங் கூறினர். ''வலக்கைப்பதாகை கோட்டொடு சேர்த்தி, இடக்கை நால்விரல் மாடகந் தழீஇ'' என அக்காதையினுட் கூறியதற் கியைபுடைத்தாகிய நிலையினை நோக்குமிடத்து, 'மாடகம்' பத்தரிலே அமைக்கப்பட்டிருந்ததென்பது புலப்படுகிறது. அத்தகைய கருவிகளிலே திவவு என்னும் உறுப்பு அமையாது. ''கோடே பத்தர் ஆணி நரம்பே, மாடகம் எனவரும் வகையின தாகும்'' எனக் கூறப்பட்ட உறுப்புக்களே அமைந்துவரும்.

# 7. இயலிசை நாடகம்

'தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே! அகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே! வளர்சிமய
இமையப் பொருப்பின் விளையாடும்
இளமென் பிடியே! எறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே! மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே! வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே! வருக வருகவே'

மாட்சிமைதங்கிய சேதுபதி மன்னரவர்களே! முத்தமிழ்த்துறையின் முறைபோகிய உத்தமப் புலவர்களே! தமிழணங்கின் செல்வப் புதல்வர்களே! புதல்வியர்களே!

வையைப் பேரியாறு வளஞ்சுரந்தூட்டப் பொய்யா வானம் புதுப் புனல் பொழியத் தென்னர்குலத்தோர் செவ்விதிற் புரந்த இச்செழும் பதியானது தொன்று தொட்டுத் தமிழ்ப் புலவரும் புரவலரும் ஒருங்கு கூடி உரையாடித் தாமின் புறுவது உலகின்புறக்கண்டு காமுறுதற்கு இயைந்த இடமாதலின், கூடல் என்னும் சிறப்புப் பெயர் எய்தி நின்றது. அத்தகைய கூடலம்பதியிலே, இம்மங்கல நாளிலே, ஒருங்கு கூடியிருக்கும் நம்மனைவருக்கும் தமிழணங்கின் பேரருள் உளதாகுக.

இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடாக்கி வடபாலிமயத்திலே கயலும் வில்லும் புலியும் பொறித்த மூவேந்தரின் அறமும் மறமும் ஆற்றலும் நம் உள்ளத்திலே நீங்காது நின்று ஒளி பரப்புவவாகுக.

தொன்மைநலஞ் சான்ற இந்நன்னகரிலே கன்மாப் பலகை யேறியிருந்து தமிழாராய்ந்த செந்நாப் புலவர்தம் செழும்பனுவலிலே கற்போர் காணும் செம்மையும் அழகும் உண்மையும் நம் நெஞ்சகம் புகுந்து பொய்தீர்த்து இருள் கடிந்து நம்மை நன்னெறிப் படுத்துவ வாகுக.

இரண்டரைக் கோடியரென்னும் எண்ணிக்கையினராகிய நம் தமிழ்க்குலத்தார் அனைவரும் பசியும் பிணியும் பகையும் நீங்கிப் பொருட் செல்வமும் செவிச் செல்வமும் அருட் செல்வமும் ஏற்றபெற்றி யெய்தப் பெற்று மண்ணக மாந்தர்க்கு அணியெனச் சிறந்து வாழ்வாராக.

இயலிசை நாடக முப்பாற் பொருளை ஆராய்தல் கருதி இப் பேரவையிலே வந்திருக்கும் நாமெல்லாம் காய்தல் உவத்தல் அகற்றி, நுண்மா ணுழைபுல முடைய நம் முன்னோரைப்போல நடுவுநிலை நெடு நகர் வைகி உண்மை வழிச் செல்லும் உறுதிப்பாடுடையே மாகுக.

வரவேற்புக் கழகத்தாரது கேள்விக் கியைந்து இப்பேரவையிலே எழுந்தருளியிருக்கும் கல்வி கேள்விகளான் மிக்க பேரறிஞர் பலர், தாம் அரிதின் ஆராய்ந்து கண்ட செம்பொருண் முடிபுகளை அவைக்களத்து எடுத்துரைக்க நாமெல்லாங் கேட்டு மகிழ்வுறப் போகின்றோம். அங்ஙனம் மகிழ்வுறுத்தும் நீர்மைய வாகிய அறிஞர் பேருரைக்குத் தோற்று வாயாக ஒருசில கூறுதல் இன்றியமையாததாயிற்று. அத்தகைய தோற்றுவாய்தானே சென்ற காலத்தில் நம்முன்னோரெய்திய சீரினையும், இனி எதிர்காலத்தில் நம் குலத்துதிப்போர் எய்தப் போகின்ற சிறப்பி னையும், ஆங்கவர் சிறப்பெய்தும் வண்ணம் இன்று நாம் செய்தற்குரிய தமிழ்த்தொண்டினையும் வகுத்துக்கூறுமியல்பின தாகல் வேண்டும். சென்ற காலத்துச் சீரினை எதிர் காலத்தாருக்கு இயைவிக்கும் நிகழ் காலத்து வினையாகிய தமிழ்த் தொண்டானது மும்மையினையும் தழுவி நின்றது; ஆதலின் அத்தொண்டினை ஓரளவிற்கு விரித்துக்கூற முற்படுவாம்.

பள்ளியிற் பயிலும் தமிழ்ச்சிறார்முதற் பல்கலை கற்றுத் தேறிய முது தமிழ்ப் புலவரீறாக அனைவரும் தமிழ்க்குலத்தாரின் உண்மை வரலாற் றினை உளங்கொண்டுணர்தற்கு வேண்டிய சிறியவும் பெரியவுமாகிய வரலாற்று நூல்கள் பல தமிழ் மொழியிலே எழுதப்படல் வேண்டும். இதுவேநாம் செய்யவேண்டிய தமிழ்த் தொண்டுகளுள்ளே முதலில் வைத்து எண்ணுதற் குரிய தென்பது எனது உள்ளக்கிடக்கை.

இற்றைக்கு ஏறத்தாழ்ப் பதினாலாயிரம் யாண்டுகளுக்கு முன்பு, நம் முன்னோர், பஃறுளியாற்றுக்கும் குமரி யாற்றுக்கும் இடையே

கிடந்த பெருநிலப் பரப்பிலே சீருற வாழ்ந்து எண்ணூலும், இசை நூலும், இயல்நூலும், வானநூலும் மனையமைப்பு நூலும், கலையமைப்பு நூலும், பிற நூலும்வல்லாராய், இந்நகர்க்கு மதுரைப் பெயரளித்த் தொன்னகராகிய (கடல் கொண்ட) தென்மதுரையிலே நிலந்தரு திருவி னெடியோனை யுள்ளிட்ட அருந்திறன் மன்னர் தம் அவைக்களத்திலே சிறந்து விளங்கினரென்பதும், இற்றைக்கு ஏறத்தாழ ஒன்பதினுயிர மாண்டுகளின் முன்னே கடல் கோளினலே குமரிநாடு அழிந்த பின்னர் உவணன், ஓதக்கோன் என்னும் தலைவர்கள் வழிப்படுத்தக் கலத்திற் சென்று பாரசீகக்குடாவின் வட பாலதாகிய சுமேருநாட்டிற் குடியேறின ரென்பதும், மேலும் அராபிநாட்டின் தென்பாலதாகிய ஏமநாட்டிலும் நீலநதி வளம் பெருக்கும் மிசிரி என்னும் எகிப்து நாட்டிலும் சுமேரு நாட்டினை யடுத்த ஏல நாட்டிலும், சிந்து நதிக் கரையில் விளங்கிய மீனுட்டிலும், ஆங்கதற்கு வடபாலதாய்ப் பனிபடர்ந்த மலைகளாற் சூழப்பட்ட மரங்கொத்தி நாட்டிலும் பிறநாடுகளிலும் வாழ்ந்தார்கள் என்பதும், சுமேரு நாட்டின் வடக்கே சோழர் குடியேறிச் சோழதேயம் எனப் பெயரிட்டு வாழ்ந்த நாடே மொழிச்சிதைவினலே சால்டியா எனப்பட்ட தென்பதும், பண்டைக் காலத்திலே கலத்திற் சென்று பண் டமாற்றினலே நிதிக்குவையீட்டிய பாணிகள் தமிழ்நாட்டு வணிகரா மென்பதும், ஐரோப்பாவுக்கும் ஆப்பிரிகாவுக்கும் இடையே கிடக்கும் மத்தித்தரைக் கடலின் இரு கரையிலும் வாழ்ந்து பண்டை யவனரும் உரோமரும் வருவதற்கு முன்பு நாகரிகம் பரப்பிய மீனவர். எத்துருஸ்கர், துமிதியர், பேர்பெரியர் ஐபீரியர்ஆதியோர் தமிழ்க்குலத்தின ராமென் பதும், வில்லவராகிய சேரமன்னர் கலத்திற் சென்று மத்தித்தரைக் கட லிலுள்ள கிரீத் (*Crete*) என்னும் தீவினைக் கைப்பற்றி ஆளுகை புரிந்த செய்தியே, 'வன்சொல் யவனர் வளநாடாண்டு' எனச் சிலப்பதிகாரத் துள்ளும், 'நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து' எனப் பதிற்றுப் பத்தினுள்ளும் கூறப்பட்ட தென்பதும் பிறவும் பண்டைக் கால வரலாறு (*Ancient History*) கூறும் நூல்களினுள்ளும் நம் நாட்டு மேனுட்டுப் பண்டையிலக்கிய நூல்களினுள்ளும் பரவிக்கிடக்கின்ற முடிபுகளாம். இம் முடிபுகளுள் ஒரு சில, 'உலக புராணம்' என்னும் தலைப்பெயர்க் கீழ்ச் செந்தமிழ்ப் பத்திரிகையிலும் பிற வெளியீடுகளி லும் வெளிவந்ததனைத் தமிழன்பர்கள் அறிவார்கள்.

அஃதன்றியும் ஒரு சாராசியர் தமிழ்க்குலத்தார், பசிபிக் பெருங் கடலினைக் கடந்து சென்று மத்திய அமெரிக்காவிலே குடியேறி, மெக்ஸிகோ, பீரு, யுக்காட்டான் முதலிய இடங்களிலே வாழ்ந்து மாயா நாகரிகத்தைத் தோற்றுவித்தன ரெனக் கூறுவர். இவற்றையெல்லாம் ஒருங்கு வைத்து நோக்குமிடத்து உலக சரித்திரமே தமிழ்க் குலத்தா ரோடு தொடங்குகின்றதென்பதும், இற்றைக்கு ஒன்பதினுயிரம் ஆண்டு களின் முன்னே பூவலயத்தின் நடுப்பாகம் முழுவதிலும் தமிழ்க்

குலத்தார் சீரும் சிறப்புமுற்று வாழ்ந்தார்களென்பதும் பெறப்படுகின்றன. கடல் கொண்ட அத்லாந்திஸ் (*Lost Atlantis*), தெங்க மரமும் யானையு முடையதா யிருந்ததெனக் கூறப்படுதலின், கடல் கொண்ட குமரி நாட்டின் வரலாறே மத்திய அமெரிக்காவினின்று ஐரோப்பாவினை யடைந்த ஞான்று கடல் கொண்ட அத்லாந்தின் வரலாறுக உருத்திரிந்த தெனக் கொள்வதும் ஒரு தலை. இவைபோன்ற முடிபுகளை யெல்லாம் வரலாற்று நூற்றுறையிலே வல்லுநராயுள்ளோர் காய்தல் உவத்தல் அகற்றி நடுவுநிலைமையோ டாராய்ந்து பொருட்டொடர் நிலையினமைந்த நூல் வடிவாக்கித் தருதல் வேண்டும்.

காலமும் கடலும் செல்லும் கவர்ந்தன போக எஞ்சி நிற்கும் அருந்தமிழ்நூல்களின் வரலாற்றினைச் செவ்விய முறையிலே ஆராய்ந்தறிந்து நமது மொழியிலும் பிற மொழியிலும் தமிழிலக்கிய வரலாறுகள் சிறியவும் பெரியவுமாக எழுதித் தமிழ்நூல்களின் மதிப்பினை உலகிற்கு அறிவுறுத்த முயலவேண்டும். ஆங்கில மொழியிலே நிகண்டு நூல் ஒன்றினை யாத்தமைத்த ரேஜெட் (*Roget*) என்பாரோ ராசிரியர் அத்தகைய நூல் பிறமொழி யொன்றிலும் இலதென முதற்பதிப்பிலே கூறினர். இரண்டாம்பதிப்பு முகவுரையிலே அமரசிங்கர் என்பாரியற்றிய நிகண்டு நூலொன்று வடமொழியிலே உளதெனக் குறிப்பிட்டார். பிங்கலம், திவாகரம் முதலிய நிகண்டு நூல்கள் தமிழ்மொழியிலுள வெனும் உண்மையினை அவர் அறிந்திலர், தமிழராகிய நாம் அறிவித்திலமாதலின்.

பாரத நாட்டு இசையினைக் குறித்து ஆங்கிலத்திலே நூலெழுதிய 'பக்ஸ் ஸ்டிராங்கு வேய்ஸ்' என்னும் பேரறிஞரும் பிறரும் வடமொழியிசைநூல்களையே குறிப்பிட்டுச் சென்றனர், தமிழராகிய யாம் நமது இசைக்கலையினைக் குறித்து அவர் போன்றருக்கு அறிவித்திலேமாதலின்.

சாரங்க தேவரியற்றிய சங்கீதரத்நாகரம் தேவாரத்திற் பொதிந்த தெய்வ இசையினைப் பெருகக் குறிபிடுகிறதென அறிந்திருந்தும் நம்மவருள் ஒரு சாரார் அவ்வுண்மையினை உலகிற்குணர்த்தாது மறைக்க முயல்கின்றனர்.

இனி, நம் கைக்கு எட்டாது அழிந்து போன நூல்களைக் குறித்துப் பழையவுரையாசிரியர் கூறுகின்ற வரன்முறைகளையும் மேற்கோட் சூத்திரங்களையும் பொன்னே போற் போற்றி நூல்வடிவாக்கி அச்சேற்றிப் பாதுகாக்க வேண்டும். இவ்வாறு செய்தற்குரியன குண்டலகேசி, வளையாபதி, தகடூர்யாத்திரை, இசை நுணுக்கம், சயந்தம், குணநூல், செயிற்றியம், பரத சேனபதியம், பஞ்சமரபு, இந்திரகாளியம், மதிவா

ணர் நாடகத்தமிழ்நூல், ஆசிரியமாலை, மாபுராணம் என்று இத் தொடக்கத்தன. ''நாடகத்தமிழ்நூலாகிய பரதம், அகத்தியம் முதலாவுள்ள தொன்னூல்களும் இறந்தன'' என்று அடியார்க்கு நல்லார் கூறுதலின், தமிழ்மொழியிலே பரதம் எனப் பெயரிய நூலொன்று இருந்து இறந்த உண்மை புலப்படுகின்றது. இதற்கும் வடமொழிப் பரதத்துக்கும் உள்ள தொடர்பு அறிஞர் ஆராய்ந்தறிதற் குரியது. வரன்முறை யாராய்ச்சி சிறிதும் வாய்க்கப்பெருத அரபத்த நாவலர் என்னும் பிற்காலத்து நூலாசிரியர் தமது தமிழ் முன்னோர் வழித் தமக்குக் கிடைத்த அரும் பொருண் முடிபுகளைப் பொதிந்து தாமியற்றிய பரதம் என்னும் நூலுக்கு வடமொழி முதனூல் கற்பிக் கும் விழைவினுலே பதின்மூன்ரும் நூற்ருண்டிலிருந்த சாரங்கதேவரை அகத்தியர்க்கு முன்னிருந்தவராக்கிச் சுத்த பௌராணிக மதத்தில் நிற்பாராய் வட மொழியிலே சாரங்கதேவ முனிவர் பரதநூலை ஓரிலக்ஷம் கிரந்தங்களாற் கூறினர் எனவும், அவர் நூற்கு வழிநூல் செய்த அகத்தியனுர் ஆருயிரஞ் சூத்திரத்தினுல் அறைந்தனரெனவும், சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மாந்தர்பொருட்டாகத் தாம் சுருக்க நூல் செய்வதாகவும் கூறிச் செல்கின்ருர். அவர் கூற்று எனது அருமை நண்பரொருவர் பௌராணிக மனப்பான்மையினை எள்ளி நகையாடும் கருத்தினுெடு வெளியிட்ட 'பள்ளியகரப் பழங்கதை'யை நினைவுக்குக் கொண்டு வருகிறது.

பரதம் என்னும் பெயர்க்காரணத்தை யாராய்தற்குச் சிலப்பதிகார வரும்பதவுரையாசிரியர் கூறிய முடிபுகள் நமக்கு உதவுகின்றன. ஒன்பான்சுவையும் எண்வகை மெய்ப்பாடும் என்னும் இவற்ருேடு இயைபுடைய 'இரதம்' என்னும் மொழியினை அரும்பத வுரையாசிரியர் பலகால் வழங்குகின்ருர். வடமொழி யலங்கார நூலார் கண்ட 'ரஸம்', 'பாவம்' என்னும் மொழிகளின் பொருளினை இம்மொழி தந்துநின்றது. 'பண்', 'இரதம்', 'தாளம்' என்னும் மூன்றுறுப்படக்கிய பிண்டம் 'பரதம்' எனலாகும். முத்தமிழ்விரகராகிய ஆளுடையபிள்ளை யாரது தேவாரத்திருப்பதிகத்திலே,

> 'பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்
> உண்ணின்ற தார்சுவையும் உறுதாளத் தொலிபலவும்
> மண்ணும் புனலுயிரும் வருங்காற்றுஞ் சுடர்மூன்றும்
> விண்ணும் முழுதானு னிடம்வீழிம் மிழலையே'

என இறைவனது இசையுருவினையும் எண்பேருருவினையும் கூறிய அருமைத்திருப் பாடலிலே, 'பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்' எனப் பண்ணீர்மையும் 'உண்ணின்ற தோர்சுவையும்' என இரதமும், 'உறுதாளத் தொலிபலவும்' எனத் தாளக்கூறுபாடு

களும் மேற்காட்டிய முறையிலே அமைந்துநிற்றல் காண்க. 'பரதமுனிவர் செய்தலிற் பரதமாயிற்று. அப்பெயரினுர், தமிழுக்குரியரல்லர்' எனின், 'அரசகுமரரும் பரதகுமரரும் என அரசரோடு உடன்வைத்தோதிய பரதர்குலம் தமிழுக்குரியது; அக்குலத்தினரொருவர் தமிழ்ப்பரதத்தைச் செய்தாரெனக் கொள்ளுதலில் நேர்ந்த இழுக்கென்னையென்போம்.

பாவம், இராகம், தாளம் என்னும் இவற்றைக் கூறும் நூல் 'பரதம்' எனப் பிற்காலத்தார் கூறினர். வடமொழி நான்காம் பகரத்தை முதனிலையாகக் கொண்ட 'பாவம்' என்னும் சொல், யானறிந்தவரையிலேபழந் தமிழ் வழக்கில் வந்திலது. அங்ஙனமாதலின், அடியார்க்குநல்லார் கூறும் தமிழ்ப்பரதத்தின் முதனிலையெழுத்து இருமொழிக்கும் பொதுவாகிய முதற்பகரமேயாகுமென்பதும், அது பண்ணைக் குறித்ததென்பதும் அறிதற்குரிய. அவ்வண்ணமே இடைநின்ற 'ர' கரம் பழந்தமிழ்வழக்கிலுள்ள இரதத்தினைக் குறித்ததெனவும், அவ்வழக்கிற் காணப்படாத 'இராக'த்தினைக் குறித்திலதெனவும் அறிதல் வேண்டும். 'பண்ணும்' 'இரதமும்' என்னும் முறையினை மறந்த பிற்காலத்தார் இரதமாகிய பாவத்தினை முன்னும் பண்ணீர்மையாகிய இராகத்தினைப் பின்னுமாக மாறிவைத்து இடர்ப்படுவாராயினர்.

வடமொழிப் பரதமும் சங்கீதரத்நாகரமும் சிறந்த முறையிலே தமிழில் மொழிபெயர்க்கப்படுவவாயின், அம் மொழிபெயர்ப்புநூல்கள் தமிழிசையின் மறுமலர்ச்சிக்குப் பெரிதும் உதவுவ என்பது எனது கருத்து. பல்கலைக் கொடை வள்ளலாகிய செட்டிநாட்டரசரவர்கள் தங்கள் பல்கலைக்கழகத்தின் மூலமாகவோ பிறவாயிலாகவோ தமிழ் வளர்ச்சிக்கு வேண்டிய இப்பணியினையும் செய்து நிறைவேற்றுவார்களெனத் தமிழுலகம் எதிர்பார்க்கின்றது.

இயற்றமிழ்த்துறைக்குத் தலைமைதாங்கும் யான் அத்துறையோடமையாது இசைத்தமிழினைக் குறித்துப் பேசப் புகுந்தது பொருத்தமாமோ என இப்பேரவையோர் ஐயுறலாம். இவ்வையுறவினை நீக்குதற்பொருட்டு இசைக் கலைக்கு உறையுள் எனப் போற்றற்குரிய தஞ்சைமா நகரிலே பரம்பரையிசைச் செல்வர் குலத்துதித்தவர்களும் சென்னைப் பல்கலைக்கழகத்து இசைப்பகுதியாசிரியராகக் கடமை புரிபவர்களுமாகிய திரு. *K*. பொன்னையாபிள்ளையவர்கள் அண்மையில் வெளிவந்த 'குமரன்' இசை மலரிலே கூறியதோர் சீரியவாசகத்தினை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அது வருமாறு:

'இனி இயற்புலவர்கள் இசைப்புலவர்களோடு ஒத்துழைக்க வேண்டும். இயற்புலவர்கள் இசையுணராமலும் இசைப்புலவர்கள்

இயலையுணராமலு மிருந்தது தான் தமிழிசை மறைவிற்கு முதற்காரணம். இயலின்றி இசையில்லை; இசையின்றி இயலில்லை. வாய்க்காலும் அதன் வழியே ஓடுகின்ற நீரும்போல இயலும் இயல் வழியோடும் இசையுமிருக்கின்றன. தண்ணீ ரில்லாத போது வாய்க்காலிருந்தும் பயனில்லை. வாய்க்கால் இல்லாத தண்ணீர் சரியாகப் பயன்படாமல் பரந்தோடிக் கெட்டுவிடும். இரண்டும் இருந்து, தண்ணீர் பாயுமானல் வயல் நன்ருக விளையுமாறுபோல் இயலும் இசையும் கலந்து மிளிருமானல் கேட்போருள்ளத்தை மகிழ்விக்கும். ஆகவே இயற்புலவர்களும் இசைப்புலவர்களும் ஒன்றுபட்டால்தான் தமிழிசை யினிமையைக் காணமுடியும். ஆதலினலே இயற்புலவர்களை விளித்து 'ஓ இயற்புலவர்களே! இசைவளர்ப்போம் வம்மின்!' எனவும் இசைப்புலவர்களை நோக்கி, 'ஓ இசைப்புலவர்களே! இயல் வளர்ப்போம் வம்மின்!' எனவும் நாம் கூறுவோமாக. கதைதழுவிய கூத்தாகிய நாடகமானது இயல் இசை யிரண்டினையும் தன்னுள் அடக்கியதாதலின், நாடகத் துறை வல்லோர் முத்தமிழ் வளர்ச்சிக்கு விரைந்து முன்னிற்பாரென்பது சொல்லாமலே யமைகின்றது.

இயற்புலவர் கற்றற்குரிய நூல்களிலே இசைநாடக முடிபுகளும் விரவி வருதலை ஒருசிறிது காட்டப்புகுவாம். அருந்தமிழ்ப்புலவர் வகுத்துரைத்த அகத்திணைத் துறை பலவும் நிரலுற வமைந்த தஞ்சை வாணன்கோவைபோல்வன தலைவன், தலைவி, செவிலி, நற்ருய், பாங்கன், பாங்கி, அறிவர், கண்டோர், காதற்பரத்தையர், காமக்கிழத்தியர் என்று இன்னேர் நாடகபாத்திரங்களாகத் தோற்றி நடிக்கும் காதல்நாடகங்களேயாம். காளிதாசப் பெருங்கவி யாத்த சாகுந்தல நாடகத்தோடு இவை ஒத்த பொருண்மைய. ஆனிரை கவர்தலும், போர்விழைந்தேகலும், அரணங்கோடலும், மலைதலும், வென்றி மாலை சூடலும் என்று இத்தொடக்கத்த புறத்துறைகளை நிரலுறக் கூறும் வெண்பாமாலை போல்வன அறனும் மறனுந் தழுவிய வீரநாடகங்களேயாம். வடநூற்புலவர் வகுத்த நால் வகை விருத்திகளுள்ளே கைசிகி, பாரதி விருத்திகள் அகநாடகங்களுள்ளும் ஆரபடி, சாத்துவதி விருத்திகள் புறநாடகங்களுள்ளும் வருவன.

தொல்லாசிரியர் விரிவுறக் கூறிய மெய்ப்பாட்டியல் இயற்றமிழுக்கு அணியாந் தகைமையது, இசைநாடகங்களுக்கு இன்றியமையாத உறுப்பாந் தகைமையது. செய்யுளியலுட் கூறிய வண்ணவிகற்பங்களும் எழுத்தினுட் கூறிய மாத்திரை, அளபெடை என்றின்னவும் இசைப் பகுதிக்குமுரிய. வீரசோழியநூலும் உரையும் சந்தி, சுவையுள்ளிட்ட நாடகவியல் விலக்குறுப்புக்களையும், செந்துறை, வெண்டுறை மார்க்கங்களையும் சிந்து, திரிபதை, சவலை, சமபாதவிருத்தம், தாண்டகம் என்னும் இசைப்பாவகைகளையும் வண்ணக்கூறுபாடுகளையும்

தெள்ளிதினுரைப்பன. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இயற்பகுதியைந்தும், இசைநாடகத்துக்கு அடிப்படையான உண்மைகளும் தொல்லாசிரியர் வகுத்த எழுத்துச்சொற் பொருள் என்னும் மூன்றுறுப்படங்கிய பிண்டத்தினுள்ளே ஒருவாறு அடங்கிநிற்ப வாதலினன்றே இயலிசைநாடகத் தொடர்நிலைச் செய்யுளாகிய சிலப் பதிகாரத்திற்கு உரைவகுத்த அடியார்க்கு நல்லார்.

> 'எழுத்தின் றிறனறிந்தோ இன்சொற் பொருளின்
> அழுத்தந் தனிலொன் றறிந்தோ — முழுத்தும்
> பழுதற்ற முத்தமிழின் பாடற் குரையின்
> றெழுதத் துணிவதே யான்'

எனக் கூறியமைந்தார்.

அவர் அவ்வாறு கூறினுரேனும் சிலப்பதிகார நூலினை முழுதும் படித்து உவகையுறும் விழைவுடையோர் இசை நாடக நூற்றுறைகளை அறிந்துகொள்வது இன்றியமையாத தென்பதை யாவரும் உணர்வர். சேரமுனிவன் செய்தளித்த சிலப்பதிகாரத்தை உளங்கொள்ளும் ஆர்வ மானது பிடர்பிடித்துந்தப் பதினெட்டாண்டுகளின் முன்னே நாடக நூன் முடிபுகளை ஓரளவிற்குக் கூறும் மதங்கசூளாமணியினைக் குருவரு ளும் தமிழ்க்குல முதல்வர்தம் ஆசிமொழியும் உறுதுணையாகக் கொண்டு ஒருவாறு எழுதி முடித்தேன். மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் அதனை உவந் தேற்று வெளியிட்டனர். கழிந்த பத்தாண்டுகளாகப் பழந்தமிழிசை மரபினை யான் ஆராய்ந்துகொண்டு வருதலை இப்பேரவையானது நன்கறியும். இமயவல்லியாகிய அங்கயற்கண்ணம்மையின் பேரரு ளினுலே இமயத்தில் உறைந்த நாட்களிலே முன்பு தெளிவுபடாத உண்மைகள் பல நன்கு தெளிவாயின. அதனுற் பத்தாண்டுகளாகச் செய்துவரும் ஆராய்ச்சி முற்றுப்பெறும் நிலையிலிருக்கிறது. தமிழ்ப் பெருமக்களின் உளங்கனிந்த அன்பாகிய அருந்துணையும் எனக்குப் பெருகக் கிடைத்துளது என்பதை யான் உணருகிறேன். ஆதலினுலே பழந்தமிழிசை மரபு விரைவிலே நூலுருவமாக வரலாம்.

கண்டத்தினுலோ கருவியினுலோ இசைமரபு தவருது பாடுகின்ற ஆற் றலை இயற்புலவரெல்லாரும் பெறுதல் அரிதெனினும், இசைப்புலவன் அமைத்துத் தந்த ஆளத்திக்குத் தகவாக இசைப்பாடல்களைச் சுவைய மைய ஆக்குந்திறமையினை இயற்புலமை நிரம்பும் விருப்புடையோ ரனைவரும் முயன்று பெறுதல் வேண்டும். அஃதன்றியும் தமிழணங்கிற்கு அணிகலனுகச் சேர முனிவன் செய்தளித்த சிலப்பதிகாரச் செழும்பனு வலினை அரங்கேற்றுகாதை, ஆய்ச்சியர் குரவை என்றித் தொடக்கத்த புறநீங்கலாகப் படித்தோமென இயற்புலவர் சொல்வது அவருக்குப்

பெருமையாகாது. முத்தமிழ்க் காப்பியத்தினை முற்றும் படித்தின்புறு தற்குக் கருவியாக இசையியல் நாடகவியல்களை ஆராய்ந்து தெளிய வேண்டும்.

இனி இடைக்காலத்திலே சமண பௌத்த ஆதிக்கம் கழிந்த பின்னர்ச் சைவ வைஷ்ணவ மதங்கள் மறுமலர்ச்சி யடைதற்குக் காரணராயிருந்த நாயன்மார்களும் ஆழ்வார்களும் இன்னிசைப் பாடல் களினாலே அன்பு நீர் பாய்ச்சி அருள் வெள்ளம் பெருகச் செய்தார்கள். 'பண்ணீர்மை' மொழிப் பரவையார் கொழுநராகிய சுந்தரமூர்த்தி நாயனார், தாம் பாடிய திருக்கோலக்காத் திருப்பதிகத்திலே,

' நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பும்
ஞானசம் பந்தனுக் குலகவர்முன்
தாள மீந்தவன் பாடலுக் கிரங்குந்
தன்மை யாளனை '

என்னுமிடத்து முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது தமிழ்த் தொண்டினைக் குறிப்பிடுகின்றார். அத்தொண்டு எந்நீர்மையது? இன்னிசை கருவியாக நாடெங்கும் இயற்றமிழினைப் பரப்பிய நீர்மை யது. சுருங்கிய காலவெல்லையினுள்ளே ஆளுடையபிள்ளையார் தமிழ் நாடு விழித்தெழுமாறு செய்த அற்புதச் செயலுக்கு உறுதுணையாக நின்றன ஆண்டவனது பேரருளும் இசையோ டியைந்த இயலும் எனக் கூறுவது மிகையாகாது. 'மருவியவேழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற் பெருகிய கண்மழைபொழியும் பெரும்புகலிப் பெருந் தகை'யாரும், மற்றைய குரவர்களும் அருளிச்செய்த இன்னிசைச் செழும் பாடல்கள் தமிழ் மக்களுடைய உள்ளத்திற் புகுந்து ஊக்கிய காரணத்தினாலேதான், தமிழர் மனவலியும் உடல்வலியும் பெற்றுச் சோழமன்னரது படைத்தலைமையிலே கலத்தினுங்காலினுஞ் சென்று வேற்று நாடுகளை வென்று எத்திசையிலும் தமிழ் முழங்கச் செய்தார்கள்.

நம் முன்னோர் இயல், இசை, நாடக முத்தமிழ்த்துறைகளை மாத்திர மல்ல; கலைத்துறைகள் வேறு பலவற்றையும் போற்றினார்களென்பதைப் பழைய நூல்களாலறிகின்றோம். சிற்பத்துறையிலும் நம் முன்னோர் நிரம்பிய புலமை படைத்திருந்தா ரென்பதற்குத் தென்னிந்தியாவி லுள்ள அழகிய கோயில்களே சான்று பகருகின்றன. மருத்துவநூலிலே அவர் படைத்துள்ள ஆற்றலினைச் சித்தவைத்தியமுறை கண்கூடாகக் காட்டுகின்றது. மரக்கலமமைக்கும் நூலும் வானநூலும் பிறவும் முற்றிலும் அழிந்துபோகவில்லை. ஆதலினாலே அவை தம்மை யெல்லாம் பண்டைப் பெருநிலைக்குக் கொண்டுவருதல் கூடும்.

காலநீரோட்டம் விரைந்து ஓடுகின்றது. தமிழர் பழங்காலத்துச் சிறப்பினை மாத்திரம் பறையறைந்துகொண்டிருப்பாரெனின், நிகழ் காலத்தையும் எதிர்காலத்தையும் முற்றிலும் இழந்த நீர்மையராதலுங் கூடும். சென்ற நூற்றுண்டிலே ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் விஞ்ஞான நூல் விருத்தியடைந்து விளங்குகின்றது. அந்த அறிவுச் செல்வத்தைத் தமிழ்மொழி பெறுவதற்கு ஆவன செய்தல் சிறந்த தமிழ்த்தொண்டாகும். இலண்டன்மாநகரிலுள்ள வேத்தவை (*Royal Society*) என்னும் அறிவு நூற் புலவர்குழுவானது, நமது தமிழ்நாட்டிலே பிறந்து தமிழ்நாட்டுக் கலைக்கழகங்களிலே கல்வி பயின்று கணிதநூலி னும் விஞ்ஞான நூலினும் பெரும் புலமை படைத்த திரு. ராமாநுஜம், திரு. இராமன் திரு, கிருஷ்ணன் என்றின்னோருடைய புலமையைப் பாராட்டி அவையகத்தாராக்கிய செய்தி கேட்டு நாமெல்லாம் பெரு மகிழ்வடைந்தோம். கணித விஞ்ஞான அறிவு நிரம்பிப் பூவுலகத்துப் பேரறிஞர் குழுவிலே, தலையணியிலிருக்குமாற்றல் தமிழனுக்கு உண்டு என்பதை அறிந்து கொண்டோம். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தாரின் சிறந்த முயற்சியினாலே தமிழ்மொழியிலே பூதநூல் (*Physics*) வேதிநூல் (*Chemistry*) புதிய தருக்கநூல் (*Logic*) என்று இவை வெளிவந்துவிட்டன. ஆட்சியும் குணமும் காரணமாகக் கலைச்சொற்கள் நாளடைவிலே செம்மை யுறுந்தன்மையின. அங்ஙனமாதலின் வட மொழி, தென்மொழி, மேற்றிசைமொழி யென்னும் முந்நீரமொழி களும் இற்றைநாளிலே அறிவுப்பெருங்கடலிலே கலத்தலை யாமெல்லாம் விருப்பொடு ஏற்றுக்கொள்வோமாக. தமிழ் நாடு தனக்குரிய ஆக்கத் தினைப் பெறுகிற நன்னாளிலே அவ்வறிவுக்கடலிலிருந்து எழப்போகின்ற தமிழ் முகிலானது புன்மையாகிய உவர்த்தன்மையினை முற்றிலும் நீக்கித் தூயதமிழ் நீரினை நாடெங்கும் பொழியக் காண்போம். அந்நன்னாள் மிகவும் அணுகி வருகின்றதென்பதற்கு இம் முத்தமிழ் மாநாடே சான்றுபகருகின்றது. மூடநம்பிக்கையோடு கூடிய பௌ ராணிக மனப்பான்மையென்றும் இருள் அகல்கின்றது. அறிவுக்கதி ரோனுடைய இளவெயிலானது நம் உள்ளத்துக்கு உவகையையும் உடலத்திற்குப் புதிய வலிமையையும் தருகின்றது. புத்தம்புதிய நூல் கள் பலவற்றைப் புனைந்து தமிழன்னையின் திருவடிகளிலே காணிக்கை யாக வைப்போமாக. சேர முனிவன் செய்தளித்த சிலம்பினை யணிந்த அச்சீறடிகள் நம் நாவிலே களிநடம் புரிபவாகுக. உறக்கம் நீங்கி விழித்தெழுந்த தமிழராகிய நாம் ஓய்வின்றி யுழைத்து உலகனைத்தினும் நம் மொழிச் செல்வத்தைப் பரப்புதற்கு முயல்வோமாக.

தமிழ்நூற் பரப்பினை உளங்கொண்டு நோக்குமிடத்துக் கடைச்சங் கத் திறுதிக்காலமுதல் இதுவரையும் தமிழ் மொழியிலே வெளிவந்த நூல்களுட் பெரும்பாலன பலவாகிய சமயங்களைத் தழுவிய நூல்களா மெனக் காண்கின்றும். சமண, பௌத்த முனிவர்களும் சைவ வைணவப்

பெரியார்களும் செய்தது போலவே அண்மையிலே இந் நாட்டினரோடு கலந்த இஸ்லாமிய கிறிஸ்தவ சகோதரர்களும் தத்தம் சமயவுண்மை களைப் பொதிந்த நூல்களைத் தமிழ் மொழியிலே எழுதி வெளியிட்டனர். அங்ஙனமாதலின் தமிழ்வளர்க்கும் மாநாடுகளும் உண்மை ஞானிகளைப் போலவே சாதி மத வேறுபாடின்றி மன்பதையோ ரனைவரையும் ஒப்பநோக்கு மியல்பினவாதல் வேண்டுமென்பது வெளிப்படை. சமயக் கணக்கர் தந்திறங் கேட்ட மணிமேகலை பல்வேறு சமய வாதிகளும் உரைத்த பொருளினை உளங்கொளக் கேட்டதுபோல, உண்மைத் தமிழன்பராயினர் தமிழிலுள்ள தலையாய சமயப் பெருநூல்களை அவ்வந்நூலினு லுணர்த்தப்படும் சமயங்களுக் குரியாராகிய அறிஞர் பாற் கேட்டமைவது சாலச் சிறப்புடையதாகும். சாதி மத வேறுபா டின்றியும் அரசியற்கட்சிப் பிரிவினையின்றியும் செய்தற்குரிய தொண்டு தமிழ்த்தொண்டு.

தமிழ்மொழியை மரபு தவருது ஆராய்ந்து கற்போரும், அவ்வாறு கற்றுத் தேறியவரை வழிபடுவோருமாகிய இரு சாராருமே உண்மைத் தமிழ்த் தொண்டிற்கு உரியோராவர். 'கற்றலிற் கற்ருரை வழிபடுதல் சிறந்தன்று' என்னும் அறிஞருரையும் இவ்வுண்மையினையே வலியுறுத் துகின்றது. முறையாகக் கற்றலுஞ் செய்யாது கற்றுவல்லாரை யடைந்து வழிபாடியற்றிப் பெறுதற்குரிய கேள்விச் செல்வமும் எய்தப் பெருது தமிழ்த்தொண்டு செய்ய முற்படுதல் பயனில் செயலாகும். முன்னோர் மொழிப் பொருளையும் மரபுபட்ட இலக்கண முடிபுகளையும் ஆராய்ந்தறிந்து கொள்ளாது நெறியறியா மாக்களை மயக்கி, அவர் தம்மை நெறியல்லா நெறியிற் புகுத்தி ஆரவாரிப்போர் செயலானது குருடனைக் குருடன் வழி நடத்துவதுபோ லாகும்.

அவைக்களத்துச் சொல்லுதற்குரிய வரம்பினமைந்த ஆங்கில மொழியினை 'வேந்தன்மொழி' (*Kings English*) என அம்மொழிப் புலவர் விதந்து கூறுவர். அப்பரிசே யாமும் அவைக்களத்திற் சொல்லுதற் குரிய வரம்பினமைந்த தமிழினைப் 'பாண்டியன் றமிழ்' என்போம். 'எது தமிழ் ?' எனவினவுவாருக்குப் 'பாண்டியன்றமிழே தமிழ்' என்பது விடையாகும். அதுவே நிலை பேறுடையது; அறிஞர் போற் றற்குரியது. பொருள் வருவாயொன்றினையே கருதி மனம் போனவாறு மரபுதவறி யெழுதும் மொழிவழக்கானது மழைக் காலத்திலே தோன்றி அக்காலங் கழிய மறைந்து போகின்ற சிறு பூடுகளைப் போல நிலைபேறில் லாதது. நிலைபேறுடைய 'உண்மை' (*Truth*) 'அழகு' (*Beauty*) 'செம்மை' (*Goodness*) என்னும் இவை தம்மையே அறிஞரது உள்ளம் என்றும் அவாவிநிற்கும். முத்தமிழுள் இயற்றமிழானது உண்மையி னையும், இசைத்தமிழானது அழகினையும், நாடகத்தமிழானது செம்மை யினையும் சிறப்புற வெளிப்படுத்திக் காட்டுவன. பேருண்மையும் பேர

ழகும் வரம்புகடந்த செம்மையும் இறைவனுக்குரிய குணங்களாகச் சமயநூல்களாற் கூறப்பட்டன. இவைதம்மை வெளியிட்டுரைக்கும் ஆற்றலுடைமையினுலே தான் மொழிகள் தெய்வத்தன்மையுடையவாகக் கருதப்பட்டன. யாம் முதலிலே கூறிய தெய்வ வணக்கச் செய்யுளினுள்ளே, குமரகுருபரமுனிவரர், தெய்வத்தினைப் 'பழம்பாடற்ருெடையின்பயனே' எனவும், 'நறை பழுத்த துறைத்தீந் தமிழி ெனுழுகு நறுஞ் சுவையே' எனவும், 'தொழும்பருளக்கோயிற் கேற்றும்விளக்கே' எனவும் போற்றி வழிபடுகின்ருர். இத்தகைய வழிபாடு சமயங் கடந்த சமரஸநிலையினைத் தருவது.

'கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ரு டொழாஅ ரெனின்'

என்னும் பொய்யாமொழியின்படி ஆராய்ந்து அமைவரக் கற்ற கல்வியின் பயன் வாலறிவனுகிய இறைவன்பால் உள்ளத்தைச் செலுத்துதலேயாம்.

தமிழ்மொழிக்கு நலனளிக்கும் பெருங்காப்பியங்களும் அந்நீர்மையவாகிய மதுரைக்காஞ்சிபோன்ற சங்கச்செய்யுட்களும், காப்பியத் தலைவனது 'அருள் வலி யாண்மை, கல்வி யழகறிவிளமை யூக்கம் திருமலியீகை போகம் திண்புகழ் நண்புசுற்றம்' என்னும் இவைதம்மை விரித்துக் கூறுமுகத்தான் அத்தகைய செம்மை நலங்களை நாமும் நமது வாழ்க்கையிலே இயன்றவரை வெளிப்படுத்துமாறு நம்மை ஊக்குகின்றன. கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பருடைய வாக்கின் வலிமையினுலே அளத்தற்கரிய பெருமை வாய்ந்த காப்பியத்தலைவனது குணமாகிய கடலிலே யாமும் படிந்தாடி நலமடைகின்ருேம். இளங்கோவேந்தன் உவந்தளித்த தொடர்நிலைச் செய்யுள் துணையாக, 'உரைசால் பத்தினியை உயர்ந்தோ ரேத்தும்' உண்மையினைக் காண்கின்ருேம். அஃதன்றியும் பழந்தமிழ் நாட்டினை யாண்ட சேர சோழ பாண்டியரென்னும் முடியுடை வேந்தர் மூவரது அறனும், மறனும், ஆற்றலும் பிறவும் நம் உள்ளத்திற்கு ஒளியைத் தருகின்றன.

சமயக்கணக்கர் தந்திறஞ் சாராது நடுநிலை மேவி எப்பாலார்க்கும் பொதுவாகிய நெறியினைக் காட்டிய வள்ளுவர் வாய்மொழியானது யாம் எல்லாநலனையும் அடைதற்குரிய வழியினைக் காட்டுகின்றது. இவை இவ்வாருதலினன்ருே அண்மையிலிருந்த பெருந்தமிழ்ப் புலவராகிய சுப்பிரமணியபாரதியார்,

'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங்கோ வைப்போற்
பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை
உண்மைவெறும் புகழ்ச்சி யில்லை'

என நமக்கு உறுதிமொழி கூறுகிறார். இம்மாநாடு செவ்விதின் நடக்கும் பொருட்டு ஆண்டவனுடைய திருவருளினை வேண்டித் தோற்றுவாயாக யான் சொல்லுதற்கு எடுத்துக் கொண்ட இவ்வுரையினை நிறைவுசெய்கிறேன்.

# 8. ஆங்கிலவாணி.

திருமலிந்தோங்கிய நிலவுலகத்தின் வடமேற்குக்கோடியிலே, பவளம் பொலிந்து விளங்கும் ஆங்கில நாட்டின் கலைச்செல்வத்தை ஆராயப்புகுமுன், அந்நாட்டு மக்களது வரன்முறையை ஒரு சிறிது அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும். நாற்றிசையினுங் கடலினுற் சூழப்பட்ட பிரித்தானியா என்னுந் தீவின் வடபாலிலே ஒருபகுதி, ஸ்காட்லாந்து எனப்படும். மேற்றிசையில் ஒருபகுதி, உவேல்சு எனப்படும். இவ்விருபகுதியும் நீங்கலாக எஞ்சி நின்ற பெரும்பாகம் இங்கிலாந்து (அங்கிளத்தரை) எனப்படும். 'அங்கிளர்' என்னும் மொழிதிரிந்து ஆங்கிளர், ஆங்கிலர், இங்கிலீஷ் எனவாயிற்று. தெற்குக்கரையிலே சுண்ணக் கற்பாறைகள் மருவிக் கடலிலிருந்து நோக்குவோருக்கு கரை வெண்ணிறமாகக் தோற்றுதலின், ஆங்கில நாட்டுக்கு அல்பியன் (*albion*) வெண்ணிறத்தீவு, சுவேதத்துவீபம் என்னுங் கவிதைப் பெயருண்டு. மேற்றிசையிலே கடலுக்கப்புறத்திலே ஐர்லாந்து என்னும் தீவு உளது. இது பசும் புற்றரைகள் செறிந்திருத்தலின், மரகதத் துவீபம் எனும் கவிதைப் பெயர்பெற்றது.

மேற்குறித்த நான்கு தேசங்களிலும் வாழும் மக்கள் வெவ்வேறு இனத்தினர். ஸ்கொட்ஸ், உவெல்ஷ், இங்கிலீஷ், ஐரிஷ் என்னும் நான்கு இனத்தினரும் ஆதியிலே வழங்கிய மொழிகளும் நால்வேறு ஆவன. பூர்வத்தில் இவர்கள் கைக்கொண்ட சமயமும் வேறு. ஆங்கிலர் வருவதற்கு முன் பிரித்தானியாவின் கீழ், தென்பாகங்களில் வாழ்ந்த மக்கள் பிரித்தன் என்னும் இனத்தினர். இவர்கள் வெளிநாட்டுத் தொடர்பின்றி நாகரிகங் குறைந்தவர்களாயிருந்தனர்.

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலே, இத்தாலி தேசத்தின் தலைநகராகிய உரோமாபுரியானது பெரிய சக்கரவர்த்திகளுக்குரிய இராசதானியாக விளங்கியது. இச் சக்கரவர்த்திகள் தங்கள் இயற் பெயரோடு சீசர் என்னும் விருதுப் பெயரினைச் சார்த்தி ஆகஸ்தஸ் சீசர், திபேரியஸ் சீசர், கிளோடியஸ் சீசர் என்றித்தகைய பெயர்களைத் தாங்கினுர்கள். சீசர் என்னும் பெயரினைத் தமக்கு இயற் பெயராகக் கொண்டவர்

யூலியஸ் சீசர் எனப் பெயரிய பராக்கிரமசாலி. இவர் உரோமா புரிச் சேனைகளுக்குத் தளபதியாகச் சென்று பல நாடுகளை மேற் கொண்டு உரோமச் சக்கராதிபத்தியத்தின் எல்லையை அகலச் செய்தார். கிளோடியஸ் சீசர் காலத்திலே கி.பி. 43 ஆம் ஆண்டிலே, பிரித்தானியாவின் தென்கீழ்ப்பாகங்கள் உரோம ரது ஆளுகைக்குட்பட்டன. வடபாலிலுள்ள கலிடோனியா எனப்படும் ஸ்கொட்லாந்தை உரோமர் கைப்பற்றவில்லை. நானூறு ஆண்டுகளுக்கு உரோமர் ஆங்கில நாட்டை ஆண்டனர். அக்காலத்திலே அவர்கள் அமைத்த பாதைகளும் பாலங்களும் இன்றும் இருக்கின்றன. உரோமச்சக்கராதிபத்தியம் நிலைகுலைந்த காரணத்தினாலே உரோமர் வெளியேறிய பின், வடபாலிலுள்ள ஸ்கொட்ஸ் தெற்கே வந்து ஆநிரைகளைக் கவர்ந்து பிரித்தானிய யரைச் சில காலந் துன்புறுத்தினர்.

ஐந்தாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலே, ஜெர்மனி, ஸ்காண்டி நேவியா (இக்காலத்து நோர்வே, சுவீடன்) நாடுகளிலிருந்து கடல் கடந்து சென்ற சாக்சனியரும், அங்கிளரும் பிரித்தானியாவின் கீழ்த் திசையிலே சில பகுதிகளைப் பற்றி ஆளுகை புரிந்தனர். தேன்மார்க் நாட்டினராகிய தேனர் அவரை மேற்கொண்டு தம்மாணை செலுத்தினர். ஐந்நூறு ஆண்டுகளுக்கு நாடு பல குறுநில மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது. இவ்வாறு வந்து குடியேறினோர் பலருடைய கலப்பினாலேஆங்கில மக்கள் தோன்றினர். வாடைக் காற்றுக் கஞ்சாது சிறு படகுகளிலே கடல்மீதுசென்ற வைக்கிங்ஸ் என்னும் ஆங்கில முன்னோர் போர்த்தொழிற் பிரியராயிருந்தனர். பண்டைத்தமிழ் நாட்டிலிருந்த குறுநில மன்னரைப்போலப் பூர்வ ஆங்கிலரும் ஒருவரோடொருவர் போர்மலைந்துகொண்டிருந்தனர். சிறையாகப் பிடிக்கப்பட்டு உரோமாபுரியை அடைந்த ஆங்கில இளைஞர் சிலரைக்கண்ட கத்தோலிக்க கிறிஸ்தவ சமயத் தலைமைப் பீடாதிபதியாகிய பாப்பரசர் அவ்விளைஞர்கள் தோற்றப்பொலிவை நோக்கி வியந்து இவர்கள் ‘அங்கிள்ஸ்’ அல்ல ‘எஞ்ஜெல்ஸ்’ (வானவர்) எனக்கூறி ஆங்கில நாட்டிலேகிறிஸ்தவ சமயத்தை பரப்பும்படி சில குருமாரை அனுப்பினர்.

கிறிஸ்தவ சமயம் புகுதற்கு முற்பட்ட காலத்திலே, ஆங் கிளசாக்ஸன் என்னும் பூர்வ ஆங்கிலத்திலே பெயவுல்வ் (*Beowulf*) எனப் பெயரிய காப்பியமொன்று இயற்றப்பட்டது. இதன் பகுதி கள் இன்றும் இருக்கின்றன. கிறிஸ்து சமயம் புகுந்தபின் பழைய போர்த்தொழிலைக் கைவிட்டு மக்கள் கட்டுக்கடங்கி வாழத் தொடங் கினர். கவிகளும் சமய சம்பந்தமான நூல்களை ஆக்கினர். கேய்ட்மன் (*Caedmon*) கயின்வுல்வ் (*Cynewulf*) அல்பிரட் அரசர்

(*King Alfred*) என்றின்னோர் ஆக்கிய நூல்கள் சமயசம்பந்த மானவை.

கி.பி. 1066 ஆம் ஆண்டிலே, பிராஞ்சு தேசத்தின் வட பாலிலுள்ள நோர்மாண்டி நாட்டுச் சிற்றரசனுகிய உவில்லியம் என்பான், ஆங்கில நாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெற்றிகொண்டு அந்நாட்டின் முடிமன்னனுனன். இவனே உவில் லியம்–த–கோங்கரர் – 'வாகை சூடியஉவில்லிய மன்னன்' எனச் சரித்திர நூலாசிரியர் கூறுவர். இம் மன்னனேடு நோர்மானிய, பிராஞ்சியர் அநேகர் ஆங்கில நாட்டிலே குடியேறினர். ஆங்கில மொழியும் நோர்மானிய பிரஞ்சுப்பதங்களைஏற்று வழங்கத் தொடங்கியது. அதனுற் பாஷையானது வளமெய்தியது. ஆயி னும், நாட்டிலே அரசியற் கலக்க மிருந்தமையின், பெரிய நூல் கள் தோன்றவில்லை. முந்நூருண்டின் எல்லையிலேநோர்மான் பிராஞ்சியர் வேறுபாடின்றிக் கலந்து ஆங்கிலரோடு ஒன்ருயினர். நாட்டிலும் சமாதானம் நிலவியது.

கி.பி.1340 முதல் 1400 வரையும் வாழ்ந்த சாசர் (*cha-ucer*) என்னும் கவியை ஆங்கிலக்கவிதைவானின் உதயதாரகை யென இலக்கிய வரன்முறை ஆசிரியர் கூறுவார். இவர் முதலிலே தோன்றிய காரணத்தினுலே பெருமையுற்றனரேயன்றிக் கவித் திறமையினுல் அல்ல. பிராஞ்சிய செய்யுள் மரபினைப் பின்பற்றிப் புதுயாப்பு முறைகளை வழங்கினுர். கந்தர்பெரி எனப் பெயரிய ஆலயத்திற்கு யாத்திரை புரிந்த யாத்திரிகர்கள், வழியிலே ஒரு சத்திரத்தில் இறங்கி நிற்கும்போது தத்தமது வாழ்க்கை யநுபவத் திலே கண்டறிந்த சரித்திரம் ஒவ்வொன்றைக் கூறுவதாக அமைத் துக் கந்தர்பெரிக்கதைகள் என்னும் காப்பியத்தையும் சில சிறு நூல்களையும் சாசர் வகுத்தார். சாசர்காலத்திலிருந்த ஒரு நூற் றைம்பது ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்த ஸ்பென்சர் (கி.பி 1552–1599) என்னும் மகாகவி கவிஞர்க்குள்கவிஞர் எனப்போற் றப்பட்டார். இவரியற்றிய அரமடந்தையார் இராணி (*Fairy Queen*) என்னும் பெருங் காப்பியம் கவிநயம் நிறைந்தது, கற்பனையிலும் செஞ்சொல்லாட்சியிலும் நமது சீவக சிந்தாமணியை நிகர்த்தது. ஸ்பென்சர் காலத்திலே ஆங்கில நாட்டிலே அரசு புரிந்த எலிசபெத்து இராணி இல்வாழ்க்கையுட் புகாமல், மணிமுடிசூடி, நாட்டினைப் பரிபாலித்தலிலே முழுமனத்தையும் செலுத்தி வந்தாள். பாவாணர்களையும் சேனைத் தலைவர்களையும் பாராட்டி அவர்களுக்கு வேண்டுவன நல்கினுள். அதனுற் கவிதை வளம் எய்தியது. மக்களுடைய சிந்தை விசாலிப்பதற்கு வேறு சில சரித்திர நிகழ்ச்சிகளும் ஏற்பட்டன. அவற்றைச்சுருக்கமாகக்

கூறுகின்றும். எலிசபெத்து இராணியே ஸ்பென்சரது பெருங் காப்பியத்திற்குக் கவிதைத் தலைவி.

எலிசபெத்தின் தந்தையாகிய எட்டாம் ஹென்றி மன்னன் காலத்திலே ஆங்கில நாட்டு மதக் கொள்கையிலே ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டது. இம்மன்னன் ஒருவர் பின்னெருவராக ஆறு மனைவியரை மணந்தான். முதல் மனைவியை நீக்கிவிட்டு இரண்டாம் மனைவியை முறைமையாக விவாகஞ் செய்து இராணியாக்குதல் கருதி, அவ்வாறு செய்தற்கு உத்தரவளிக்கும்படிக்குத் தனது சமயத் தலைவராகிய உரோமாபுரிப்பாப்பரசரைவேண்டினன். கத்தோலிக்க கிறிஸ்தவ சமயக் கொள்கைப்படி முறையின் மணந்த மனைவியை நீக்குதல் மரபன்று ஆதலின், பாப்பரசர் உத்தரவளித்திலர். ஹென்றி மன்னன் அவரது ஆணைக்கு அடங்காது, ஆங்கில நாட்டின் தலைமையோடு அந்நாட்டு மக்களின் சமயநெறித்தலைமையையும் தானே தாங்குவதாக முற்பட்டுக்கத்தோலிக்க சமயத் தொடர்பினின்று நீங்கி, ஆங்கில திருச்சபையென ஒன்றினையேற்படுத்திச் சில சமய அத்தியக்ஷர்களைத் தன்வசப்படுத்தித் தன் கருத்தை நிறைவேற்றினன். இதனல், ஆங்கில நாட்டு மக்களின் சிந்தையிலே ஒரு புத்துணர்ச்சி யேற்பட்டது.

ஐரோப்பியர், அமெரிக்காக் கண்டத்தினைக்கண்டு பிடித்தது மற்றொரு விசேஷ நிகழ்ச்சி. கிறிஸ்தோபர் கொலம்பஸ் என்னும் மீகாமன் ஸ்பானியா தேசத்து இராணியாகிய இசபெல்லாவின் பொருளுதவியைப் பெற்றுக்கொண்டு மேற்குக்கடலை கடந்து இந்தியாவுக்குச் செல்லும் ஒரு புதிய மார்க்கத்தைக்கண்டுபிடிக்கும் நோக்கமாகச் சில பாய்க் கப்பல்களை அமைத்துக்கொண்டு புறப்பட்டான். அக்காலத்திலே நமது பாரத நாடுபெருஞ் செல்வமுற்ற நாடாக விளங்கியது. நமது நாட்டுவிளைபொருள்கள் அராபிக்கடல், பாரசீகக்கடல், செங்கடல் வழியாகச் சென்று பின்பு கரை வழியாகவும், மத்தித்தரைக்கடல் வழியாகவும் இத்தாலி நாட்டுத் துறைமுகங்களை அடைந்தன. வேனிஸ் நகரம் சிறந்த வர்த்தக ஸ்தலமாக விளங்கியது. இந்தியாவிலிருந்து சென்ற பட்டுத் துணிகளும், பொன்னும், முத்தும், யானைத்தந்தமும், மிளகும், சந்தனமும், இலவங்கப்பட்டையும், பிறவும் மேனுட்டு மக்களுடைய உள்ளத்தைக் கவர்ந்தன. பூவுலகம் கோளவடிவமானது என்னுங் கருத்து மேனுட்டிலே பரவிய அக்காலத்திலே, கிழக்கு நோக்கி இந்தியாவுக்குச் செல்ல ஒருபாதை இருப்பதினலே, மேற்கு நோக்கிச் செல்லவும் ஒரு பாதை இருக்கவேண்டுமென்னும் எண்ணம் கல்வியறிவுடையோர் சிந்தையில் உலவியது. கொலம்பஸ் புறப்பட்டது இந்தியாவுக்குச் செல்லும் வழிகாண்பதற்கு; ஆனுற் கண்டுபிடித்தது

அமெரிக்காக் கண்டத்தை. கி.பி. 1492 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்திலே, கொலம்பஸ் மத்திய அமெரிக்காவிலே சில தீவுகளை அடைந்தான்.

அக்காலத்திலே மத்திய அமெரிக்காவிலே மெக்சிக்கோ பீரு என்னும் நாடுகள் சிறந்த நாகரிகம் படைத்திருந்தன. மிகப்பழைய காலத்திலே, தமிழ்நாட்டு வணிகர் கிழக்கு நோக்கிக் கடல் கடந்து சென்று மத்திய அமெரிக்காவை அடைந்தனரென்றும் அங்கு நிலவிய நாகரிகம் நமது நாகரிகத் தொடர்புடையதென்றும் அறிஞர் கருதுகின்றனர். சாமன்லால் என்னும் ஆசிரியர் எழுதிய 'இந்து அமெரிக்கா' என்னும் நூலிலே பலசான்றுகளோடு இவ்வுண்மை நிறுவப்பட்டிருக்கிறது. அஃது ஒருபாலாக, மேனுட்டாராகிய கொலம்பஸ் மீகாமன் அமெரிக்காவைக் கண்டுபிடித்தபின் ஸ்பானியா தேசத்து மக்கள் துப்பாக்கியோடு சென்று மத்திய அமெரிக்க மன்னரைத் தந்திரத்தாலும் துப்பாக்கி வன்மையாலும் சிறைப்படுத்தி, அவர்கள் குவித்துவைத்த பொன்னைக்கவர்ந்து கொண்டு தம்மூர்க்கு வந்தனர்.

ஆங்கில நாட்டினராகிய கடற்கொள்ளைக்காரர் இடையில் நின்று, அப்பொன்னில் ஒரு பகுதியைக் கைப்பற்றிக்கொண்டு தம்மூர்க்குச் சென்றனர். அஃதன்றியும் எலிசபெத்து ராணியின் அரசியலாற்றலினுலே, ஆங்கில நாட்டுச் சைனியங்கள் சில போர்க்களங்களிலே, ஸ்பானிய சேனைகளை வெற்றிகொண்டன. ஐரோப்பாவின் மேற்குத் கரையில் உளவாகிய போர்த்துக்கல், பிராஞ்சு, ஒல்லாந்து நாடுகள் கடல் வர்த்தகத்தினுலே பொருளீட்டினவெனினும், பொருளும் கப்பற்படையுந் திரட்டிய வகையில் ஆங்கில நாடே முன்னணியில் நின்றது.

மேனுட்டார் அறிவு விசாலிப்பதற்குரிய மற்றொரு நிகழ்ச்சி அராபியா தேசத்திலே நிகழ்ந்தது. திருநாவுக்கரசுசுவாமிகள் நமது நாட்டிலிருந்த காலத்திலே அராபி நாட்டு மக்கமா நகரிலே முகம்மது நபி அவதரித்தார். நபியின் சீஷ பரம்பரையில் வந்தோர் மேற்கேயுள்ள பல நாடுகளிலே ஆணைசெலுத்தி அரசு புரிந்ததோடுகூட அறிவொளி விளங்குமாறுஞ் செய்தார்கள். கிறிஸ்துநாதர் காலத்திற்குப் பல நூற்றுண்டுகளின் முன்னே, யவனபுரத்தில் வாழ்ந்த அறிஞர்கள் இயற்றிவைத்த அரிய கலைநூல்கள் அராபியர் வழியாக மேனுட்டிலே பரவி அறிவொளி பரப்பியன. யவனவாணியின் செல்வப் புதல்வியருள் ஒருவராக ஆங்கிலவாணி உதித்தாள்.

ஆண்டவன் ஒருவனேயாயினும் பற்பல நாட்டுமக்கள் அவனுக்குப் பற்பல திருநாமங்களைத்தந்து வழிபடுமாறுபோலச் சொல்லின் கிழத்தியாகிய கலைவாணியும் பற்பல நாட்டுமொழிச் சார்பினுலே பற்பல உருவங்களை வகித்தாள். ஆதியிலே நான் முகக் கடவுளது நாவிலிருந்து வேதத்தை யருளி, இடைக்காலத் திலே வேதவியாசரது நாவினின்று மாபாரதத்தைத் தோற்று வித்துக் காளிதாசனை யுள்ளிட்ட உத்தமக் கவிகளது நாவிலே களி நடம்புரிந்தாள் ஆரியவாணி. இமயத்திற்கு வடபாலதாய் உத்தர குருவெனப் புராணங்கள் கூறும் போக பூமியையுள்ளிட்ட தாய், நாற்பது கோடி மக்களுக்கு உறைவிடமாகிய சீனத்திலே தோன்றிய கவிவாணரது நாவினை இருப்பிடமாகக் கொண்டாள் சீனவாணி. பண்டைக்காலத்திலே, யவனபுரத்தாரோடு போர் மலைந்தும் நட்புப்பூண்டும் மேற்றிசைக்குங் கீழ்த்திசைக்கும் நடு நாடாகி, அக்கினி தேவனை வழிபடுவோருக்கு உறைவிடமாகிப் பொலிந்த செல்வப் பாரசீகப்பழந் தேசத்துமக்கள் களிகூரும் வண்ணம் அந்நாட்டுப் புலவர்நாவின்று கவிசுரந்தளித்தாள் பாரசீகவாணி. ஹோமார் என்னும் அந்தகக் கவியின் நாவிலி ருந்து துரோயம் என்னும் ஈலிய நாட்டிலே நிகழ்ந்த போரினை விரித்துக்கூறும் ஈலிய காவியமும், அப்போர்க்களத்திலே சிறந்து விளங்கிய உலீசன் ( *Ulysses Odysseus* ) என்னும் வீரனது நிகழ்ச்சிகளைக் கூறும் உலீச காவியமும் ஆகிய வீரகாவியங்களை அளித்தும், ஐய்க்கிலீஸ், அரிஸ்தொபனீஸ், இயூரிப்பிடீஸ், என்னும் நாடகக் கவிகள் வாயிலாக என்றும் புலராது யாணர் நாட்செல்லுகினும் நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மைய வாகிய அழகிய நாடகங்களை அளித்தும், பிண்டார் என்னும் கவிவாணர், சஃபோ என்னுங் கவியரசி வாயிலாக அகப் பொருட்டுறை தழு விய இசைப் பாடல்களைத் தோற்றுவித்தும், சோக்ரத்தீஸ், பிளேத்தோ, அர்ஸ்தாத்தில் என்றித் தொடக்கத்த தத்துவ ஞானி கள் வாயிலாக உண்மைநூல், ஒழுக்கநூல்களைத் தோற்றுவித்தும் பண்டை யவனமொழிக்கு ஆக்கமளித்தாள் யவனவாணி. உரோ மவாணி, இத்தாலியவாணி, ஜெர்மானியவாணி, பிராஞ்சிய வாணி, ஆங்கிலவாணி யென்றின்னோரெல்லாம் யவனவாணியின் செல்வப் புதல்வியரே யாவர்.

கணிதம், சிற்பம், வைத்தியம், காவியம், தர்க்கம், தத்துவம் என்னும் அருங்கலைகளுக்கெல்லாம் தாயகம் யவனபுரமேயாகும். ஆதலினுலன்றே, மேனுட்டுக் கலைக்கழகங்களிலே, யவனபுரத்து மொழியாகிய கிரேக்க மொழியும் உரோமருக்குரிய லத்தீன் மொழியும் பெரிதும் கற்கப்பட்டு வருகின்றன. எலிசபெத்து இராணி காலத்திலே, அமெரிக்காக் கண்டத்துப் பொருட் செல்வமும்

பழைய யவன புரத்துக் கலைச்செல்வமும் ஆங்கில நாட்டிற்கு உரியவாயின. ஸ்பென்சர் என்னும் மகாகவி 'அரமடந்தையர் இராணி' என்னும் பெருங்காப்பியத்தோடமையாது அழகு பொருந்திய சிறு காப்பியங்கள் பலவற்றையும் செய்தார். ''ஆயன் நாட்குறிப்பு'' என்பது அவற்றுள் ஒன்று. அது இயற்கை வனப்பினைக் கூறுவது.

பலவகையிலும் ஆங்கில நாடு பொலிவுற்ற இக்காலத்திலே தான் செகசிற்பியார் (ஷேக்ஸ்பியர்) என்னும் சிறந்த நாடகக் கவிதோற்றினர். இவருடைய கவிவனப்பினை 'மதங்கசூளாமணி' யென்னும் நூலிலே சற்று விரிவாகக் கூறியிருக்கின்றோம். யூலியஸ்சீசர் எனும் நாடகத்தின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப்பை ஈங்குத் தருகின்றோம். இந்நாடகத் தலைவராகிய யூலியஸ்சீசர் பராக்கிரம சாலி யென்றும் சேனைத்தலைவரென்றும் முன்னர்க் குறிப்பிடப் பட்டார். உரோமாபுரியில் வாழ்ந்த காஷியஸ் எனப் பெயரிய சனத்தலைவனொருவன் கஸ்கா, திரேபோனியஸ், லிகாறியஸ், டேசியஸ், சின்னை, கிம்பர், என்பாரையும் நீதிமானும் யூலியஸ்சீசரது நண்பனுமாகிய மார்க்கஸ் புரூட்டஸையுந் தன்வயப்படுத்திப் பங்குனித் திங்களின் நடுநாளில், நண்பகலில், அத்தாணி மண்டபத்தில், யூலியஸ் சீசரது உயிரைக் கவர்வதற்கு ஏற்பாடு செய்தனன். குறித்த தினத்திற்கு முன்னுளிரவில், விண்வீழ் கொள்ளிகளும், தூமகேதுக்களும் பலவகை உற்பாதங்களுந் தோற்றின. யூலியஸ் சீசரின் மனைவி கல்பூர்ணியா தீக்கனுக்கண்டு அச்சமுற்றெழுந்து, புறத்தே நிகழ்கின்ற உற்பாதங்களினால் உள்ளம் அவலித்துத் துயிலொழித்திருந்து, காலைப்பொழுது வந்ததும் கணவனது முன்னிலையை யடைந்து,

> பேரிரவில் நடந்தவெலாம் பீழையினை விளைக்கப்
> பேதலிக்கும் உளச்சிறியேன் பேசுகின்ற மொழிகள்
> ஆருயிர்க்குத் தலைவ! நின தருட்செவியில் வீழ்க,
> அகத்திடையின் றிருந்திடுக, அவைபுகுத லொழிக,

எனக் குறையிரந்துவேண்டி நின்றனள்.

அதனைக் கேட்ட சீசர் புன்னகை புரிந்து,

> அஞ்சினர்க்குச் சதமரணம், அஞ்சாத நெஞ்சத்(து)
> ஆடவனுக்(கு) ஒருமரணம், அவனிமிசைப் பிறந்தோர்
> துஞ்சுவர்என், றறிந்திருந்தும் சாதலுக்கு நடுங்கும்
> துன்மதியு டரைக்கண்டாற் புன்னகைசெய் பவன்யான்

இன்னலும்யானும்பிறந்த தொருதினத்தில் அறிவாய்;
இளஞ்சிங்கக் குருளைகள்யாம்; யான் மூத்தோன் எனது
பின்வருவது இன்னல்எனப் பகைமன்னர் அறிவார்,
பேதுறல்பெண்ணணங்கே! யான் போய்வருதல்வேண்டும்,
எனக் கூறினர்.

இத்தருணத்தில் டேசியஸ் என்பவன் வந்து அத்தாணி மண்டபத்திற் குழுமியிருந்த முதியோர், சீசரை அழைத்து வரும்படி சொல்லியதாகத் தெரிவித்தான். சீசர் முதலிலே மறுத்துப் பின்பு இசைந்து உடன்போயினர். வழியில் ஒரு சேவகன் ஒரு நிருபத்தைக் கொண்டுவந்து கொடுத்து, 'இது சீசருடைய சுகத்தைக் கோரியது, இதனையுடனே படித்தருளவேண்டும்' எனச் சீசர் கையிற் கொடுத்தனன். 'நல்லது நண்ப! சனங்களுடைய சுகத்தைக் கோரிய நிருபங்களைப்படித்த பின்பு இதனைப்படிக்கிறேன்' என்று கூறிவிட்டுச் சீசர் அத்தாணி மண்டபத்தை நோக்கி நடந்தனர். அங்குச் சிம்பர் என்பவன் முற்பட்டுவந்து முழந்தாட்படியிட்டு நின்று, 'மஹௌதாரிய மஹாப் பிரபுவே! ஏழையேனது விண்ணப்பத்திற்கிரங்கி ஏழையேனது சகோதரனை மன்னித்தருளவேண்டும்,' எனவேண்டிநின்றனன்.

சீசர் அவனை நோக்கித்,

தாழ்ந்து மென்மொழி யுரைத்திடேல், தரணியிற் பணிந்து
வீழ்ந்து நைபவர் பொய்யுரைக் கிரங்கிய வீணர்
சூழ்ந்து செய்தன துடைத்துப்பின் சோர்வினை யடைவார்
ஆழ்ந்து செய்வன செய்யும்யான் அவர்நெறி அணையேன்;

அண்ணல் நீர்மையேன், பிழைசெயேன், அணுவளவேனும்
நண்ணும் நீதியிற் பிரிந்திடேன், நாயெனக் கதறிக்
கண்ணில் நீர்மிக நிலத்தினிற் புரள்வதாற் கருதும்
எண்ணம் முற்றுறும் என்னநீ எண்ணுவதிழிவே,

எனக் கூறச் சார்ந்து நின்ற மார்க்கஸ் புருட்டஸ் சீசரை நோக்கி, 'ஐய! நான் இச்சகம் பேசுவேனல்லேன், தேவரீரது திருக்கரத்தை முத்தமிட்டேன், சிம்பரின் விண்ணப்பத்துக்கிரங்கி அவரது சகோதரனை விடுதலை செய்தல் வேண்டும்' என்றனன். சமீபத்தில் நின்ற காஷியஸ் சீசரை நோக்கி, 'மகிமை பொருந்திய சீசரே! மன்னிக்கவேண்டும்! உம்மிருதாளினையும் பற்றினேன், சிம்பரின் சகோதரனை விடுவிக்கவேண்டும்,' என்றனன். சீசர் தம்மைச் சூழ்ந்துநின்று விண்ணப்பித்தோரைநோக்கி,

இரங்குதிர், என்ன இரக்கும் நீர்மையர்
தமைப்பிறர் இரக்கிற் றயைகாட் டுநரே;
நும்போல் வேனெனின், நும்மொழிக்கு இசைவேன்;
வானகம் மிளிரும் மீனினம் அனைத்தும்
தற்சூழ்ந் தசையத் தானசை வின்றி
நிலைபெறு துருவன் நிலைமைகண் டிலிரோ ?
வான்மீன் அனையர் மாநில மாந்தர்;
துருவன் அனையன் ஒருவனீங் குளனல்;
அவன்தான் யான், என அறிகுவிர், புகன்ற
மொழியிற் பிரியேன்; பழியொடு படரேன்;
மலைவீழ் வெய்தினும், மனம்வீழ் விலனே,

எனக்கூறினர். இதனைக்கேட்ட புரூட்டஸ் ஆதியோர் சீசரது பெருமித வுரையை தற்பெருமை யுரையென வெண்ணி, உடைவாளை உருவி அனைவரும் ஏகோபித்துச் சீசரை வெட்டினர்கள். 'நீயுமா புரூட்டஸ்' என்னும் உரையோடு சீசர் வீழ்ந்து மரணித்தனர்.

பிளூத்தாக் (Plutarch) எனப் பெயரிய யவனபுரத் தறிஞர் இயற்றிய வீரர்வாழ்க்கைச் சரிதங்கள் என்னும் நூலின் வழியாக அநேக சரித்திரங்களையும், ஆங்கிலநாட்டு மன்னர் சரித்திரங்கள் பலவற்றையும் செகசிற்பியார் நாடகமாக்கி உலகிற்கு அளித்தார். ஆங்கிலமொழி உலகில் வழங்குங்காலம் வரையும் இப்பெருங் கவியின்பெயர் நின்று நிலவும். ஆங்கில நாடு பெருஞ் சிறப்புற்றிருந்த காலத்திலே, தோன்றிய செகசிற்பியாரைப் போலத் தமிழ்நாட்டு மன்னர் கடல்கடந்து சென்று பல நாடுகளிலும் தமதுவெற்றிக் கொடி நாட்டிய காலத்திலே தோன்றிய கம்பநாடர், உலகுபுகழும் வனப்புவாய்ந்த காப்பியத்தை வகுத்தளித்தார். வீரத்தையும், ஆண்மையையும் மக்கள் நீர்மையையும் சித்திரித்துக் காட்டும் வகையிலே இருபெருங் கவிஞரும் ஒத்தபான்மையர்; இருவர் நாவிலும் நின்று கவிதை சுரந்தளித்தவள் ஒருத்தியன்றே ?

இக்காலத்திலே, மில்தனர் எனப்பெயரிய காப்பியக் கவியும் வாழ்ந்தார். யவனபுரத்துக் காவியங்களிலே நன்கு பயின்று, அவை தம்முட் பொதிந்த வனப்பு விளங்கச் செய்யுள் செய்தார். அவரியற்றிய பெருங் காப்பியம் 'சுவர்க்க நீக்கம்' எனப் பெயரியது. இதன் ஒருபகுதியினைத் தமிழ்ப் பெருங்கவி வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தமிழ் விருத்தச் செய்யுளில் மொழிபெயர்த்துள்ளார்கள்.

தேவாசுர யுத்தங்கூறுதலின் இந்நூல் கந்தபுராணம் போன்றது. வானுலகத்திலே ஆண்டவன் முன்னிலையிலிருந்த தேவர்களின் மூன்றின் ஒரு பகுதியார் இறைவனுணைக்கு அமைந்து நடக்காத காரணத்தினுலே நரகராயினர். இவர்கள் தலைவனுகிய ஒளிவண்ணன் சாத்தானுயினுன். இந்த எல்லையிலே, இறைவன் இம் மண்ணுலகையும் புல், பூண்டு, மரஞ்செடி, கொடி, பறவை விலங்கு, மீன் என்னும் இவற்றையும் படைத்து இறுதியிலே மன்பதைக்குத் தந்தை தாயாராகிய அத்தனையும், அவ்வையையும் படைத்து அவர் தம்மை ஏதேன் என்னும் உவவனத்தில் இருத்தினுர். இவ்வுவவனம் பேரழகுடையது. இதன் நடுவிலே கலை ஞானத்தருவிருந்தது. அதன் கனியை உண்ணவேண்டாமென்று ஆதித்தந்தை தாயாருக்கு ஆண்டவன் ஆணையிட்டிருந்தனர். சாத்தான் அவர்களை வஞ்சித்துக்கனியை உண்ணுமாறு செய்தனன். அக்குற்றத்திற்காக அத்தனும் அவ்வையும் பூலோக சுவர்க்கமாகிய உவவனத்திலிருந்து துரத்தப்பட்டனர். இதுவே காப்பியத்தின் கதை.

ஐந்தாம் பரிச்சேதத்தின் தொடக்கத்திற் சில அடிகளின் மொழி பெயர்பினைத் தருகின்ருேம்.

நித்திலத்தை வாரி நிலத்தில் உகுத்ததுபோல்
காலைப் பரிதி கதிர்காலும் வேளையிலே,
உள்ளக் கவலையின்றி உணவுடலிற் சேர்தலினுல்,
நன்கு துயின்றெழுந்த நல்லோர் புகழ் அத்தன்
இளங்காற் றிசையொலியும், இன்ப இலையொலியும்,
வளஞ்சான்ற நீரருவி வாய்நின் றெழுமொலியும்,
பள்ளி யெழுச்சிப்பண் பாடுகின்ற புள்ளொலியும்
ஆரா உவகைதர, அன்பிதயத் துள்ளூரச்,
சீரார் இளமான், திருமகள் போல்வாள் அவ்வை,
காதற் கிளியனைய கட்டழகி, எந்நாளும்
வைகறையில் முன்னெழுவாள் மலர்ச்சயனம் விட்டகலாச்
செய்கையினை நோக்கி, அவள் செந்தா மரைவதனம்
ஏறச் சிவந்த இயல்பும், மலர்க்கூந்தல்
சீர்சிதைந்து சோர்ந்த செயலுங்கண் டுள்ளுருகி,
எழிலார் மடநல்லார் இன்றுயிலுஞ் சீரிதே
என்னவுளத் தெண்ணி, இளந்தென்றல் மென்மலர்மேற்
சென்று வருடுந் திறமனைய மெல்லொலியில்,
'என்னு ருயிர்த்துணையே; ஈசன் எனக்களித்த
செல்வ நிதியே செழுந்துயில்நீத் தேயெழுவாய்,
புத்தமிழ்தே!, அன்பே புலரிப் பொழுதினிலே,

வாச மலர்க்கொடியில் வண்டினங்கள் தேன்அருந்தும்
விந்தையினைக் காண்போம், விழிதுயில்நீத் தேயெழுவாய்,
வண்ணவண்ணப் பூக்கள் மலர்ந்தனகாண்' என்றுரைத்தான்;
ஆங்கவளும் இன்றுயில்நீத் தன்பன் முகநோக்கி,
'மேதகவு செம்மைநெறி மேவியஎன் னன்பரே!
காதலரே! நும்முகமும் காலை இளம்பொழுதும்
கண்டேன்; கவலையற்றேன்; கங்குற் பொழுதினிலே,
கனவோ நனவோநான் கண்டதொரு காட்சியினை
விண்டுரைப்பேன் கேளீரிம் மேதினியில் வந்ததற்பின்,
நாளின்பின் நாள்கழிய நாளையென்ப தொன்றறியாத்
துன்ப மறியாத் தொடக்கறியா வாழ்க்கை துய்த்தேன்;
கடந்த இரவிற் கலக்கமுறுஞ் செய்திகண்டேன்;
நின்குரல்போல் மென்குரலில், ''நித்திரையோ அவ்வையே!
இனிய நிசிப்பொழுதில் எவ்விடத்தும் மோனநிலை;
வட்ட மதியம்உயர்வானின் ருளிகாலும்;
இருள்குவிந்த மென்னிழலால் எங்கெங்கும் எப்பொருளுங்
கண்ணுக் கினியகண்டாய், காரிகையே! வானுறையும்
விண்ணவர்நின் பேரழகில் வேட்கையுற்ற நீர்மையராய்க்
கண்ணிமையார் நோக்குதலைக் கண்டிலையோ, ''என்றுரைக்க
எழுந்தெங்கும் நோக்கினேன்; இன்குரலின் பின்சென்றேன்;
ஞானத் தருவிடத்தை நண்ணினேன், ஆங்கொருவன்
வானோர் படிவத்தன் வாய்விட் டுரைபகர்வான்;
''கண்ணுக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
உண்ணத் தெவிட்டா உணர்வமிழ்தச் செங்கனிகள்,
எண்ணெண் கலைஞான இன்கனிகள் தாங்கிநின்ற
செல்வ மரமே நின் செழுங்கிளைகள் பாரித்த
தீங்கனியை மானிடருந் தேவர்களும் உண்டிலர்காண்;
கல்வி யறிவைக் கடிந்தொதுக்கல் சீரிதோ ?
உண்பல்யான்'', என்றூன் ஒருகனியை வாய்மடுத்தான்;
ஆணை கடந்தசெயல் ஆதலினால் நான் அஞ்சி,
ஒருபால் ஒதுங்கினேன்; உரவோன்பின் னும்மொழிவான்;
''மானிடர்இத் தீங்கனியை மாந்துவரேல், வானுலக
இன்பம் பெறுவார்; எழிற்பாவாய், அவ்வையே!
இக்கனியை உண்ணுதியேல், எழிலார் அரமகளிர்
தோற்றப் பொலிவுடனே தூயஅறி வும்பெறுவாய்;
வானத் திவர்ந்துசெல்லும் வல்லமையும் நீபெறுவாய்;
நாகநாட் டோர்தம் நலம்பெறுவாய்,'' என்று சொல்லி,
ஓர்கனியைத் தந்தான் உயர்மணமுந் தீஞ்சுவையும்,
புலன்வழியென் சிந்தைபுகப் புதுக்கனியை வாய்மடுத்தேன்
ககனத் தெழுந்தந்தக் கந்தருவன் பின்போனேன்;

மேகமியங்கும் வியன்புலத்தைத் தாண்டியபின்,
மேதினியை நோக்கி வியந்தேன்; அவ்வெல்லையிலே,
கந்தருவன் சென்றுவிட்டான்; கண்டுயின்றேன் காதலரே!
கனவீ தெனவறிந்தேன் கலக்கந் தெளிந்த' தென்றாள்.

செகசிற்பியார் காலம் கி.பி. 1564 முதல் 1616 வரை ஆகும்; மில்தனர் காலம் 1608 முதல் 1674 வரை ஆகும். டிறைடன் என்னும் அகலக்கவி 1631 முதல் 1700 வரையும் வாழ்ந்தார்; பாப்பு என்னும் இலக்கணக்கவி 1688 முதல் 1744 வரை வாழ்ந்தார்.

பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலே ஆங்கிலமொழி வழங்கிய மக்களின் தொகை ஐம்பது லக்ஷமாகும். ஐம்பது லக்ஷம் என்றால் அரைக்கோடி. இந்நாளிலே இலங்கைத் தீவிலே யுள்ள சனத்தொகையினும் குறைந்த எண்ணிக்கையுள்ள மக்களே, அந்நாளில் ஆங்கில நாட்டில் வாழ்ந்து ஆங்கில மொழியை வழங்கினார்கள். முந்நூறாண்டு எல்லையினுள்ளே ஆங்கில மொழியைத் தமது தாய் மொழியாகக் வழங்குவோர் தொகை நாற்பது மடங்கு பெருகிவிட்டது. பிரித்தானியாவிலே, இந்நாளில் வாழும் நாலரைக் கோடி மக்களும், அமெரிக்க ஐக்கிய மாகாணம், கனடா, அவுஸ்திரேலியா, தென் ஆபிரிக்கா முதலிய குடியேற்ற நாடுகளில் வாழ்வோருமாக இருபது கோடி மக்கள் ஆங்கில மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் இந்நாளில் இப்பூவுலகில் வாழ்கின்றனர். அஃதன்றியும் ஆங்கிலரது ஆணைசெல்லும் இந்தியா முதலிய நாடுகளிலும், பிற நாடுகளிலும், ஆங்கில மொழியறிவுஉள்ளோர் தொகை இன்னும் பலகோடியாகும்.

கி.பி. 1882 முதல் 1901 வரையும் பிரித்தானிய சக்கராதிபத்தியத்தினை ஆளுகை புரிந்த விக்டோரியா ராணியாரின் காலம் ஆங்கில நாடு பல துறையிலும் சிறப்பெய்திய காலமாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே தோன்றிய உவால்டர் ஸ்கொட் (1771–1832), உவேட்சுவேத் (1770–1850) என்னுங் கவிவாணர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்தார்கள். பைரன் (1788–1824), ஷெல்லி (1792–1822), கீத்சு (1795–1821), தெனிசன் (1809– 1892,) றபர்ட் பிறௌனிங் (1812–1898) எனப்பெயரிய அழியாப் புகழ்படைத்த அகலக்கவிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டிலே திகழ்ந்தார்கள். மேற்குறித்த எழுவரும் இயற்றிய காப்பியங்களும் தனிப்பாடல்களும் எத்தனையோ பல. எண்ணிறந்த புலவர்கள் சிறந்த வசனகாவியங்கள்

இயற்றினார்கள். சையன்ஸ் என்னும் அறிவியல் நூல், கணிதநூல், வானநூல், இதிகாசநூல், தத்துவநூல் முதலிய கல்வித்துறைகள் பலவற்றிலும் எத்தனையோ பல நூல்கள் எழுந்தன. ஆக்ஸ்பர்ட், கேம்பிறிட்ஜ் என்னும் நகரங்களிலுள்ள பழைய பல்கலைக் கழகங்களும், லண்டன், மான்செஸ்டர், முதலிய நகரங்களிலுள்ள புதிய பல்கலைக் கழகங்களும் கலைத்துறைகள் பலவற்றையும் போற்றி ஆதரித்துவந்தன; இன்னும் ஆதரித்து வருகின்றன.

மேலே நாம் குறிப்பிட்ட எழுவருள்ளே உவால்டர்ஸ்கொட் எத்தனையோ சிறந்த வசன காவியங்களைச்செய்திருக்கிறார்; இவர் ஆக்கிய செய்யுள்வடிவ நூல்கள் அத்துணை உயர்வுடையவல்லவாயினும், கதை பொதிந்த பனுவல்களாதலின், இளைஞர்க்கு உவகை பயப்பன. இவர் ஸ்கொட்லாந்திலே பிறந்தவர்; தேசாபிமானம் நிறைந்தவர். பழைய காலத்திலே தமது நாட்டிலே வாழ்ந்த குறுநில மன்னரது வீரச் செயல்களையும் அவர்களது மன்றங்களிலே யாழிசைத்த பாணர் திறத்தினையும் சிறப்புறக்கூறுவார்.

இவரது பாடல்களைப் படிக்கும் போது, பழந்தமிழ் நாட்டின் நினைவு உள்ளத்திலே இயல்பாக எழும். மன்னனுயிர்காக்கத் தம்முயிரையீயும் மறவர் செயலும், அடுகளத்திலே தம்மைந்தர் பொருது வீழ்ந்த செய்திகேட்டு உவகைக் கண்ணீர் உகுத்த வீரத்தாயர் செயலும், ஆண்மைசான்ற ஆடவரும் அழகுவாய்ந்த அரிவையரும் கேட்டு உளமுருகுமாறு வீரஞ்செறிந்த பாடல்களை யாழிசையோடு பாடும் பாணர் செயலும் பழந்தமிழ்நாட்டுக்கு உரியனவன்றோ ? இத்தகைய செயல்கள் உவால்டர் ஸ்கொட் என்னும் கவிஞரது தாய்நாட்டுக்கும் உரியன.

இவர் பாடிய பாணன் பாட்டு என்னும் பனுவலின் தொடக்கத்திலே பாணனது பழைமை கூறுமிடத்துத்

> '' தாவுகின்ற பரிமாவின் மீதிவர்ந்து சென்று
> தரணிபரும் அரிவையரும் உருகவிசை பொழிவோன்''

எனப்பாணனைப் பாராட்டுகிறார். கால வேறுபாட்டினாலே வேற்று மன்னன் மணியாசனத்தமரப், பாணன் ஆக்கமிழந்து, பசிப் பிணியையாற்றுதற்கு ஒருபிடியுணவுதேடி, ஏழைகளுடைய மனையினைநாடி, அலைகின்ற நீர்மையினை உருக்கத்தோடு கூறுகிறார்.

மேலும், நீர்நிலைக்கன்னிகையென்னும் அழகிய பனுவலின் தொடக்கத்திலே, கவி தன்னையே பாணனாகக்கற்பித்துத் தேடுவாரின்றிப் பலநாள் மரக்கிளைமீது கிடத்தலிற் பசுங்கொடிபடர்ந்த யாழ்க்கருவியினை முன்னிலைப் படுத்திக் கூறுகிறார்; 'வடபுலத்து நல்யாழே! நீருற்றினுக்கு நிழலளிக்கும் இம்மரக்கிளைமீது நெடிது தங்கினை. இலையொலியும் அருவி நீரொலியும் இசையியம்ப, நின்னரம்புகள் இசையின்றித் துயிலுதல் முறையாகுமா? முன்னாளிலே வீசுகின்ற காற்றிலே இசையமிழ்தத்தையுகுத்தனையே! நின்பாற் பொருமையுற்ற பசுங்கொடி படர்ந்து, நின் நரம்புகளை ஒவ்வொன்றாகக் கட்டிவிட்டமையினாலே பேசாதிருக்கின்றனையா? வீரர் முகத்திலே புன்னகை தவழவும், அரிவையர் நாட்டங்களிலிருந்து உவகைக்கண்ணீர் கலுழவும் நினது இனிய குரலினாலே பேசலாகாதா? முன்னாளிலே, கலிடோனியாவிலே, விழாக்கொண்டாடுவார் மத்தியிலே, நீ மௌனஞ் சாதித்ததில்லையே. காதலையும் வெற்றியையும் பாடி, அச்சத்தையும் பெருமிதத்தையும் அளவுபடுத்தினையே. நினது இசை கேட்டுருகும் வண்ணம் காவலரும் காரிகை நல்லாரும் சூழ்ந்து நின்றனரன்றோ? வீரரது தீரச்செயலும் காரிகையாரது ஒப்பற்ற கண்ணிணைகளுமே நினது பாடற் பொருளாக அமைந்தன.

'நல்யாழே! துயிலொழிந் தெழுவாயாக, நினது நரம்புகளிற் படருங் கையானது பயிற்சியற்ற கையெனினும், செழியபழம் பாடல்களின் இன்னொலியை ஓரளவிற்காவது இசைத்தலாகாதா? நின்னிசைக்கு ஓர் இதயமாவது துடிப்புறுமெனின், நின்செயல் வீண்செயலாகாதல்லவா? நீ இன்னும் வாய்திறவாதிருத்தல் தகுதி அன்று. சித்தத்தைக்கவரும் வனமோகினியே! எழுந்திரு, இன்னும் ஒருமுறை எழுந்திரு'.

உவேட்சுவேத் எளிய நடையிலே, பொதுமக்களுடைய இன்பத் துன்பங்களையும், இயற்கை வனப்பையும் பொருளாக வைத்துக் கவியியற்றியவர்.

முதுவேனிற்காலம்; நண்பகல்; பரந்தவெளியிடத்திலே சிதைந்த குரம்பையொன்று காணப்படுகிறது. அதனைநோக்கிக்கவிஞர் நடந்து செல்கிறார். செல்லும் வழி சேற்று நிலம் ஆதலினாலே கால்கள் துன்புறுகின்றன. சேற்றிலிருந்து ஈக்கள் எழுந்து முகத்தைச்சூழ, இருகைகளாலும் ஓய்வின்றி அவற்றை ஓட்டுகிறார். இதனால் கைகள் சோர்கின்றன. இத்தனை அழகினிடையே கவிதை சுரக்கின்றது.

முதுவேனிற் பெரும்பொழுதின் முனைத்தெழுந்த பரிதி
முன்னேறி ஒளிபரப்ப, மென்னீர அருவி
மதுவாரும் பொழிலகத்துத் தென்றிசையிற் றேன்ற,
வடதிசையின் மிகத்தெளிந்த வளிவழங்கும் வெளியில்,

வானகத்தில் அசைவின்றி வதியுமுகிற் குலங்கள்
மன்னியநன் னிழல்பரப்ப, அந்நிழலி னிடையே,
வேனில்வெயில் கதிர்சொரிய, உளமகிழ்வு விரிய,
மெத்தென்ற பசும்புல்லில் எத்தொழிலும் இன்றி,

அஞ்சிறைய புள்ளிசைக்கும் செழும்பாடல் செவிவாய்
அகநுழைய, இருள்விரவு மலைமுழையில், அயர்ந்து
துஞ்சுதல்போற் றுயிலாது கடைக்கண்ணுல் அழகு
சுவைத்திடுவான் ஒருவன்; அவன் சுகத்தினையென் னென்போம்?

நோக்கினிய அவ்வெளியில், இருகாலும் சேற்றில்
நொந்தலைய, முகத்தினைச்சூழ்ந்து அந்தரமே பெயரும்
ஈக்குலங்கள் தமையோட்டும் இருகரமுஞ் சோர,
இளைப்புடனே வழிநடந்தேன் யானுமந்தப் பொழுதில்.

நீண்டுயர்ந்த மரம்பலவும் உடன்பிறந்தார் போன்று
நிலைத்தொன்றுஞ் சோலையிலே, இலைக்கூரை சிதைய,
ஈண்டிநின்ற சுவர்நான்கா யியைந்ததொரு குரம்பை;
இக்குரம்பை தனையடைந்தேன்; இளைப்பொழிந்தேன்; ஆங்கு

நல்லிரும்புப் பூண்செறிந்த தண்டொருபாற் கிடக்க
நன்னிழலிற் பலகையின்மேல் என்னரிய நண்பன்
அல்லலறப் படுத்திருந்தான், திணியநல் லுடலம்,
அருஞ்சுரங்கள் பலகடந்தும் அசையாத நிலையான்

தீர்க்காயுளாக எண்பது ஆண்டு வாழ்ந்து ஓய்வின்றிக் கவிதை புனைந்தளித்த உவேட்சுவேத் கிழவர் இயற்றிய பாடல்கள் மிகப்பல. உயர்ந்த நோக்கமும் வேதாந்தக்கருத்தும் அமைய எளிய நடையிலே செய்யுள் செய்தார். இவரும் வேறு சில புலவர்களும் வடபாலிலே ஸ்கொட்லாந்திலே வாவிகளிடையே வாழ்ந்து கவி இயற்றினமையின் வாவிக் கவிஞர் என்னும் பெயருக்குரியராயினர்.

இவருக்கு நேர் விரோதமாக முப்பத்தைந்து, முப்பது, இருபத்தைந்து என்னும் எண்ணிக்கையுடைய ஆண்டுகள் மாத்திரமே

உயிர் வாழ்ந்த பைரன், ஷெல்லி, கீத்சு என்னும் மூன்று பெருங் கவிகளும் ஆங்கிலமொழிக்கே அழியாத பெருஞ் செல்வத்தை உதவினர். இம் மூவரும் நண்பர்கள். பைரன் கிரேக்க நாட்டிலே போர்க்களத்திலே உயிர் துறந்தார்; ஷெல்லி உரோமா புரியை யடுத்த கடலிலே படகு கவிழ்ந்து அமிழ்ந்தி உயிர்நீத்தார். இவர் உடலினை அக்கடற்கரையிலே தகனித்துச் சாம்பரை உரோமாபுரியிலே அடக்கஞ் செய்தார்கள். கீத்சும் தமது பூதவுடலினை உரோமாபுரியிலே நீத்தார், மூவரிலும் இளையாராகிய கீத்சு முதலிலே மரணித்தார். இவரைக்குறித்து ஷெல்லி இயற்றிய கையறுநிலைச் செய்யுள், நிறைந்த கவிநயம் வாய்ந்தது. கடலிலமிழ்ந்திய ஷெல்லியின் சட்டைப்பையிலே கீத்சு இயற்றிய லாமியா என்னும் பனுவல் இருந்தது.

இவர்கள் முற்பிறப்பிலே யவனபுரத்திலும் உரோமாபுரியிலும் வாழ்ந்த புலவர் வரிசையில் உள்ளவர்களோ என எண்ண வேண்டி இருக்கிறது. கீத்சு கல்லூரியிலே யவன மொழி பயிலவில்லை; ஆனால் அவருடைய செழும் பாடல்கள் வரிக்கு வரியவனபுரத்துக் கவிநயம் சொட்டுவன. இம்மூவரும் இயற்றிய சிறந்த நூல்கள் பாரகாவியங்களாதலினாலே, ஒவ்வொரு வரையுங் குறித்து ஒவ்வொரு தனிப்புத்தகம் (பெரிய அளவிலே) எழுதினாலன்றி, இவர்களது ஆற்றலை அளவிட்டுரைக்க முடியாது.

இற்றைக்கு இருபது ஆண்டுகளுக்கு முன்னே லண்டன்மா நகரிலே, கீத்சு இகவாழ்வொருவிய நூற்றாண்டுவிழாக் கொண்டாடி னார்கள். அவ்விழாக்கொண்டாட்டத்து நிருவாக சபையாருக்கு யான் எழுதியனுப்பிய செய்யுளை இங்குத்தருகின்றேன். இப் பெருங்கவி வகுத்த காப்பியங்களின் தொகையினை இச் செய்யுள் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

திருமலி அழகுடைச் செழும்பொருள் தானே
உவகை நீர்மையது; ஆங்கவ் வுவகை
பன்னாட் கழியினும் கழியா இயல்பிற்
றண்டா இன்பந் தந்துநிற் பதுவே
எனமுதல் நிறீஇய இன்னிசைச் செய்யுள்
மனனுறு மகிழ்வினை வழங்கி அணிமிகும்
செஞ்சொற் பொதிந்த செவ்விய நடையினது;
அஞ்செஞ் சீறடி அரமகள் ஒருத்தி
சோமனுலகு துறந்து, புவி யுற்றுக்
காமனுங் கைதொழுங் கட்டழ கமைந்த
**எண்படிமி யோன்** எனும் இளவலை விரும்பும்

செய்தி கூறும் சீரிது; திரைகடல்
அலையி னுப்பணும், அருங்கடி கமழ்தரும்
நறுமலர் பொதுளி உறுஞிமி றார்க்கும்
உவவன மருங்கும் உற்ற துரைத்தலின்
விஞ்சைய ருலகின் வியன்றெரிந் துரைப்பது;
யவனநல் லறிஞர் பனுவலி னமைந்த
கவிநய மருவிய காட்சியது; அறிஞர்
பெருங்காப் பியமெனப் பேசுதற் குரிய
அருங்காப் பியத்தை அளித்தனை மன்னோ.
அதாஅன்று,
மாயா மயக்க வஞ்சமிவ் வுலகம்
குருபரன் அருளால் மருவுவது அறிவெனும்
உண்மையை யுரைக்கும் உண்மைசால் கவிதை
லாமியா வெனும்பெயர் மேவிய மடவரல்
லீசியஸ் என்னும் இளைஞற் பேணி
இன்னுயிர்க் காதலன் ஆக்கல் வேண்ட
அவனும்,
மங்கல நாளை வழங்கும் எல்லை
அபல்லோனியன் எனும் அறிஞன் தோன்றிக்
கட்புலங் கொண்டவள் கள்ளவஞ் சனையை
ஒழித்த துரைக்கும் உயர்நடைச் செய்யுள்
அளித்தனை மன்னோ; ஆங்கது வன்றியும்
காதலி னியல்பைக் கருத்துற விளக்கும்
இஸபெல் லாவின் இன்னல்சார் சரிதம்
வசையின் றுகு மாண்பிற் சமைத்தனை;
அதன்கண்,
நித்திலந் தருவ திலங்கைத் தீவென,
வித்தக உரைத்தனை; விண்ணாட் டமிழ்தம்
புரையுமெய்ச் சுவைபொதி உரையுடைச் செய்யுள்
பலவா யமைத்தனை; நலநா நுகர்ந்தோம்.
பல்லா யிரங்கா வதத்தினுக் கிப்பால்
உள்ளோம் ஆயினும், உன்னுரை கேட்டு
மகிழ்ச்சி எய்தினம்; மதுவிரி நறுமலர்
அவிழ்ந்து பகற்போது அளிகளுக்கு உணவும்,
பாங்குசென் றோர்க்குப் பரிமள வாசமும்,
தந்து வீயுந் தன்மையைப் போல
ஐயைந் தாண்டின் அகில நீத்தனை.
நீபோய்,
நூறாண்டு கழிந்தன எனினும் நின்மொழி
இன்றலர் நறுமலர் என்ன நின்றது;

அதனுல்,
ஆங்கில மொழிசெலும் அனைத்துநா டர்க்கும்
களங்கமில் களிப்பினைத் தந்து,
கிளர்ந்து விளங்குமாற் றீந்சு எனும் பெயரே.

இப்புலவர்கள் வாழ்ந்த காலத்திலே பிராஞ்சு தேசத்திலே, பெரியதொரு புரட்சி யேற்பட்டது. உணவின்றித் துன்புற்ற தொழிலாளிகளும் ஏழைமக்களும் முதலாளிகளையும் பிரபுக்களையும் அரசகுடும்பத்தையும் அழித்து, விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம் என்னும் முழக்கத்தோடு நாட்டிலே புரட்சி செய்தார்கள். பிராஞ்சு நாட்டினை ஐரோப்பிய முடிமன்னர்களெல்லோரும் எதிர்த்துப் போராடினுர்கள். **நப்போலியன்** எனப் பெயரியதளபதி பிராஞ்சு நாட்டினை எதிர்த்து வந்தோரோடு போராடி வெற்றி பெற்ற தோடமையாது, படையெடுத்துச்சென்று ஐரோப்பாவின் பெரும்பாகத்தை மேற்கொண்டு பிராஞ்சு நாட்டுக்குப் பெரும்பெயர் உண்டாக்கினுன். நன்றியறிதல் காரணமாகப் பிராஞ்சியர் நப்போலியனைச் சக்கரவர்த்தியாக்கிச் சிங்காசனத்தில் இருத்தினர். இந் நிகழ்ச்சிகள் ஆங்கில நாட்டுக் கவிவாணரது காப்பியங்களிலே, ஒரு புத்துணர்ச்சி தந்து காணப்படுகின்றன. பிராஞ்சிய நாட்டில் எழுந்த ''விடுதலை, சமத்துவம், சகோதரத்துவம்'' என்னும் ஒலியானது எவ்விடத்தும் பரவியது.

ஷெல்லி துன்புற்ருேருக் கிரங்கும் தூய உள்ளம்வாய்ந்த கவி. கலாசாலையிற் படிக்கின்ற காலத்திலே, இவர் பூவுலகத்துக் கொடுங்கோல் மன்னர்களையும், ஏழைகளை வருத்தும் பிரபுக்களையும், மன்னருக்கும் பிரபுகளுக்குஞ் சார்ப்பாக வானுலகத்திலேயிருந்து அரசாளும் தெய்வத்தையும் ஒருங்கு வையத்தொடங்கினுர். எங்கும் பரந்து உயிர்க்குயிராக விளங்கும் கருணைக்கடலாகிய மெய்க்கடவுளிடத்திலே நிறைந்த பத்தியுள்ள ஷெல்லியின் உள்ளக்கருத்தை யறியாத மக்கள் அவர் தெய்வத்தை இகழுகிருர் எனக் குற்றஞ் சாட்டிக் கலாசாலையிலிருந்து துரத்திய தோடமையாது, அவரது குழந்தையைத் தானும் அவர் வளர்த்தல் கூடாதெனக் கூறித் தந்தையிடமிருந்து மைந்தனைப் பிரித்தார்கள். இத்தகைய நிகழ்ச்சிகளினுலே கவிஞருள்ளம் பெரிதும் அல்லலுற்றது. இவரது கவிதை விண்ணுலகத்தை மண்ணுலகத்திலே காட்டும் பேரழகுவாய்ந்தது. நிலவின் ஒளியும் விண்மீன்களின் வனப்பும், இசையின் மென்னீர்மையும், குழந்தையின் மழலையும், மெல்லி நல்லாரது தூய அன்பும், மேகங்களின் வனப்பும், செஞ்சுடர்ப்பரிதியின் தோற்றமும் மறைவும் இவரது கவிதையிற் படிதலினுலே புதிய நலம் பெற்றுக் திகழ்கின்றன.

யாழ் நரம்பினிசையோடு இன்னிசைக் கீதம் பாடிய ஒரு மடவரலை நோக்கிப் பின்வருமாறு கூறுகிறார்.

வளர்வான் மதியி னொளிக்கிரணம்
வயங்கி, மெல்லென் றியங்கியபின்,
குளிர்வான் மீனின் கதிர்படிந்த
கொள்கை யென்னக் கூறுவமோ ?

தெளியா மழலை அணங்கே! நின்
தேனூர் கிளவி இசையமிழ்தம்
அளிநேர் விரல்சேர் யாழ்நரம்பிற்(கு)
ஆவி யாகும் மாண்பினையே.

எங்கும் பரந்த இசைநறுந்தேன்
ஈர்ந்தண் பனிநீ ராயியையக்,
கங்குற் பொழுதில், மென்கொடியிற்
கலந்த இலையும் அசைந்திலவால்;

திங்கட் புத்தேள் ஒரு கடிகை
செலவு தாழ்ந்து சென்றிடினும்,
தங்கு விண்மீன் அமைப்பிலவாய்த்
தரணி நோக்கும் தகைமையவே.

தேனூர் இசையென் உளங்கவரச்
செயலற் றயர்ந்தேன் யானெனினும்,
மானே! இன்னும் இசைநறுந்தேன்
வழங்கல் வேண்டும்; இளங்குதலை

ஆனூ இனிய குரலொலியால்
அகிலம் மறைய மதிக்கதிரும்
வானோர் உலகும் இசையமிழ்தும்
மருவி யொருங்கு வந்தனவே.

இளந்தென்றலின் மெல்லுயிர்ப்பும் மாலைப்பொழுதின் அழகும், எங்கும் நிறைந்த அமைதி நிலையும், வளர்மதியின் உள்ளொளியும், விண்மீன்களின் மெல்லொளியும், நீல விதானம் போன்றமைந்த வானினழகும் மேல்வரும் வெண்பாக்களுட் கூறப்படுகின்றன.

வேனி லிளந்தென்றல் மெல்லுயிர்ப்பு நன்மாலை
மானின் செவிக்கு மருந்தாகி, —வானின்
உரைதேர்ந்த மோன உறுதி குலைக்கும்,
அரிதன்றோ அல்லின் அழகு ?

மங்குல் பயிலா வளர்மதியின் ஒள்ளொளியும்,
எங்குமியல் மீனொளியும், எய்தியே — கங்குல்
விழிதுயிலும் பூமகட்கு மேலாப்பா யன்பின்
வழியியலும் நீர்மையதிவ் வான்.

**ஐய்க்கிலீஸ்** எனப்பெயரிய யவனபுரத்து நாடக ஆசிரியரது நடையினைப் பின்பற்றி இவரெழுதிய **கட்டு நீங்கிய பிரமேதயன்** என்னும் நாடகம் உயர்ந்த வீரச்சுவை செறிந்தது. பிரமேதயன் வானுலகிலிருந்து நெருப்பினைக் கவர்ந்துவந்து மண்ணுலகத்தோருக்கு வழங்கிய பேருபகாரி. தேவராஜனாகிய யோபிதாவினது ஆணைக்கு அடங்காத காரணத்தினாலே பிரமேதயன் சிறையிலிடப்பட்டான். பனிபடர்ந்த மலைச்சாரலிலே சங்கிலியாற் கட்டப்பட்டான். தேவராஜனுடைய கட்டளையினாலே ஓய்வின்றிக் குளிர்ந்த வாடை வீசியது; கழுகுகள் வந்து மூக்கினாலே உடற்றசையைக் குடைந்தன. பிரமேதயனுடைய ஆண்மையையும் உண்மை வீரத்தையும் ஒருவகையாகவும் எதிர்த்து அடக்கமுடியவில்லை.

**ஹெல்லாஸ்** எனப்பெயரிட்டு இவரெழுதிய நாடகம் யவனபுரத்தின் மீது இவருக்குள்ள பேரன்பினை வெளிப்படுத்துவது. அக்காலத்திலே துருக்கியர் கிரேக்கநாட்டில் அரசு செலுத்தினமையின், சுதந்திரப் போராட்டம் நடந்துகொண்டிருந்தது.

இவரியற்றிய பாரகாவியங்கள் அரிதுணர் பொருளன. வானம்பாடிப் புள்ளினைக்குறித்த இசைப்பாட்டு, மேகத்தைக் குறித்த இசைப்பாட்டு முதலிய சிறு நூல்களே மாணவராற் பெரிதும் பயிலப்படுவன.

ஐரோப்பாக் கண்டத்திலுள்ளோர் ஆங்கிலப் புலவர்களுடைய கவித்திறத்தினைப் பாராட்டுங்கால், செகசிற்பியாருக்கு அடுத்த படியிலே **பைரன்** என்னும் புலவரைக் கொள்ளுவார்கள். பைரன் பட்டவர்த்தனர் குடும்பத்துத் தலைமகனாதலின் **லார்ட்** பட்டம் வகித்தவர். இளமையிலே தந்தையை இழந்தார். இவர் தாயின்மீது வெறுப்புடையவர். ஒழுக்கந் தவறிய நடையினாலே இவரை முதியோர் வெறுத்தனர். சிருங்கார ரசம் மேவ இவர் செய்த காவியங்கள் மிகப்பல. தொட்டவற்றையெல்லாம் பொன்

னுக்கும் பரிசவேதி போல் எந்தப் பொருளை யெடுத்தாலும் கவிநயம் சொட்டுமாறு செய்வார். 'கருதுவதங்கொன்றுண் டோகாப்பியக் கவிகள் காம எரியெழ விகற்பித்திட்டார்' எனத் தமிழ் நாட்டுப் பெரும் புலவர் கூறுவதுபோலவும், 'சுவை பல வென்று சொல்லுவர் புலவர் யாம் வேண்டுவது இன்பச் சுவையே' என்று வடமொழி மன்னன் வரித்ததுபோலவும் இன்பச் சுவை யினைப்போற்றி இவர்செய்த டன்ஜுவான் என்னும் பெருங்காப்பி யம் பதினறு இலம்பகங்களால் நடப்பது. திருத்தக்க தேவரது காப்பியத் தலைவனாகிய சீவகனைப் போலப் பைரனது காப்பியத் தலைவனாகிய டன்ஜுவானும் காமதுரந்தரன். பல மகளிரால் காதலிக்கப்படும் ஆடவனுக்கு அப்பெயர் சூட்டுதல் ஆங்கில மொழி வழக்காக வந்துவிட்டது. சீவகன் கன்னியரையே காத லித்தான்; இது தமிழ் மரபு. டன்ஜுவானேவென்றால் பிறர் மனை வியர் காதல் வலையிலுஞ் சிக்குண்டான். இக்காப்பியத்திலே பல விடங்களிலே கவி தமது சொந்த அநுபவத்தைக் கூறக்காண லாம். பதினெட்டாம் ஆண்டுப் பருவத்திலே பிறன் மனைவியிடத்து வைத்த பொருந்தாக்காதல் காரணமாகத் தாயினலே பிற நாட்டு யாத்திரைக்கு அனுப்பப்பட்ட டன்ஜுவான் கப்பலுடைந்து தன்னந்தனியனாய் ஒரு தீவுக்கரையை அடைகிறான். கரையிலே உணர்விழந்து கிடந்தோனை யவனபுரத்து இளநங்கை யொருத்தி யும் அவளது உயிர்ப்பாங்கியும் கண்டு எடுத்து உபசரிக்கின்றனர். பின்பு இவன் அந்நங்கையை மணக்கின்றான். அவள் தந்தை வெகுண்டு இவனை அடிமையாக விற்றுவிடத் துருக்கி தேசத்தை யடைகிறான். அரமனைமாதொருத்தி இவனை விலைகொடுத்து வாங்கிப் பெண்ணுடை தரிப்பித்து அந்தப்புரத்திற்குக் கொண்டு சென்று தன்கருத்துக் கிசையும்படி கேட்க, இவன் மறுக்கிறான். அங்கிருந்துந் துரத்துண்டு துருக்கிக்கும் ருஷியாவுக்குமிடையே நடந்த யுத்தத்திலே கலந்து ருஷிய ராணியின் முன்னிலையை அடைகிறான். ராணி இவனைக் காதலிக்கிறாள். அவளது அன்புக் குரியவனாகி, அரசியல் விஷயமாக இங்கிலாந்து தேசத்தை யடை கிறான். அங்கும் பல மகளிர் இவனைக்கண்டு தமது நிறையழி கின்றனர். சரித்திரம் ஒழுக்கத்தினிழிந்ததாயினும், பைரனியற் றிய காப்பியம் சீவக சிந்தாமணியிலும் கவிச்சுவைமிக்கது. யவனநாட்டின் மீது இக்கவிக்குள்ள பேரன்பு காப்பியத்தின் பல விடங்களிலே காணப்படுகிறது. சைல்ட் ஹரல்ட் யாத்திரை என்னும் பெருங்காப்பியம் தேசாபிமானச் சுவைமிக்கது. வானகமும்மண்ணகமும், சார்தானப்பபாலஸ், காயின், உவேர்ணர், அங்கஹீனன், அங்கம் நிமிர்ந்தது எனப் பெயரிய நாடகங்கள் இலக்கணமும் சுவையும் நிரம்பியவை. இவரியற்றிய சிறு காப்பியங்களும் பல.

கடலை வருணிப்பதில் இவருக்கு இணையாயினர் யாருமில்லையென்றே கூறலாம்.

விக்டோரியா ராணியினது சமஸ்தானப் புலவராகப் பெரும் பெயர் பெற்றவரும், ஒழுக்கமே யுருவெடுத்தாற்போன்றவருமாகிய **தெனிசன்** என்னும் பெருங்கவியைப்பற்றி ஒரு சில கூறுவாம். இவரும் **லார்ட்** பட்டம் வகித்தவர். இவருக்கு அப்பட்டம் ராணியாரால் வழங்கப்பட்டது. இவர் மகா கவியாயிருந்ததோடு, ஞானவானுகவும் விளங்கினர். இவரது சகோதரியாருக்கு மணமகனுக வருவதற்கிருந்த நண்பரொருவர், இவர்மேற் பேரன்பு பூண்டோர், இளவயதிலே இறந்துபோக அத்துயரினை ஒருவாறு ஆற்றிக்கொள்ளும் வண்ணம் இவர்பாடிய கையறு நிலைச்செய்யுள் ஒரு வேதாந்த நூல்போல் அமைந்தது. மக்கள் வாழ்க்கையின் நிலையாமையும், ஆண்டவனே நமக்கு 'எய்ப்பில்வைப்பு' ஆவான் என்பதும், ஒழுக்கத்தினுலெய்திய புகழ் அழியா நீர்மையதென்பதும் பிறவும் நாலடிச் செய்யுளிலே அழகாகப் பாடப்பட்டிருக்கின்றன. முதற் பத்துச் செய்யுட்களின் மொழிபெயர்ப்பு வருமாறு :

'ஆண்டவனது திருமகனே! அருந்திறலுடையாய்! அழியா அன்பின் நிலைக்களமே! நினது திருமுகத்தை நேரிற் கண்டிலமெனினும், உள்ளத் துணர்ச்சியே (நம்பிக்கையே) துணையாக நின்னை நம்பி, நின்னருளிற் கலந்து நிற்கின்ருேம்.'

'பகற்பொழுதினை விளக்கும் செஞ்ஞாயிறும், இரவுப் பொழுதினை விளக்கும் வெண்டிங்களும் நினக்கு உரியவை. மனிதவுயிர்க்கும் விலங்குயிர்க்கும் வாழ்வினை ஈந்தனை; சாவினையும் நீயே படைத்தனை; நினது திருவடி நீசெய்த மனித கபாலத்தின்மீது பொருந்தி நிற்கிறது.'

'மண்ணிற் புழுதியிற் கிடக்கும் வண்ணம் எம்மைப் புறக்கணிப்பாயல்லை; மனிதனைப்படைத்தனை, எற்றுக்குப் படைத்தனையென அவன் அறியான். வாளா இறந்து ஒழிந்துபோம்வண்ணம் படைக்கப்படவில்லையென அவனது உள்ளம் நினைக்கின்றது. அவன் நினது திருக்கரத்தினுல் உருவாக்கப்பட்டான். நீ அறத்தின் முதல்வன்.'

'மக்களது நீர்மையும் தெய்வத் தன்மையும் நின்பாற் காணப்படுகின்றன. அதியுயர்ந்த, அதிதூய்மையாகிய ஆண்டகைமை நினக்கு உரியது. எமது சித்தம் எமக்குரியன. அவ்வுரிமை எவ்வாறு

எய்தியதென யாம் அறியோம். எமது சித்தம் எமக்கு உரியவாயின, அவை தம்மை நினக்கு உரியவாக்குதற் பொருட்டாகவோ ?'

'யாம் வகுக்கும் முறைகள் சில நாள் நின்று ஒழிந்து போகும் தகைமைய. அவை நினது அருளொளியினின்று சிதறிய கதிர்கள். என் ஆண்டவனே ! நீ அவற்றிலும் மிக்காய்.'

'எமது உள்ளத்தில் நம்பிக்கையுளது; அறியும் அறிவு இல்லை. அறிவு காட்சிப் பொருள்கள் மேற்செல்வது. (நீ காட்சிக்கு எட்டாப் பொருள்) ஆயினும் யாம் நின்னை நம்புகிறோம். அந் நம்பிக்கை நின்னிடமிருந்து வந்தது. பேரிருளிலே அஃது ஓர் ஒளிக்கிரணம்; அது வளர்வதாக.'

'அறிவு மேன்மேலும் பெருகுக. அறிவினும் பார்க்க வழிபாடு எம் உள்ளத்தில் உறுவதாக. முன்னிருந்ததுபோல உள்ளமும் உயிரும் ஒன்றுபட்டு இசைபரப்புக'.

'அவ்விசை பெருக்கம் உறுக. யாம் பேதைமையுடையேம்; அற்ப மதியுடையேம். அச்சம் நீங்கிய வேளைகளில் நின்னை அவமதிக்கின் றேம். பேதையேமாகிய எமக்குப் பொறையினைத் தந்து உதவுவாயாக. நினது அருளொளியைத் தாங்கும் வலிமையினை நீ படைத்த அற்ப மதியினராகிய உலகினராமெமக்குத்தந்து உதவி புரிவாயாக.'

'ஏழையேனிடத்துக் காணப்படும் பாவங்களை மன்னித்தருள் வாயாக; (உயிர் வாழத்) தொடங்கியது முதல் எனது தகவுஎனயான் கொண்ட எண்ணத்தினை மன்னித்தருள்வாயாக. மதிப்பு எனப்படுவது மனிதனிடத்துத் தோன்றி மனிதனை நாடுகிறது. அது மனிதனிடத்துத் தோன்றி ஆண்டவனாகிய நின்னை அடைவதில்லை.'

'நின்னாற் படைக்கப்பட்டவன், செம்மை நலம் உடையோ னென ஏழையேனால் மதிக்கப்பட்டவன், அவனது பிரிவினாலே என்னுள்ளத்தில் எழுந்த துயரினை மன்னித்தருள்க. அவன்நினது (திருவடி) நிழலிலே வாழுகிறான் என அடியேன் நம்புகிறேன். ஆதலினாலே, அவன் முன்னையிலும் பார்க்க எனது அன்புக்குப் பாத்திரவான் ஆயினன் என நான் காண்கின்றேன்.'

'சீரற்று அலையும் இவ்வவல இசைகளை மன்னித்தருள்க. நலமின்றிக் கழிந்த இளமையின் பெறுபேறாக அவை எய்தின. எவ்வெவ்விடத்தில் அவை உண்மை நெறியிற் பிறழ்கின்றனவோ,

அவ்வவ்விடத்தில் அவை தம்மை மன்னித்தருள்க. ஞானமுடையாய்! அடியேனுக்கு ஞானத்தைத் தந்தருள்க.'

இப்பெருங்கவி இயற்றிய '**உலீசன்**' என்னும் செய்யுள் வீரச் சுவை செறிந்தது. ஹோமர் எனப் பெயரிய யவனபுரத்து மகாகவி யியற்றிய உலீச காவியத்துத் தலைவனுகிய உலீசன் கிரேக்க சைனியங்களின் தளபதியாகச் சென்று துரோய நாட்டிலே போர்புரிந்தான். இப்போரினது வரலாற்று முறையினை ஒரு சிறிது கூறுவாம். துரோயம், ஈலியம், பேர்காமம் எனப் பெயரெய்திய நகரம் ஆசிய துருக்கி நாட்டின் வடமேற்றிசையிலுள்ளது. இந் நகரத்தரசன் பெயர் பிரியமன்னன், *(Priamus)*. இவன்தனது பட்டத்தரசியாகிய எக்கூபை *(Hekuba)* யோடு அரசு புரிகின்ற காலத்திலே, துரோயம் செல்வம் மிகுந்த அழகிய நகராயிருந்தது. அரசனுக்குப் புதல்வர் ஐம்பதின்மர். இவருள் ஏகதன் *(Hector)* என்பான் சுத்தவீரனுகவும், பரிசன் (Paris) என்பான் காம துரந்தரனுகவும் இருந்தனர். ஒருநாட் பரிசன் ஐதாமலையின் சிங்காரத்தினைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும்பொழுது மூவர் தேவமகளிரைச் சந்தித்தான். அவருள் ஒருத்தி தேவராஜனுகிய யோபிதா *(Jupiter)* வின் மனைவி யூனே *(June)*; ஏரை *(Hare)* என்றும் பெயர். மற்றவள் செழுங்கலை நாயகியாகிய மீனேர்வை *(Minerva)*; பாலசி *(Pallas)* என்றும் பெயர். மற்றவள் வேட்கைத் தெய்வமாகிய ஆவிரதை *(Aphrodite)* வீநசை *(Venus)* என்றும்பெயர். மூவருள் ஒவ்வொருத்தியும்தானே மற்றையிருவரினும் பார்க்க அழகிற் சிறந்தவள் எனக் கூறி வாதிட்டுக்கொண்டு வருமெல்லையிலே, பரிசனைச் சந்தித்துத் தமது வழக்கைத் தீர்க்கும்படி அவனைக் கேட்டனர். அழகின் மிக்க ஒரு பெண்ணைக் கூட்டிவைப்பதாக ஆவிரதை கூறிய இரகசிய வார்த்தையில் ஈடுபட்ட பரிசன் அவளே அழகிற் சிறந்தவளெனத் தீர்ப்பிட்டான். இதனைக் கேட்ட யூனே பரிசனை நோக்கிப் 'பழிக்கஞ்சாது இவ்வாறு கூறினை; என் சமர்த்தையுங் காட்டுகிறேன்' எனச் சொல்லிப் போய்விட்டாள்.

பின்னர் ஆவிரதை தனது வாக்கின்படி **லக்கதமோனிய** தேச ராஜனுகிய மேனிலாவனுடைய *(Mene laus)* மனையாட்டியும் அழகிற் சிறந்தவளுமாகிய ஏலேனுவை *(Helena)* க் கவர்ந்துகொள்ளும்படி பரிசனுக்கு உதவி புரிந்தாள். பரிசன் ஏலேனுவைத் தன்னூர்க்குக் கொண்டு சென்று மனைவியாக்கினுன். இதனையறிந்த மேனிலாவன் கிரேக்கத் தலைவர்களைப்படைத்துணையாகச் சேர்த்துச்சென்று துரோய நகரை முற்றுகை செய்தான். இத்தலைவருள் ஒருவன் **உலீசன்**. பத்தாண்டு பெரும்போர் நடந்தது. ஈற்றிலே கிரேக்கர் வெற்றி பெற்றனர். யவனபுரத்துக்குத் திரும்பும் வழியிலே பல துன்பங்களை

யடைந்து இன்னும் பத்தாண்டு கழித்து உலீசன் தன்னூரை யடைந் தான். போரின்றி மனையிலே வாழ்வதையவன் விரும்பவில்லை. அவனது வீரச் சொற்களை யமைத்துத் தெனிசன் அழகிய கவிதை யொன்று யாத்தார். அதன் மொழிபெயர்ப்பு வருமாறு :

பெறுபயன் சிறிதே, பெறுபயன் சிறிதே,
வறிதிங் குறையும் மன்னன் யானே;
விளைவு குன்றிய களர்நிலத் துரிமையும்,
குய்ப்புகை யடங்கிய அட்டிலும், மெய்ப்படு
மூப்புவந் தெய்திய இல்லக் கிழத்தியும்,
யாப்புற அமையச் செய்வினை யின்றி;
வறிதிங் குறையும் மன்னன் யானே;
என்னிழல் வாழ்வோர் என்னியல் பறியார்;
உண்பார்; துயில்வார்: ஒண்ணிதி குவிப்பார்;
செம்மை நலமிலாச் சிறியோ ரவர்தமக்கு
நடுநிலை யில்லா நீதி வழங்கி,
வறிதிங் குறைதல் மாண்போ? பிறபுலம்
செல்லா தமையேன்; சேரெப் பொழுதினும்
அன்பர் தம்மொடும், அவரிலா நிலையிலும்,
கரையி னகத்தும், திரையெறிந் தார்க்குங்
குரைகடற் புறத்தும், பெரிதுபெரி தாகிய
இன்பந் துய்த்தேன்; துன்பத் துழன்றேன்;
விழைவுறு மனனோ டலைவுறு நாளில்
அளப்பில கண்டேன்; அறிந்தன பலவே;
எத்தனை நகரம், எத்தனை மக்கள்,
எத்தனை ஒழுக்கம், எத்தனை அவைக்களம்,
எத்தனை அரசியல், எவ்வெவ் விடத்தும்
பெரும்பெயர் நிறுவி அரும்புகழ் படைத்தேன்;
வளமலி துரோய வளிவீசு புலத்தில்,
அடற்போர் மதுவுண் டகங்களி கூர்ந்தேன்;
கண்டன அனைத்தும் என்னகங் கலந்தன;
வாழ்க்கை வட்டத் தெல்லையி னிகந்த
வேற்றுப் புலங்கள் மிகப்பல உள; அவை
செல்வுழிச் செல்வுழிச் சேணிடை அகல்வன;
உறைப்படு வானிற் கறைப்படல் தரியேன்,
வாளா உயிர்த்தல் வாழ்க்கை யாமோ;
அறிவு நிறைதலும் அருஞ்செயல் புரிதலும்
ஓரிரு பிறவியில் ஒழியும் நீர்மையவோ ?
வாழ்க்கை மேல்வாழ்க்கை வந்து குவியினும்
வேண்டா என்ன விளம்பலும் ஆமோ ?

யாண்டுபல கழிந்தன, ஈண்டிப் பிறவியில்
எஞ்சிய நாளொரு சிலவே; ஆங்கவை
புதுப்பயன் விளைநா ளாகுக; விதிப்பட
மக்கள் யாத்த எல்லையின் இகந்து,
குணகடற் குளிக்கும் வான்மீன் போல,
அறிவு நிறைதற்கிவ் வலைகடல் கடக்க
நரைமுதிர் உள்ளம் நாடிநின் றதுவே.
இவனென் புதல்வன்; என்செங் கோலும்
தரணி காவலும் தாங்குதற் குரியோன்;
முரணுறு மாக்களைச் சிறிதுசிறி தாக
நலனுறத் திருத்தும் நாட்டம் உடையோன்;
ஏதமில் மனத்தன்; இல்லுறை தேவரின்
பாதம் பரவும் பான்மையன்; பண்பும்,
சால்பும் உடையோன்; தனக்கென விதித்த
வினைபுரி கின்றுன்; என்வினை பிறவே,
ஆங்கது துறைமுகம்; பாங்கினிற் கப்பல்,
வளிமுகந் தன்ன பாய்கள்; தெளிவில்
இருள்குவிந் தனையது, திரைபொரு கருங்கடல்;
வம்மின் நண்பீர்! என்னுடன் உழன்றீர்,
மழையினும் வெயிலினும் வண்மைசால் மனத்தீர்,
யானும் நீவிரும் யாண்டினில் முதிர்ந்தனம்;
மூப்பினும் வினையுள; ஆக்கமும் உளவே;
சாதல் எய்துமுன் மேதக வுடைய
செயல்சில புரிகுவம்; தேவரை மலைந்த
அடல்வலி யுடையோம், அருந்திற லேம்யாம்
பகலொடு சுருங்கும் பாறையில் ஒளிக்கதிர்;
மெல்லென எழுந்து விண்ணிடை மதியம்;
பல்குரல் எழீஇயது பரவையும். வம்மின்
நலனுறு புதுப்புவி நாடியாம் செல்குவம்;
கப்பலைத் தள்ளுமின்; கவினுற அமர்மின்;
பாய்களை விரிமின்; பல்கதிர்ப் பரிதி
படியும் குணகடற் படர்வோம், முடிவில்
வான்மீன் குளிக்கும் வரைப்பினை அடைவோம்;
துஞ்சினர் வதியும் தூயதீ வகத்தை
எஞ்சல் இன்றியாம் எய்தலும் ஆகும்;
அருந்திற லாளன் அகிலே சப்பெயர்க்
காவலன் றன்னைக் காணலும் ஆகும்;
இரிந்தன பலவெனின், இருப்பவும் பலவே;
விண்ணும் மண்ணும் அதிர மலைந்த
திண்மையிந் நாளிற் சேர்ந்தில தெனினும்

காலமும் விதியும் மேவலின் உடல்வலி
குன்ற வியன்ற கொள்கையேம் எனினும்,
சித்த வலிமை சிறிதும் குறைவிலம்,
ஒத்த நீர்மைய உரனுடை உள்ளம்;
முயன்று தேடிப் பெறுகுவம் இடர்வரின்
அயர்ந்து முதுகிடா ஆண்மையேம் யாமே.

றபர்ட் **பிறௌணிங்** என்னும் புலவரும் தெனிசனைப் போன்று சீரிய ஒழுக்கம் வாய்ந்தவர்; ஆன்றமைந் தடங்கிய கொள்கையர். இவரியற்றிய **ஆழியும் பனுவலும்** என்னும் பெருங்காப்பியம் உயர்ந்த கருத்து உடையது. இவர் மனைவியாரும் கவிபுனையும் ஆற்றலுடையார். **பிறௌணிங்** வாழ்க்கையின் நோக்கத்தினை நன்கு தெரிந்து நயம்பட உரைத்துள்ளார். ஒரு சில அடிகளின் மொழிபெயர்ப்பு வருமாறு :

என்னோடு :
யாண்டுபல வாக நீவிரும் வாழுமின்;
காண்டகு செம்மை ஈண்டுதற் குரிய;
நாள்பல **வாக** நலம்பல பெறுகுவீர்;

வாணாள்,
பின்னவைக் காக முன்னவை இயைந்தன;
'அனைத்தும் ஒருபிழம்பு அதனுள் இளமை
ஒருபாற் பயனை உணர்த்துமற் றொருபால்
அமைதியுங் காண்மின்; அச்சம் அகற்றுமின்;
நாதனை நம்புமின்! எனஅவன் நவின்ற
போதம் உள, நம் வாணாள் அனைத்தும்
அவன்திருக் கரத்தில் அமைந்தன கண்டீர்.

இவர்பின் தோன்றிய புலவரும் பலருளர். ஜார்ஜ் பேர்னட்ஷா என்னும் நாடக ஆசிரியர் எண்பது ஆண்டு நிறைந்தவ ராயினும், இன்றும் சுவை மிகுந்த புது நாடகங்கள் ஆக்கித் தருகின்றார். இவர் ஐர்லாந்து தேசத்தவர். அமெரிக்க நாட்டி லுதித்த ஆங்கிலப் புலவரும் பலர். நமது பாரத தேசத்திலே தோன்றியவருள்ளும் சரோஜினிதேவி முதலியோர் ஆங்கிலமொழியிலேஅழகிய பனுவல்கள் செய்திருக்கின்றனர்.

---

(அகிலேசன் *achilles* கிரேக்க சேனைத்தலைவன்

ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டினை ஒருவாறு நிகர்ப்ப,

ஆரியமும் தமிழும் வல்ல பண்டிதமணியாருக்கு ஆங்கில மொழிக் கவிநயத்தினை ஒரு சிறிது காட்டுதல் கருதி எழுந்த பாட்டிடையிட்ட இவ்வுரைத்தொடர் நிலையானது,

வடபால் இமயத்துச் சம்பாவதி நகருக்கடுத்த மாயாவதித் தவப்பள்ளியிலே,

விஷு ௵ வைகாசி மீ ௨௫ ௨ நிறைவேறியது.

கேதாரநாதர் திருவடிவாழ்க.

# 9. மேற்றிசைச் செல்வம் [The wealth of the west]

## I

### முன்னுரை

திருவினானும் அரசினானு மேம்பாடுற்றுப் பிறநாடுகள் பலவற்றி னும் தமது ஆணை செலுத்தி வருகின்ற ஆங்கிலராதி மேலைநாட்ட வரது செல்வப் பெருக்கத்துக்கு உரிய காரணங்கள் எவையென ஆராய்வானெடுத்துக் கொண்டாம்.

பரந்த இப்பொருளை ஆராயுங்கால் மேலைநாட்டாரது அரசியன் முறையும், புலனெறி வழக்கமும், கலைபயினிலைமையும், பொருள்செயல் வகையும் பிறவும் தெற்றெனப் புலப்படுவனவாம். ஆங்ஙனம் புலப் படவே மனத்தின் கண் ஊக்கம் மேலிட்டு அவர் படைத்த திருவை யாமும் படைப்பதற்கு முயல்வேமாதலின் இவ்வாராய்ச்சி பெரிதும் பயனுடைத்தாமென்க. பண்டைநாளில் நமது முன்னோர் சிறப்புற்றி ருந்தாரென்று வாளா புராணம் பாடிக்கொண்டிருப்பதனால் உறுபயன் யாதோ அறியோம். அயனாட்டாரோடு கொள்வனவுங் கொடுப்பன வுஞ் செய்யாதொழியிற் செல்வம் நிலைபெறாது. உயிர்க்குறுதி பயக்கும் உண்மை நூல்கள் நம்மிடத்து ஏராளமாகவுள்ளன; உடற்குறுதிபயக் கும் நூல்கள் அவரிடத்துள்ளன. நமது உண்மை நூல்களை நாம் கொடுப்பதற்கு முன்னமே அவற்றின் சிறப்பையுணர்ந்த மேனாட்டார் தாமாகவே யெடுத்துக்கொண்டனர். அவர் பன்னாள் வருந்திச் செய்த அரிய ஆராய்ச்சியின் பயனாகத் திரட்டி வைத்திருக்கிற எண்ணி றந்தனவாகிய கணிதநூல், வானநூல், ஒளிநூல், ஒலிநூல், மின்னி யக்கநூல், அனல்நூல், உடல்நூல், மனநூல், சீவநூல், பொருட்டன் மைநூல், இரசாயனநூல், உலக சரித்திரம், பூகோள விவரணம், சிற்பநூல், வர்த்தகநூல் முதலியவற்றில் ஒன்றையேனும் நாம் தமிழ்ப்படுத்தவில்லை. என்னே, நம் பேதைமையிருந்தவாறு! இங்ஙனஞ் செய்யாதொழிந்தது ஆங்கிலங்கற்ற தமிழ் மக்கள் அனைவர் மேலும் பொறுத்த குற்றமாகும். பட்டணவாசிகளாகிய தமிழ்மக்கள்

---

[செந்தமிழ்: தொகுதி 20 (1922)] பக்கம் 381–390; 469–475; தொகுதி 21 (1923) 185–192; 501–507; தொகுதி 22 (1924) பக்கம் 121–130.

பெரிதும் ஆங்கிலப் பத்திரிகைகளையே ஆதரிக்கிறார்கள். தாம் ஆராய்ந்து கண்ட முடிபுகளை ஆங்கிலமொழியி லெழுதி அம்மொழிக்கே மேலுமேலும் மதிப்புண்டாக்குகின்றனர். ஆங்கிலத்திற் கவியெழுதவுந் தொடங்கிவிட்டார்கள்; வேறு நாம் பேசுவதென்ன? கவிசிரேஷ்டராகிய ரவீந்திரநாத் தாகூர் தமது தாய்மொழியிற் கவியெழுதினமையினாற்றான் உலகத்தாரது நன்மதிப்பைப் பெற்றாரென்பதை ஆங்கிலங் கற்ற தமிழ்மக்கள் அறியார்கள்போலும். எட்டு முறை குட்டிக் கரணம் போட்டாலும் தாய்மொழியன்றிப்பிறிதொருமொழியில் அம்மொழியாளரால் முதற்றரத்ததென்று மதிக்கப்படத்தக்க நூலியற்றல் இயலவே இயலாது.

இனி உயர்தரக் கல்விக்கழகங்களிற் கல்வியறிவூட்டும் முறையைப்பார்த்தால் தினையளவுமருந்தைப் பெறுவதற்கு மலைமுழுவதையுஞ் சுமப்பிக்குந் தோற்றமாயிருக்கிறது. யோக்கியதாபட்டம் பெறுவதற்கு முயலுகிற மாணவன் தான் தெரிந்துகொண்ட பொருட்டுறையில் நிறைந்த புலமையுடையவனாயிருப்பினும், ஆங்கிலமொழியிற் சொல்வன்மையில்லாதவனா யிருப்பின், தகாதவனென்று தள்ளப்படுகிறான். ஆங்கிலமோ இலக்கண வரம்பில்லாத முரட்டுமொழி; பத்தாண்டு பயிலினும், கருதிய பொருளைத் தெளிவுற உரைக்குஞ் சொல்வன்மையைப் பெறுவது மிகவும் அரிதாகும். தாய்மொழியில் உரைத்தால் இனிமையைப் பயக்கத்தக்க பொருட்டுறைகள் வேற்று மொழியில் உரைக்கப்படின் வெறுப்பைத் தருவனவாம். இதனால் மாணாக்கன் கற்குங் கல்வியில் மன ஊக்கஞ் செல்லாதவனாக வருந்துகிறான். இன்னோரன்ன பல காரணங்களால் உயர்தரக் கல்வியறிவும் தாய்மொழியிலே ஊட்டப்படவேண்டுமென்பது மறுக்கொணா உண்மையாகின்றது. யாம் வடநாட்டுக்குப் போயிருந்தபொழுது ஹரித்துவாரத்தில் ஆரியசமாஜத்தாரால் நடத்தப்படும் குருகுலம் என்னும் உயர்தரக் கல்விக் கழகத்தில் இரண்டு நாட்டங்கியிருந்து கலைபயிற்று முறைமையை நன்றாகக் கவனித்துப் பார்த்தோம். பன்னீராட்டைப் பிராயத்துச் சிறுவர்களெல்லாம் வடமொழியில் வசனிக்கவும் நூல்களை வாசித்தின்புறவுந் தக்க பாண்டித்திய முடையவர்களாக விருப்பதைக் கண்டு மகிழ்ந்தோம். ஹிந்திபாஷைமூலமாக மேலைத் தேச சரித்திரம், பௌதிகசாஸ்திரம் இவையெல்லாம் உயர்வாகக் கற்பிக்கப்படுகின்றன. இக்கல்விக்கழகத்தில் ''வித்தியாலங்காரன்'' எனும் பட்டம் பெற்ற மாணவன் சென்னையில் எம். ஏ. பட்டம்பெற்ற மாணவனோடு ஒத்துநோக்கப்படிற் குறைந்தவனாகக் காணப்படான். இவன் தாய்மொழியிற் கல்வி பயின்றவனாதலாற் றன்னூர்க்குச் சென்றதும் தான் பெற்ற செல்வத்தைப் பிறரும் அநுபவிக்கும்படி கொடுக்கிறான். இதனால் இவன் பயின்ற கல்வி ஆயிர மடங்கு பயன்றருகிறது. நம் நாட்டில் வறியோர் கொடுக்கும் வரிப்பணத்

தைக்கெண்டு உயர்தரக் கல்விச்சாலைகள் நடத்தப்படுகின்றன; ஆதலால் இக்கல்விச்சாலைகளி னின்று பிறக்கும் கலையறிவு அனைவர்க்கும் பயன்றருவதன்றே நீதியும் மரபுமாகும். குஜராத் வித்தியாபீடம், காசி வித்தியாபீடம் இவற்றில் அனைத்துக் கல்வியும் தாய் மொழி மூலமாகவே தரப்படுகின்றன. வங்காளிபாஷையிலும் அநேக உயர்தர மொழிபெயர்ப்பு நூல்கள் வந்துவிட்டன. காளிகட்டத்துச் சர்வ கலாசாலையார் தாய்மொழியிலே எல்லாக்கல்வியும் பயிற்றப்படல்-வேண்டுமென்னும் சட்டத்தைச் சீக்கிரங் கொண்டுவந்துவிடுவார்கள். ஆந்திர கன்னட மலையாள நாட்டாரும் தம்மொழியை வளர்ப்பதில் முன்னேற்றமடைந்து வருகிறார்கள். இவ்விஷயத்திற் சென்னைச் சருவ கலாசாலையாரும் தமிழ் மக்களுமே மிகவும் பிற்பட்டு நிற்கிறார்கள். தமிழில் மொழிபெயர்ப்பு நூலெழுத முன்வருவார் சிலர் நிரம்பிய தமிழறிவின்மையான் ஆங்கில மக்களும் தமிழ்மக்களும் ஒருங்கு வெறுக்கத்தக்க பயற்றுப் பச்சரிசி நடையில் (பைந்தமிழும் வெள்ளையர் ஆங்கிலமும் சரிக்குச்சரி கலந்த நடையைப் பயிற்றுப்பச் சரிசிநடை யென்றும்.) மணிப்பிரவாளமென்றாற்போல் நூலெழுதி முடிக்கின்றார்கள். இவ்வாறெழுந்த நூல்களால் விளையும் பயன் ஒன்றுமில்லை. ஒரோவழி அயனாட்டுச் சொற்களைச் சேர்த்துக் கொள்வதனாற் குற்றமில்லை; முடிந்தநூல் தமிழ்மணங் கமழ்வதாக விருத்தல் வேண்டும். அல்லாவிடில் நின்றுநிலவாது.

இத்தகைய எண்ணங்கள் மனத்தில் உதிக்க இராமபிரானுக்கு அணைகட்டுவதற்கு உதவிபுரிந்த சிறிய அணிற்பிள்ளையைப்போலச் செந்தமிழ்த்தாய்க்கு இயன்றதொண்டு செய்யவேண்டுமென்று எண்ணி "மேற்றிசைச் செல்வம்" *(The wealth of the west)*, என்னும் இந்நூலையும், விஞ்ஞானதீபம் *(The Light of Science)* எனப்பின்னு மொரு நூலையும் எழுத ஆரம்பித்தேம். இவையிரண்டும் சுருக்க நூலாகப் பலவாயபொருட்டுறைகளைத் தம்முள் அடக்கியனவாக இருத்தல் வேண்டுமென்பது எமது எண்ணம். அதிகாரவகையைக் கூற இவ்வுண்மை புலப்படும். இம்முன்னுரை முடிந்ததும் இரண்டாம் அதிகாரமாக மேனாட்டு நாகரிக வரலாற்றைத் கூறத் தொடங்கி, சுமேரிய, அக்கேடிய, ஆசுரேய, பாபிலோனிய எகிப்திய நாகரிக நிலைமையையும், மூன்றும் அதிகாரத்திலே இப்பொருளையே தொடர்ந்து கிரேக்க, ரோமானிய நாகரிகம் வளர்ந்து பரந்து மேற்றிசைக்குச் சென்ற வரலாற்றினையும், நான்காம் அதிகாரத்தில் மத்திய கால சரித்திரம் என்னும் பெயர்க் கீழ் இருள் பரவியிருந்த ஐரோப்பாக் கண்டத்தில் அறிவுச்சுடர் புகுந்த வாறும், அஃது கிழக்குத் திசையிலிருந்து சென்று மேற்கில் வெற்றிக்கொடி நாட்டிய அராபியராற் கொடுக்கப்பட்ட கொடையாமென்பதுஞ் சொல்லி, அப்பால் ஐந்தாம் அதிகாரத்திற் கப்பல்வர்த்தக நோக்கமாகப் புறம்போந்த

மேனாட்டார் பிறதேசங்களைக் கைப்பற்றியவாறும், தமது வர்த்தகம் கைத்தொழில் இவற்றை விருத்தி செய்யுமுறையிற் பிறநாட்டாரை யறிந்தும் அறியாமலும் துன்புறுத்தியவாறும், உலாந்தாக்காரர், பிராஞ்சியர், போர்த்துக்கீசராதிய ஏனைய மேனாட்டாரை அடக்கி ஆங்கிலேயர் பரந்த சக்கராதிபத்தியத்தை நிலைநிறுத்தினமையுஞ் சொல்லி, அப்பால் ஆறும் அதிகாரத்தில் மேனாட்டு அரசியல் முறையை விளக்கிக் குடிகள் எவ்வாறு தங்களுடைய அரசர்களுக்கு நல்லறிவுறுத்தி வேண்டும்பொழுது நெருக்கித் துன்புறுத்தி யாவரானும் விரும்பப்படத்தக்க சுய அரசுச் சலாக்கியத்தைப் பெற்றுக்கொண்டார்க ளென்பதைச் சொல்லி, ஏழுமுதற் பன்னிரண்டு வரையுமுள்ள அதிகாரங்களில் முறையே மேனாட்டுக் கல்விக் கழகங்கள், விஞ்ஞான நூற்பெருக்கம், மகாயுத்தமும் அதனால் நேர்ந்த மாறுதல்களும், அமெரிக்கரது முன்னேற்றம், வேதாந்த ஞானம் மேனாட்டிற் பரவுதல், ஆசியாக்கண்டந் துயிலொழிந்தெழுதல் என்னும் பொருள்களைக் கூறி முடிப்பாம். விஞ்ஞானதீபமும் பன்னிரண்டு அதிகாரங்களால் முடியும். முதனான்கு அதிகாரங்களும் உற்பத்தி விளக்கமெனப்பட்டு முறையே சூரியசந்திரோற்பத்தி (வானநூல்), மலைகடலுற்பத்தி (பூமிநூல்), தாவரசங்கமோற்பத்தி (தாவரநூல் விலங்குநூல்), மானிட சரீர அமைப்பு (கேசாதிபாதநூல்) இவற்றைக் கூறுவன. எஞ்சிய எட்டு அதிகாரங்களும் தத்துவவிளக்கம் எனப்பட்டு முறையே பொதுவியல், ஒலியியல், அனலியல், ஒளியியல், காந்தவியல், மின்னியல், மின்னியக்கவியல், இரசாயனவியல் எனநடப்பன.

நாம் கூறப்புகுந்த பொருளெல்லாம் ஆராய்ந்து பார்க்குமிடத்துத் தமிழ்ப்புலவரால் அகம் புறம் என்ன வகுக்கப்பட்ட இருபெரும் பொருட்பகுதியிற் புறத்தின்பால் அடங்குவனவாம். சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாதிய வீடும், உள்ளத்துணர்வால் அநுபவிக்க வேண்டிய இன்பமும் பிறரால் வேறுபடுத்தப்படாத நிலைமையினவாகலின் இவற்றைக் கூறும் அகப்பொருளிலக்கணங்கள் ஒருகாலத்தும் மாறுபடாநிலைமையின. ஆலவாயி லவிர்சடைக் கடவுள் அருளிய அன்பினைந்திணை, தொல்காப்பியனாருரைத்த அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல் ஆகிய விவை ஊழிக்காலத்தும் அழிவுபெறா இலக்கணங்களாம். புறப்பொருளிலக்கணம் அத்தகையதன்று. ஏனைநாட்டாரது நாகரிகமுறையாலும் நமது நாட்டில் ஆணைசெலுத்திவருகின்ற ஆங்கிலரது அரசியன் முறையாலும் விகற்பமுறும் நிலைமையது. இலக்கணநூல் அதிலும் புறப்பொருள் உலக வாழ்க்கைக்கு உபயோகமாகி நிற்றல் வேண்டும். கற்குங் கல்விதானும் உளத்திற் கினிமை பயத்தல் உயிர்க்குறுதி பயத்தல், உலக வாழ்க்கைக் குறுபயனளித்தல் ஆகிய மூன்றுவகையானும் அறத்தையும் பொருளையும் இன்பத்தையும் வீட்டையும் தருவ

தாகவேண்டும். தற்காலத்துத் தமிழ்ப்புலவர் ஏனைய மூன்று புருஷார்த்தங்களைப் பெற்றும் இரண்டாவதானதும் உலகவாழ்க்கைக்குறுபயனளிப்பதுமான பொருளைப் பெருது வருந்துவதைக் காண்கின்றேம். இதனுற் புறப்பொருணூல்கள் பயனற்று நிற்பது வெளிப்படையாகின்றது. அரசியன் முறை, மந்திரசபையமைப்பு, அமர்மேற் செல்லல், பொருள்செயல் வகை இவையெல்லாம் புறப்பொருட் பகுதிகளன்றே. தற்காலத்துக் கேற்க இவற்றைக் கூறு நூல்கள் ஒன்ருவது தமிழ்மொழியிலில்லையே. இந்நாண் மரபுகள் அறம்பிறழ்ந்தனபோற்றேற்றினுலும், 'அரசனெவ்வழிக் குடிகளுமவ்வழி' யென்பதற் கிணங்க நம்மாற் கைக்கொண்டொழுகவேண்டுவன வாகின்றன. ஒரு சில உதாரணங்காட்டி விளக்குவாம். வேற்றுப்புலத்துக் களவினுலே சென்று பசுநிரையைக் கொண்டுபோந்து காத்தற்குரியது வெட்சித்திணை. இது முற்காலத்து மன்னர் போர் ஆரம்பிக்கும் பொருட்டுச் செய்து கொண்ட முறை. இக்காலத்தோ என்ருல் மாற்றரசனுக்குச் செய்தி யனுப்பி இன்ன இன்ன கொள்கைகளுக்கு அவன் உடன்படாதவழி அமர் ஆரம்பிக்கப்படும் என்று அறிவித்து அமர் ஆரம்பிப்பது முறை. வில்லும் கணையும் இக்காலத்து அமர்முறைக்குப் பயன்படா. அமர்மேற் செல்லுமுறை முற்றுமே இக்காலத்து வேறுபட்டது. இனிச் சட்ட சபையமைப்பினை நோக்குவோமாயின், இந்நாளிற் குலம் கல்வி யிவற்றினும் பார்க்கப் பொருட் செல்வமே பெரிதும் வேண்டற்பாலதாகத் தோற்றுகிறது. பொருளில்லாதார் குடிப்பிறந்தாராயினும் ஞானமிக்காராயினும் ராஜமந்திரத்தில் இடம் பெருர். இந்நாளிலுள்ள சட்ட சபையில் விசுவாமித்திரருக்கும் வசிட்டருக்கும் இடமில்லை, இவர்கள் தினையளவும் பொன்னில்லாத துறவிகளாதலின். காருண்ய அரசாங்கத்தினர் சிறிது சிறிதாகவேனும் நமக்குச் சுயவரசுச் சலாக்கியத்தைத் தந்துவருகின்ற இந்த நாளில் அவ்வகையாகிய சலாக்கியத்தைப் பயன்படுத்த வேண்டிய அறிவினை விருத்திபண்ணிக்கொள்ளுதல் அவசியமல்லவா? இந்த விஷயத்தில் வர்த்தமானப் பத்திரிகைகள் பெரிதும் முயன்று வருகின்றன. ஆயினும் ஆராய்ந்தமைத்தநூல் இல்லாதவழித் தெளிவுற விஷயங்களை அறிந்து கொள்ளுதல் கூடாது.

இக்காலத்திற் புறப்பொருளாராய்ச்சியே குறைந்துபோயிற்று. இன்னன் என்றிரங்குகிற மன்னைக்காஞ்சி சரமகவிகளில் வெளிப்படுகிறது. யாக்கையுஞ் செல்வமும் இளமையும் நிலையா என்று அழுகிற அழுகையே தமிழ்வாணருக்கு இயல்பாயிற்று. நிலையாப் பொருள்களை விடுவாரோ மிகச் சிலர்; அவற்றைப்பற்றி யணைத்துக்கொண்டு தேடித் துய்ப்பதற்கு வலியின்மையால் "நிலையா, நிலையா" என்று பொய்க்காஞ்சி பாடி யிம்மை மறுமைச் சுகத்தை யிழப்பவரே மிகப் பலர். இனிப்பாடாண்டிணையை யவமதித்து ஆண்மையில்லா அசடர்களுக்குப் பாட்டிசைத்து அவர் தலைக்கடையிற் காத்திருந்து வன்

சொற்களையே பரிசிலாகப்பெற்று மீளுகிற தமிழ்வாணர் பலர். இவ்வாறு இயல்பிற் றிரிபுபட்ட காஞ்சியும் பாடாணும் ஒழிய ஏனைய ஆண்டன்மைக்குரியவாகை, தும்பை முதலிய புறப்பொருட் பகுதிகள் மறைந்தொழிந்து விட்டன, கவிநயவினிமையையும் பிறவினிமையையும் தருகிற அகப்பொருணறவினையுண்டு மதுவுண்டு மயங்கிய வண்டைப்போலச் செயலின்றிக் கிடந்தோம்; அடிமைத்தன்மையும் வந்தெய்திற்று. ஐயோ! இந்நிலைமை யினி வேண்டாம். வீரத்தையும் ஆண்மையையுந் தருகிற புறப்பொருளை நாடுவோம். தவராஜ சிங்கமாகிய விவேகாநந்தசுவாமி சொல்லுகிறார்: ''எழுந்திருங்கள், சோம்பலையும் மூடத்தனத்தையும் வீசியெறிந்துவிட்டு வெளியே உலாவி உலகத்தின் ஏனைய பாகங்களிலுள்ள மாந்தர்கள் முன்னேற்றமடைந்துகொண்டுபோவதைப் பாருங்கள். எத்தனை நாளைக்கு மூலையில் ஒதுங்கிக்கிடக்கப் போகிறீர்கள். நீங்கள் சுத்த வீரர்களின் வழிப்பிறந்தவர்கள் என்பதை மறந்துவிட்டீர்களா? சூரனுக்கு உயிர் துரும்பு; தேச முன்னேற்றத்துக்காக உயிரையும் கொடுக்கத் தயாரா யிருக்கும் வாலிபர்கள் ஆயிரக்கணக்கான பேர் முன்வரவேண்டும். மேனிலையையடைவதற்கு முயலுவோம். அம் முயற்சியில் உயிர்போனாலும் போகட்டும்''. முந்நாளில் இருந்த நமது தமிழ் நாட்டுத் தாய்மார் எவ்வளவு வீரம்படைத்தவராக விருந்தார்கள்.

> ''நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
> முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
> படையழிந்து மாறின னென்றுபலர் கூற
> மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்
> முலையறுத் திடுவன் யானெனச் சினைஇக்
> கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
> செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
> படுமகன் கிடக்கை காணூஉ
> ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே.''

இது முன்னுளியல்பு,

> ''தந்தை மதியினுஞ் சாலுநன் மதியோன்
> என்மகன் தீரன் எசமான் கோபித்
> தெட்டி யுதைத்த காலினைப் பற்றி
> முத்தமிட்டு முன்னின்று பணிந்து
> ஐயநின் காலுக் கடிமைதுயர் விழைத்தனன்
> என்னக் கூறி யீரைந்து வெண்பொன்
> சம்பள வுயர்ச்சி சாலப் பெற்றனன்''

அதனைக் கூற்றும் மாற்றமும் மிடைந்த நடையினதாக்கி, ஆடலரங்கி லும் வினவுதற்கு ஒருவரும், விடுப்பதற்கு ஒருவரும் உடனெத்திசைப் போர் பலருமாக அமைத்தாராதலினால், இவரையே, யவனபுரத்து நாடகவியலுக்குத் தந்தையென்றல் சாலும். இவருக்குப் பின் வந்த சோபக்கிளீஸ் *(Sophocles)* என்பவர் அரங்கத்தில் மூவர் நால்வர் ஒருங்கு தோன்றி யாடுமாறு கவியமைத்தார். இவருக்குப்பின்வந்த யூறிப்பிடீஸ் *(Euripides)* என்னும் புலவர் நாடகத்தை மேலும் விருத்தி செய்தார். அய்ச்சகலீஸ் 70 நாடகமும், சோபக்கிளீஸ் 113 நாடகமும், யூறிப்பிடீஸ் 92 நாடகமும் எழுதி முடித்தார்கள். இவர் மூவரும் எழுதிய நாடகங்கள் வீரர் புகழ் கூறும் ரிருஜெடியின் பால வாகலின், வீரம், வெகுளி, உருத்திரம், சோகம், பெருமிதம் என்னுஞ் சுவைகள் பொருந்தி விளங்குவன.

வேனில்வேள் ஆகிய தயனிசன் என்னுந் தெய்வத்துக்கு விழாக் கொண்டாடுங் காலம் மாவும் புள்ளும் துணையொடுவதியும் வசந்த கால மாதலினால் அக்காலத்து உண்டாட்டினால், களி தியங்கினோரும் யாறுங் குளனுங் காவு மாடிப் பதியிகந்து காம நுகர்வோருமாகிய இளையாருடைய உள்ளத்தில் உவகையும் நகையும் தோற்றுவது இயல்பேயாம். நகைச்சுவையும் உவகைச் சுவையும் நிறைந்த நாடகங்கள் ''கமிடி'' *(Comedy)* எனப்படுவன. இச்சொல்லுக்குப் பொருள் ''சிறுகுடிப் பாட்டு'', ''பண்ணைப்பாட்டு'' என்று கொள்ள லாகும். நமது தமிழ்மொழியிலுள்ள குறத்திப்பாட்டு, உழத்திப் பாட்டு என்னும் இவை யவனபுரத்தரது பண்ணைப்பாட்டு இலக்கணங் களைப் பெரிதும் பெற்றன. கி. மு. 427 ஆம் ஆண்டிலிருந்த அறிஸ் டோபாணிஸ் *(ARISTOPHANES)* என்னும் பெரும் புலவர் சமூக வாழ்க்கையிலுள்ள தவறுதல்களையும் தலைவராகவுள்ளோரது குறை வுகளையும் எடுத்துக் காட்டுவதற்குப் பண்ணைப்பாட்டினை யுபயோகித் தார். பறவைகளும், வண்டுகளும், கார்முகிலும் தங்கள் கருத்தை வெளியிட்டுச் சொல்லுவதாக அமைத்து இப்பெரும் புலவர் சமூக வாழ்க்கையிலுள்ள தீமைகளை யெடுத்துக் காட்டும் நீர்மை மிக வியக் கத்தக்கது. இவரனைய புலவர் ஒருவர் இந்நாட்களில் நம்மிடையே யிருப்பாராகில் நமது சமூகவாழ்க்கையிலிருக்கும் தீமைகளைக் குறவஞ்சி நாடகமாகவோ உழத்திப் பாட்டாகவோ பாடி நம்மை நகைப்பிப்ப தோடு நல்வழிப்படுத்துவதற்கும் வல்லவராவார்.

நாடகங்கள் பலவாக நிறைந்த பின்னர் வசன நூல்கள் எழுந்தன. பாடலானது நிரம்பிய சுவையும் பாவமும் உடையதாயிருத்தல் வேண்டும். அதிலும் இசைப்பா பாவிகமும் மெய்ப்பாடும் பெற்றன்றிப் பிறக்க மாட்டாது. ஆசானொருவன் தன் மாணக்கனுக்கு அறிவு நிறைவுறுத்தும் பொருட்டு இலக்கணம், தருக்கம், அறநெறி, தேச

சரித்திரம், விஞ்ஞான சாஸ்திரம், தத்துவ சாஸ்திரம் என்னும் இவற்றைச் சொல்லிவைக்குமிடத்துத் தெளிவுவேண்டப்படுவதேயன்றிப் பாவிகமும் மெய்ப்பாடும் வேண்டப்படா; ஆதலால் இவற்றைக் கூறும் நூல்களை உரைநடையில் அமைத்தலே பொருத்தமாம். நமது முன்னோர் செப்பலோசை வாய்ந்த வெண்பாவினும், சொற்சீரடிபெற்ற சூத்திரப்பாவினும் அமைத்ததுவும் பொருத்தமேயாம். யவனபுரத்தார் மேற்குறிப்பிட்ட பொருள்கண்மேலனவாய பல வசனநூல்கள் இயற்றினார்கள். கி. மு. 484 இல் பிறந்த ஹெரொடொற்றஸ் *(Herodotus)* என்பார் யவனபுரத்துத் தேசசரித்திர மொன்றை சிறப்புற எழுதினார். இவருக்குப் பின் வந்த துசிடிடீஸ் *(Thucydides)* என்பவர் பாரசீகருக்கும் யவனபுரத்தாருக்கும் இடையில் நடந்த பெலப்பொண்ணேசிய யுத்தத்தைக் குறித்த ஒரு இதிகாசநூலை எழுதினார். இந்த யுத்ததினது வரலாறு முதலியவற்றை யவனபுரத்து அரசியல்வரன்முறையென்னுந் தலைப்பெயர்க்கீழ் ஆராய்வாம். செனொபன் *(Xenophon)* எனப் பெயரிய ஒரு தளகர்த்தனும் சரித்திரச் சார்பாக இயற்றிய நூல் ஒன்று உண்டு.

யவனபுரத்திற் சுயவரசு நிலைத்திருந்த காலம்வரையும் இயல் இசை நாடகநூல்களும், அர்த்தசாஸ்திரம், அலங்காரசாஸ்திரம் என்னும் இவையும் பெருகிவளர்ந்தன. அரசியல் நிலை தளும்பிய பின்னர் மொழியும் வீழ்வெய்தியது. சுயவரசு நிலைத்திருந்த காலத்தில் நீதிமன்றத்திலும் அத்தாணிமண்டபத்திலுஞ் சிறப்படைவதற்குச் சொல்வன்மை யின்றியமையாத தொன்றாயிருந்தது. டெமொஸ்தினீஸ் *(Demosthenes)* போன்ற சொல்வன்மையிற் சிறந்தோர், மக்களாற், பெரிதும் மதிக்கப் பட்டார்கள். அமர்க்களத்தினின்று போர்புரிந்த வீரன் அப்போரினைச் சிறப்பித்துப் பாடும் பாடலுக்கும் போர்முனையை யொருபொழுதுங் காணாத கோழைநெஞ்சன் போரினைச் சிறப்பித்துப் பாடும் பாடலுக்கும் பெரிதும் வேற்றுமை உண்டு. தமிழ்நூலிற் தலைசிறந்து விளங்கும் புறநானூறு என்னும் நூலானது வடிவேலேந்தி அடுகளத்துப் பொருத சுத்தவீரர்களாற் பாடப்பட்ட வஞ்சினக் காஞ்சிபோன்ற செய்யுட்களைத் தன்னகத்துக் கொண்டமையானன்றோ நாம் அதனைப் பொன்னேபோற் போற்றுகிறோம். யவனபுரத்துப் பூர்வ நூல்களும் இத்தகையனவே; ஆதலினாலன்றோ அவை இன்றும் நிலைபெற்று நின்று தேவருலகத்து அமுதம் போலப் படிப்போருக்கு உற்சாகத்தையுந் தீரவீரத்தையும் தருகின்றன. ஆங்கில நாட்டிலுள்ள இளைஞர்கள் கணக்காயரிடத்துக் கல்வி கற்குங் காலத்திலேயே லத்தீன், கிரீக் மொழிகளைப் படித்துவிடுகிறார்கள். அதனால் அவர்கள் பாலப்பருவத்திலேயே வீரமும் பெருமிதமும் உடையவர்களாய் விளங்குகிறார்கள். நமது நாட்டில் கற்று வல்லோரென்றிருப்போர்தாமும் புறநானூற்

றினைப் படிப்பதில்லை. நேற்றும் இன்றும் வெளிவந்த பிழைபொதிந்த, சீர்கெட்ட நாவல்களே நமது சிறுவர் செவிக்கு உணவாகின்றன. வீரகாவியங்களைக் கற்றால் உள்ளம் வீரத்தன்மையடையும்; ஆதலால் மேற்றிசையோர் தமது சிறுவருக்கு ஈலியமகா காவியம், லத்தீன் மொழியில் சீசர் என்னுஞ் சக்கரவர்த்தி யெழுதிய காலதேயயுத்தம் *(Gallic war)* என்னும் நூல்களைக் கற்பித்துவைப்பர்.

யவனபுரத்துத் தத்துவஞானிகளைப்பற்றியும் அவர்களெழுதிய நூல்களைப்பற்றியும் ஒருசில கூறுவாம். கி. மு. 600 (கலி 2500) அளவில் **மலேதஸ்** *(Miletus)* என்னும் நாட்டில் வசித்த **தாலேஸ்** *(Thales)* என்னும் தத்துவஞானி பூதநூல், வானநூல் கணிதநூல் என்னுமிவற்றில் வல்லவரெனப் பெயர்வாய்ந்தார். இவர் அனைத்துப் பொருள்களுக்கும் நீரே முதற்காரணம் எனக் கூறினார். இவர் மாணவரா கிய அனக்சிமாண்டர் *(Anaximandar)* என்பவர், மழை ஆகாயத்தினின்று வருஷிக்கிறதாதலால் நீருக்கும்முதற்காரணமாகிய ஆகாயமே அனைத் துக்கும் முதற்காரணம் என்றார். இவர் மாணவராகிய அனக்சிமெனஷ் *(Anaximenes)* அனைத்தினும் சலனத்தை யுண்டாக்குகின்ற பிராணனே முதற் காரணமாகும் என்னுங் கொள்கையினை நிறுவினார். இங்ஙனம் முதற்பொரு ளாராய்ச்சி நடந்துகொண்டிருந்த காலத்திற்றானே, முதற்பொருளுக்கும் பிறபொருளுளவேல் அவற்றுக்கும் இடையிலுள்ள தொடர்பு *(Relation)* இத்தன்மையதென ஆராயும் ஆராய்ச்சியும் நடந்தது. இவ்வாராய்ச்சியின் பயனாக மூவகைப்பட்ட கொள்கைகள் நிலைபெற்றன. இவை மேலைத் தேசத்துத் தத்துவ சாஸ்திரத்தில் இன்றும் நின்று நிலவுகின்றன வாதலால் இவற்றைச் சற்று விரிவாக நோக்குவது இன்றியமையாத தாகின்றது. ஆவதும் அழிவதுமாகிய தோற்றம் பொய்த்தோற்றம் என்றார் ஒரு சாரார். இவரது கொள்கையின்படி ஆதியிலுள்ளதே *(Being)* பொருளெனப் படுவது; ஆவதும் *(Becoming)* அழிவதும் உள்ளதெனப்பட்ட முதற்பொருளினின்று வேறுபட்டன வல்லவாகலான், அவற்றினைப் பிறிதுபொருள் எனல் வேண்டா என்பது. இக்கொள்கையோர் எலெயாரிக்ஸ் *(Eleatics)* எனப்படுவார். ஹெறாக்கி ளிற்றஸ் *(Heraclitus)* என்பவருடைய கொள்கையின்படி ஆவதும் அழிவதுமே பிரத்தியக்ஷமாகக் காணப்படுவ வாதலால், நிலைபெற்ற நீர்மையதாகிய முதற் பொருள் என்பதொன்றில்லை யென்பது. மூன்றாம் வகையாருள் அணுப்பரிணமவாதிகள் நிலைபெற்ற முதற் பொருளு முண்டு, ஆதல் அழிதலும் உண்டு என்னுங் கொள்கையினர்.

முதல்வகையோருட்டலைசிறந்தோர் **செனோபானெஸ்** *(Xenophanes)*, **பார்மெனிடஸ்** *(Parmenides)*, **மெலிசஸ்** *(Melissus)*, **சேனோ** *(Zeno)* **கோர்கியாஸ்** *(Gorgias)* என்பவர்கள். பூர்வயவனர் பலதெய்வ வணக்கமுடையவர்களா யிருந்தார்கள். செனோபானஸ் என்பவர் பல

தெய்வ வணக்கத்தைக் கண்டித்து, ஆண்டவன் ஒருவனே யென்றும் அவன் அகண்ட ரூபியென்றும், காணுங் கண்ணனைத்தும் கேட்குஞ் செவியனைத்தும், உணரும் உள்ளமனைத்தும் அவனதேயென்றும் போதித்தார். இவருடைய மாணவராகிய பார்மெனிடஸ் என்பவர் இறைவனொருவனே அனைத்துமாயிருக்கிறனென்றும், அவன் வேறுபாடெய்தப் பெருதவனுதலால் ஆவதும் அழிவதுமில்லையென்றும் அங்ஙனமாகலின், ஆவதும் அழிவதுமாகத் தோற்றுகிற தோற்றம் பொய்த்தோற்றம் என்றும் விரித்து விளக்கினுர். சகத்தோற்றம் பொய்த்தோற்றமாயினும் சிருஷ்டி சங்காரம், உண்டு என்பதும் அவை, காலவெல்லையுட்பட்டனவென்பதும் இவரது கொள்கை. இவரது மாணவர் மெலிசஸ் என்பவர் தோற்றமும் அழிவும் பொய்யாதலின் உலகம் அநாதியாக நிலைத்திருப்பது என்றும், அது ஈஸ்வரனிடத்து உள்ளது என்றுங் கூறினுர். சேனே என்பவர் சலனம் என்பதொன் றில்லையென்றும், அனைத்துப் பொருள்களுக்கும் இடந்தருகிற ஆகாயம் என்பதை ஒரு பொருளாகக் கொள்வோமாயின், அந்தப் பொருளுக்கு இடந்தருதற்குப் பிறிதொரு ஆகாயம் வேண்டப்படும் ஆதலால் ஆகாயம் பொருளெனப் படாதென்றும் விளக்கினுர். அவர் மாணக்கர் கோர்கியாஸ் என்பவர் ஏனைய பூதங்களும் இல்பொருளெனக் காட்டி, ஒரு பொருளுமில்லையென வாதிக்குங் கொள்கையினராக விருந்தார்.

ஏனைய தத்துவ சாஸ்திரக் கொள்கைகளை விசாரிக்கப் புகுமுன் யவனயுரத்துத் தேவதைகளைப் பற்றி ஒருசில கூறுவாம். வானகத்தையும் மண்ணகத்தையும் உருவகப்படுத்தி, அவற்றை முறையே யுரனஸ் (*Uranus*) என்பதொரு ஆண்தெய்வமாகவும் கே, (*GE*) என்பதொரு பெண் தெய்வமாகவும் பூர்வயவனர் வணங்கினர். இவ்விரு தெய்வங்களுக்கும் பலபூதர்கள் (*Tintans*) புதல்வராகத் தோற்றின ரெனவும், அவருட் சிரேட்டர் சிறேநெஸ் (*Chronos*) என்பதாகவும் புராணங் கூறுகிறது. சிறேநேஸ் என்னும் மொழிக்குக் காலம் என்பது பொருள். கையில் அரிவாள் ஏந்திய ஒரு வயோதிகனது தோற்றமாகும் இந்தத் தெய்வத்தினது தோற்றம். சிறேநெஸ், றேயா (*Rhea*) வை மணமுடித்துப் பல புதல்வர்களையும் புதல்வியர்களையும் தோற்றுவித்தார். தன் மகனொருவன் தன்னிலும் மிக்கவனுகித் தான் அரசு புரியும் தேவலோக ராஜ்யத்தைக் கைப்பற்றுவான் என்பதைச் சிறேநெஸ் அறிந்தமையினுலே றேயா பெறுகிற சிசுக்களை யெல்லாம் பிறந்தவுடனே எடுத்து விழுங்கிவிடுவது சிறேநேஸுக்கு இயற்கையாயிருந்தது. றேயா ஒருவகைச் சூழ்ச்சியினுல் ஈற்றிற் பிறந்த சிசுவாகிய ஜுப்பிற்றரை (*Jupiter*) மறைத்துவைத்துவிட்டாள். இந்தப்பிள்ளை வளர்ந்து பெரியவனுகித் தந்தையை வென்று, தந்தையினுல் விழுங்கப்பட்ட தனது உடன்பிறந்தாரனைவரையும் தந்தை வயிற்றிலிருந்து அழைப்பித்துத் தனக்குத் துணையாக்கி,

அதன்பின்னர்த் தந்தையைத் தேவலோகத்திலிருந்து துரத்திவிட்டுத் தானே தேவலோகத்துக்குத் தலைவனாயினான். தனது சகோதரனாகிய பொசெயிடனை (*Poseidon*) நீருலகத்துக்குத் தலைவனாகவும் மற்றொரு சகோதரனாகிய பிளுட்டோவை இருளுலக (நரகலோக) த்துக்குத் தலைவனாகவும் ஆக்கினான். தனது உடன் பிறந்தாளாகிய ஜூனோ (*Juno*) வைத் தேவலோகத்துக்கு ராணியாக்கினான்; சீறெஸ் (*Ceres*)என்னும் மற்றொரு சகோதரியைத் தானியங்களுக்கு அதிபதி யாக்கினான்; வெஸ்டா என்னும் மற்றொரு சகோதரியை அட்டிலுக்கும் அட்டிலில் வைகும் அக்கினிக்குந் தலைவியாக்கினான். தேவ ராஜனுடைய மகன் அபல்லோ (*Apollo*) கவிதைக்கும் இசைக்கும் தலைவன்; கையில் யாழும் வில்லும் ஏந்திய ஏர்மிக்க இளைஞனுடைய உருவம் இத்தெய்வத்தினது உருவம். தேவராஜனுடைய மற்றொரு புதல்வனாகிய ஹேர்மெஸ் (*Hermes*) தேவர்களுக்குத் தூதுவனாயினான். இத்தெய்வத்தைப் பற்றி ஹோமர் பாடிய இன்னிசைக் கவிதையொன்றுண்டு. இத்தெய்வத்துக்கு வானிலும் மண்ணிலும் விரைந்து சென்று சஞ்சரிப்பதற்கு உபகாரமாகக் கால்களிலும், தலைப்பாகையிலும் சிறகுகளுண்டு. கையில் பாம்பு இரண்டு சுற்றிய தண்டு ஒன்று உண்டு. அக்னிலோகத்துக்கு அரசனும் கொற்றொழில் வல்லவனுமாகிய வல்கன் (*Vulcan*) என்னுந் தெய்வமும், தேவசேனாதிபதியாகிய அறேஸ் (*Ares*) என்னுந் தெய்வமும் முறையே கொற்றொழிலோராலும் சேனைத்தலைவராலும் வணங்கப்பட்டு வந்தனர். தேவராஜனுடைய சிரத்திலிருந்து கவசம் பூண்ட தோற்றத்தோடு கூடிய ஒரு பெண் மகவு வெளிப்பட்டாள். இவள் ஞானத்துக்கும்வீரத்துக்குமுரிய தெய்வமாயினாள்; இவள் பெயர் அத்தேனா(*Athena*) என்பது; இவள் ஞானத்துக்கும் வீரத்துக்குமுரிய தெய்வ மாதலால் இவள் சிந்தை சிறிதேனுங் காமத்தின்பாற் சென்றிலது. அபல்லோவோடு உடன்றோன்றிய ஆர்டெமிஸ் (*Artemis*) என்னுந் தேவதை, வில்லும் அம்பும் ஏந்தி வேட்டைத் தொழிலுக்கு உரிய தெய்வமாயினாள்; இவளைச் சந்திர மண்டலத்துக்கு அதிதேவதையாகவும், அபல்லோவைச் சூரியமண்டலத்துக்கு அதிதேவதையாகவும் யவனபுரத்தார் கொண்டார்கள். ஆவிரதை (*Aphrodite*) தேவராஜனுடைய மற்றொரு புதல்வி. இவள் அழகுக்கும் காமத்துக்கும் தெய்வம். இவள் புதல்வன் ஏறொஸ் (*Eros*). இவன் என்றும் பாலப்பருவங் கழியாத மன்மத தேவன். ஜூப்பிற்றர், பொசெயிடன், அபல்லோ, வல்கன், அறேஸ். ஹேர்மஸ், ஜூனோ, அத்தேனா, ஆர்டெமிஸ், ஆவிரதை வெஸ்டா, சீறெஸ் என்னும் பன்னிரு தேவதைகளுமே சிறப்புடையனவாக யவனர்களாற் கொண்டாடப்பட்டுவந்த தேவதைகளாம்.

ஜூப்பிற்றர் என்னும் மொழி த்யாஉஸ் பித்ரு (*Dyaus Pitar*) என்னும் வடசொல்லினது சிதைவாகும்; இத்தெய்வத்தை த்யாஉஸ் என்னும் மொழியினது சிதைவாகிய சேயுஸ் (*Zeus*) என்னும் பெயரி

னுலும் வழங்குவதுண்டு. த்யாஉஸ் என்னும் வடமொழி, பிரகாசம் என்னும் பொருளினையுடையது. இப்பெயர் கடவுட்பெயராக இருக்கு வேதத்திலும் வழங்கப்படுகிறது. யுறனஸ் என்பது உராணஸ் என்பதன் சிதைவு. உகரவகர ஒற்றுமை பற்றி இச்சொல் வடமொழியில் வருண: என்று வழங்கும். ரிக் ஸம்ஹிதையில் வருணன் என்னும்மொழி வானமண்டிலத்துக்குத் தலைவனாகிய தேவதேவனைக் குறிப்பது. பின்னாட்களில் இம்மொழி கடற்றெய்வத்தின் பெயரைக் குறிப்பதாயிற்று. பூர்வ யவனர் தமது முன்னோராகிய ஆரிய மக்களிடத்திருந்து பிரிந்து போய காலத்து இந்த இரண்டு தெய்வப் பெயரையும் அறிந்திருந்தார்களென்பது ஆராய்ச்சியாளர் துணிபு. காலதேவதை சூரியனுடைய புதல்வன் என்பது நமது புராணங்களின் கொள்கை. சூரியன் காலதேவதை யுடைய மகனுக்கு மகன் என்பது யவனபுரத்துக் கொள்கை. ஆகாசமாகிய வெறுவெளிக்குத் தேவதை யுரேனஸ்; அதனின்றும் தோற்றிய கால தத்துவத்துக்குத் தேவதை சிரோணஸ் (இத்தேவதைக்குச் சற்றேண் (*Saturn*) என்னும் பெயரும் உண்டு); அதினின்று தோற்றிய ஒளிக்குத் தேவதை ஜூப்பிற்றர், அதனின்று தோற்றிய சூரியச்சந்திரருக்குத் தேவதைகள் அபல்லோவும் ஆர்டெமிசும் என்று இவ்வாறு அறியலாகும். பொசெயிடனுக்கு மற்றொரு பெயர் நெப்ரியூன் (*Neptune*) ஜூனோவுக்கு மற்றொரு பெயர் ஹேரே (*Here*); அத்தேனாவுக்கு மற்றப் பெயர்கள் பல்லாஸ் (*Pallas*) மினெர்வா (*Minerva*); வல்கனுக்கு மற்றொரு பெயர் ஹெபெஸ்தஸ் (*Hephzestus*); அறேசுக்கு மற்றொரு பெயர் மார்ஸ் (*Mars*); ஹெர்மெசுக்கு மற்றொரு பெயர் மேர்க்கரி (*Mercury*); ஆர்டெமிசுக்கு மற்றொரு பெயர் டயனா (*Diana*); ஆவிரதைக்கு மற்றொரு பெயர் வீநசை (*Venus*) வெஸ்டாவுக்கு மற்றொரு பெயர் ஹெஸ்டிய (*Hestia*); சீறேசுக்கு மற்றொரு பெயர் டெமீற்றர், (*Demeter*).

# 10. சோழமண்டலத்துத் தமிழும் ஈழமண்டலத்துத் தமிழும்

வடநாட்டிலிருந்து வெளிவரும் '' மாடர்ன் ரெவ்யூ '' என்னும் ஆங்கில மாசிகை யொன்றிலே ''தமிழ் மொழி ஒலியியல்'' (*The Phonetics of the Tamil Language*) என்னும் பொருள் பற்றி ஒரு வியாசம் எழுதி வெளியிட்டேன். தென் மொழிச் சார்பாகிய பொருளினை மேற்றிசை மொழியில் எழுதி வடநாட்டு மாசிகையில் வெளியிட வேண்டிய காரணம் என்னவென்று அன்பர்கள் வினவலாம். காரணம் உண்டு. ஆனால், அதனைச் சொல்லத் தொடங்கினால், இலக்கண நூலார் கூறிய ''மற்றொன்று விரித்தல் ''ஆகும்; ஆதலினாலே அதனை விடுத்து, எடுத்துக்கொண்ட விஷயத்தோடு தொடர்புடைய பொருளை மாத்திரம் பேசலாமென்று எண்ணுகிறேன். குறித்த வியாசத்திலே, தமிழ்நாட்டு மக்கள் இக்காலத்திலே, திண்ணையிலும் தெருவிலும் கடைவீதியிலும் தொழிற்சாலையிலும் வழங்கும் தமிழ் மொழியின் சிறப்பியல்புகள் சிலவற்றை எடுத்துக் காட்டினேன். அஃதன்றியும் ஸ்ரீமான் டி.கே. சிதம்பரநாத முதலியாரை யுள்ளிட்ட தமிழன்பர்கள் தமிழ் மக்களது வழக்கு மொழியாகிய உயிர்த்தமிழினது அழகினையும் ஆற்றலினையும் தீரவிசாரித்து ஆவன செய்தல் வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டேன்.

ஈழ நாட்டிற் பிறந்தேனாயினும் ஈழத்து வழக்குத் தமிழில் எனக்கு அதிகப்பழக்கமில்லை. கற்றது புத்தகத் தமிழ்; கலந்து பழகி ஒரு சிறிது பயின்று கொண்டது சோழநாட்டுத் தமிழ். இலங்கையிலே நான் நண்பரோடு உரையாடும்போது, என் உரையைக் கேட்டோர், '' சாமி பேசுவது வடக்கத்திய தமிழ் '' என்று சொல்ல நான் பலமுறை கேட்டதுண்டு. இலங்கையிலுள்ளோர் தென்னாட்டுத் தமிழரை வடக்கத்தியார் என்பது வழக்கம்; தென்னாடு ஈழத்திற்கு வடநாடுதானே? இஃது இப்படியிருக்க; ஒரு நாள் சென்னை ஜார்ஜ்டவுனிலே ஒரு கடைக்காரன் என்னை நோக்கி, '' சாமிக்கு ஊர் பாலக்காடா ?'' என்று வினாவியதுண்டு. உயிர்த் தமிழுக்கும் புத்தகத் தமிழுக்கும் உள்ள எழுத்துத் திரிபு வேறுபாடுகளைக் காட்டுவதற்கு நான் கைக்கொண்ட மேற்கோள்கள் பொதுவாகத் தென்னிந்தியத் தமிழிலிருந்து எடுக்கப்பட்டவை. '' தமிழ் மொழி ஒலியியல் '' என்னும் வியாசத்திலே யாழ்ப்பாணத்து வழக்குத் தமிழை அதிகம் எடுத்துக் காட்டவில்லை.

---

கலைமகள்: 19ஆம் தொகுதி (1941) பக்கம் 82-88

இந்நிலையிலே என் மாணவரும் நண்பருமாகிய பேராசிரியர் கணபதிப்பிள்ளை தாம் எழுதி வெளியிட்ட ‘‘ நானாடகம் ’’ என்னும் புத்தகப் பிரதியொன்று அனுப்பி வைத்தார். ‘‘உடையார் மிடுக்கு’’, ‘‘முருகன் திருகு தாளம்’’, ‘‘கண்ணன் கூத்து’’, ‘‘நாட்டவன் நகர வாழ்க்கை’’ என்னும் நான்கு நாடகங்களின் தொகுதி, ‘‘நானாடகம்’’ எனப் பெயர் பெற்றது. ஆக்கியோனது முன்னுரையிலிருந்து சில பாகங்களை இங்குத்தருகின்றேன்.

‘‘நாடகம் என்பது உலக இயல்பை உள்ளது உள்ளபடி காட்டுவது. ஆகவே வீட்டிலும் வீதியிலும் பேசுவது போலவே அரங்கிலும் ஆடுவார் பேசல் வேண்டும் . . . . . . . . . . . . கொடுந்தமிழ்மொழி அவ்வந்நாட்டிற்கே உரிய மொழியாம். ஆகவே சோழமண்டலத்துத் தமிழர் ஈழமண்டலத்துத் தமிழை அறிவதற்கு வழியாது ? அன்றியும் உயிருள்ள மொழியெல்லாம் இடைவிடாது மாறிக் கொண்டே வரும். ஒருவனை ஐந்துவயதிற்பிடித்த படமும் ஐம்பது வயதிற் பிடித்த படமும் ஒருதன்மையாயிருக்குமோ ? ஆண்பாலாருக்கும் பெண் பாலாருக்கும் பருவம் ஏழு என வகுத்தார் ஆன்றோர். அப்படியாயின் ஒவ்வொரு பருவத்திலும் படம் பிடித்தல் விரும்பத்தக்கது. அது போலவே அவ்வக் காலத்துக் கொடுந்தமிழையும் தீட்டி வைத்தல் வேண்டும். இற்றைக்கு முப்பதுஆண்டுகட்கு முன்னே யாழ்ப்பாணத்திற் பேசிய தமிழோ இன்று நாம் பேசும் தமிழ் ? இங்ஙனம் யாம் கூறுவது சொல்லை மட்டும் எண்ணியன்று; சொல்லின் வடிவம்மாற மாற இலக்கணமும் மாறும்; பொருளும் மாறும். ஆகவே அவ்வக் காலத்துச் சொல்லின் வடிவும் பொருளும் இலக்கணமும் தீட்டி வைத்தல் இன்றியமையாதது. இதன் உண்மை ஆங்கிலம் முதலிய மேனாட்டு மொழி வல்லுநர் அறிவர். நந் தமிழ்மொழி வல்லுநரும் இவ்வுண்மையை அறிவரோ ?

‘‘ இந்நான்கு நாடகத்திலும் வழங்கிய பாடை யாழ்ப் பாணக்குடா நாட்டுக்குப் பொதுவாயும் பருத்தித்துறைப்பகுதிக்குச் சிறப்பாயும் உள்ளது.

‘‘ இந்நாடகங்களுள் முதல் மூன்றும் இலங்கைப் பல்கலைக்கழகக் கல்லூரித் தமிழ்ச் சங்கத்து ஆண்டு விழாக்களில் சங்கத்து அரிவையரும் ஆடவரும் கல்லூரி அரங்கில் ஆடியவை ’’

புத்தகம் கிடைத்ததைக் குறித்து நான் எழுதிய மறுமொழி வருமாறு :

‘‘பேரன்புவாய்ந்த திருவாளர் க. கணபதிப்பிள்ளை அவர்களுக்கு,

'நாரதனுடக'மும், 'காதலி ஆற்றுப்படை' யும் கிடைத்தன. முற்றும் படித்து மகிழ்வுற்றேன். ''பொருளோ பொருள்'' எனப் பெயரிய மற்றுமொரு நாடகம் அண்மையில் அரங்கேறியதாக ஈழகேசரியிற் படித்தேன். மட்டக்களப்பு வழக்கு மொழியினையும் ஓரிரண்டு நாடகங்களிலே படம்பிடித்து வைப்பதுநன்று. விஜயதசமி வாழ்த்துரை கூறி முடிக்கின்றேன்.

அன்புள்ள
விபுலாநந்தர்''

மட்டக்களப்பு நான் பிறந்தநாடு; ஈழத்தின் கிழக்குப் பாகத்திலுள்ளது. அந்நாட்டு வழக்குமொழி யாழ்ப்பாணத்து வழக்கு மொழியினின்றும் வேறுபட்டது. அவ்வேறுபாடுகளுள் ஒரு சிலவற்றை இக்கட்டுரையிற் குறிக்கிறேன்.

ஆங்கிலத்தில் சிறந்த நாடக நூல்கள் பலவற்றை இயற்றித்தந்த ஜார்ஜ் பெர்னாட்ஷா என்னும் பேரறிஞர் எழுதிய பிக்மாலியன் என்னும் நாடகத்திலே, ''மொழி யொலியியல்'' *(Phonetics)* நூலினை ஆராய்ந்துணர்ந்த பண்டிதனொருவன் பூ விற்பவளாகிய ஏழைப் பெண்ணொருத்தியை ஆறுமாதகாலம் பேசப்பயிற்றி உயர் குடிப்பிறந்த சீமாட்டி *(Duchess)* களுடைய குழுவிலே சேர்த்து விடுகிறான். அவளது பேச்சின் திறம் உயர் குடியோரது பேச்சினை ஒத்திருந்தமையின் அவள் ஏழைக்குடும்பத்துப் பெண் என்பதை யாரும் அறிந்துகொள்ளவில்லை. ஒருவர் பிறந்த தாலுகா, ஜில்லா, அவரது குலம், கோத்திரம், தொழில், பொருணிலை என்னுமிவற்றை அவரது மொழியினின்று அறிந்து கொள்ளுகிறோம். ஆதலினாலே எல்லாரும் எவ்விடத்தும் உயர்ந்தோர் வழக்கையே கைக்கொள்ள வேண்டுமென்பது எனது கருத்தன்று. தாம் தாம் வழங்குகின்ற வழக்கு மொழியையே நயம்பட உரைக்கப்பயின்று கொள்ளவேண்டும். சம்பாஷணையிலே சொல் நயத்தோடு பொருள் நயமும் அமைய வேண்டும்.

நண்பர் கணபதிப்பிள்ளை லண்டன் மாநகரிலே டாக்டர் *(Doctor of Philosophy)* பட்டம் பெறுவதற்காகக் கல்வெட்டுச் சாசனங்களிலுள்ள வழக்கு மொழியினது இலக்கணத்தினை ஆராய்ந்தவர். கம்பன் இராமாயணம் அரங்கேற்றிய காலத்திலே எல்லோரும் கம்பராமாயண நடையாகப் பேசினார்களெனக் கொள்வது மயக்கவுணர்வாகும். அக்காலத்து வழக்குத் தமிழ் அக்காலத்தில் ஏற்பட்ட கல்வெட்டுச் சாசனங்களிலே படம்பிடித்து வைக்கப்பட்டிருக்கிறது. சங்கம் மருவிய கலித்தொகை யென்னும் அழகிய தமிழ் நூலிலே உலகநடையும் வழக்கு மொழியும் சிற்சில இடங்களிலே அழகாகப்

படம் பிடித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைப் படிக்கும் போது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னிலிருந்த தமிழ்நாட்டு மக்கள் நம்மின் வேறுபட்டவரல்லர் என அறிந்து உளமகிழ்வெய்துகின்றோம்.

இவ்வாராய்ச்சியின் இன்றியமையாமையையும் இதனது பொது வியல்பையும் இதுவரையும் காட்டினேன். இனி வடநாட்டு மாசிகையிலே யானெழுதிய முடிவுகளையும் 'நாளுடகத்' தொகுதியினை ஆராய்ந்து கண்ட முடிபுகளையும் தருகிறேன்.

(1) வழக்குமொழி எழுத்துத்தொகையிலும், மாத்திரை யளவிலும் சுருங்கி நடத்தலை விரும்பும். தேவை இல்லை=தேவல, நிரம்ப=ரெம்ப, பயல்=பய, வாருங்கள்=வாங்க, கேட்கிறார்= கேக்கார், இருக்கிறது=இருக்கு (ஈற்றுகரம் குற்றியலுகரம்; இனி மேற்காட்டும் வழக்கு மொழிக் குற்றியலுகர ஈறுகளை இருதலைப் பிறையினுள் (–) அடைத்துக் காட்டுவாம்.) போகவிட்டு=போட்டு, (இடைக்காலத்துச் சீவகசிந்தாமணி முதலிய நூல்களிலே ''போக விட்டு'' என்பது போகட்டு'' என்று வருவதைப் பலவிடங்களிலும் காணலாம்.) ஏன்அடா=ஏண்டா (தமிழ் நாட்டுப் பிராமணர் வழக்கு) ஏன் அடா=ஏன்ற்ற (ஈழநாட்டுவழக்கு. (attack) என்னும் ஆங்கில மொழியிலுள்ள இணை tt யினது ஓசையை ஒத்தது, ''கற்றார், பெற்றார்'' என்னும் மொழிகளில் வரும் இணை ''ற்ற'' ஓசை; கணபதிப்பிள்ளை இவ்வோசையினைத் தனி ''ர'' வினாலே குறித்து 'ஏன்ரா'' என்று எழுதுகிறார். இணை ''ற்ற'' ஓசையிலுள்ள அழுத்தம் தனி ''ர'' வுக்கு இல்லை. ''ஏண்டா'' ''ஏன்ற்ற'' என்னும் இரண்டினையும் ஒப்பு நோக்குமிடத்து இரண்டிலும் அகரம்கெட, ஒன்றில் நிலைமொழி நகர வொற்று வருமொழிகேற்ப ணகரமாகத் திரிந்ததெனவும், மற்றையதில் நிலைமொழி திரிபின்றி நிற்க வருமொழி டகரம் நிலைமொழியீற்றுக்கு இனமாகத்திரிந்த தெனவும் காணலாம்.)

(2) செந்தமிழ் ''டகரம்'' கொடுந்தமிழில் ''றகரம்'' ஆதலும்,
(3) செந்தமிழ் ''றகரம்'' கொடுந்தமிழிலே ''தகர'' மாதலும்,
(4) செந்தமிழ்த் ''தகரம்'' கொடுந்தமிழிலே ''சகர'' மாதலும் விதி.

இம்மூன்று திரிபும் எய்தும் ஓர் உதாரணத்தை முதலிலே தருகிறேன். ''போய்விட்டது'' 1-ம் விதியினாலே ''போயிட்டுது'' என்றாகும். தென் பாண்டி நாட்டாரும் ஈழநாட்டாரும் 2-ம் விதியை மேற்கொண்டு ''போயிற்றுது'' என வழங்குவர். முஸ்லிம் மக்களுள் ஒருசாரார் 3-ஆம் விதிக்கிணங்கப் ''பேய்த்துது'' என்பார். 4-ஆம் விதியினாலே இத்தொடர் ''போச்(சு)'' என்றாகும். இம்முறையே

''ஆகிவிட்டது'' ,''ஆச்(சு)'' என்ருகும். வெற்றிலே=வெத்திலே, சற்றே=சத்தை, விற்று=வித்து, வைத்த=வைச்ச, தெரிந்துவிட்டது =தெரிஞ்சிச்(சு) என ஆகும்.

(5) உயிர்ப்பின்னே, இடையின வொற்றின் பின்னே வருகிற உயிரேறிய ககரம் வடமொழி ''ஹ'' போன்ற ஓசையுடையது. இத்தகைய ''ஹ'' ஓசைபெற்ற ககரம் வழக்கு மொழியிலே கெடும், கெட்டபின் முன்னின்ற உயிர் நீளுதலும் உண்டு. அலேகிருய் =அலேருய், அலேறே; அகத்துக்காரர்=ஆத்துக்காரர் (தமிழ் நாட்டு பிராமண மகளிர் வழக்கு), அகமுடையான்=ஆம்பிடையான் (மற்றையோர்வழக்கு).

(6) மெல்லொற்றின் பின்வரும் ககரம் வடமொழி வருக்கத்து மூன்ரும் எழுத்தின் ஓசை பெறும் : என்கிருர்கள்=என்கிருங்க, போய்விடுங்கள்=போங்க. ஏனைய வல்லொற்றுக்களும் இனமெல் லெழுத்தாகும். வேண்டும் என்ருல்=வேணும்னு.

(7) வருமொழி வல்லொற்றுக்கு இனமாக ஈற்றில் நின்ற மெல்லொற்றுத் திரியும்; ஆண்பிள்ளே=ஆம்பிள, பெண்பிள்ளே= பொம்பிள, பெண்டாட்டி= பொம்மனுட்டி.

(8) ழகரம் சென்னேயில் யகரமாதலும், தென் பாண்டி நாட்டிலும் ஈழத்திலும் ளகரமாதலும், சென்னே ரிக்ஷா வண்டிக்காரர் வாயில் ஸகரமாதலும் உண்டு : வாழைப்பழம்=வாயப்பயம், வாளப்பளம்; இழுத்துக்கொண்டு=இஸ்துக்கினு.

(9) குற்றியலுகரம் வல்லொற்றூர்ந்து மொழியீற்றில் வருவது செந்தமிழ் இலக்கண விதி. கொடுந்தமிழிலே குற்றியலுகரம் மெல்லொற்று இடையொற்று ஊர்ந்து ஈற்றில் வருதலும், வல்லொற்றூ ர்ந்து இடையில் வருதலும் உண்டு: ஐயர்=ஐய(ரு), யார்=யா(ரு), நெல்=நெல்(லு), கள்=கள்(ளு), பெண்=பொண்(ணு), இருக்கும்= இருக்(கு)ம்

(10) உடம்படு மெய் யகரம் மொழி முதலில் நிற்கும் ஏகாரத்தின் முன் வருதலுண்டு : ஏன் ஐயா=யேங்யா.

(11) மொழிமுதல் வகரம் உகரமாதலுண்டு : வீடு=ஊடு.

(12) இகரம் எகரமாகத்திரிதல் உண்டு : நிறைய=நெறைய.

(13) ''ஐ'' :'எய்'' ஆதல் உண்டு : வைகிருர்=வெய்கிருர்.

(14) எகரம் ஒகரமாதல் உண்டு : பெண்பிள்ளே=பொம்பிள.

இத்திரிபுகள் ஏன் நிகழ்கின்றன என்பதற்கு ''மொழி யொலியியல்'' ஆராய்ச்சியிலிருந்து காரணங் காட்டலாம். உரை பெருகுமாதலின் அது செய்வதை யொழித்து யாழ்ப்பாணத்து வழக்கு மொழியியல்பு சிலவற்றை ஆராய்வாம்.

(15) யாழ்ப்பாணத்து வழக்கு மொழியில் ஐகாரம் குறுகுவதில்லை. நெட்டெழுத்திற்கு உரிய இரண்டு மாத்திரையையும் பூரணமாகக் கொண்டு ஒலிக்கும்.

(16) ஆல், ஒடு, இல் என்னும் வேற்றுமை யுருபுகளும் போல் என்னும் உவமையுருபும் ஏகாரம் பெற்று, அவ்வேகாரம் ஐகாரமாகத் திரியப் பெறுவன. மேலைய விதியின்படி ஐகாரம் பூரணமாக ஒலிக்கும்.

(17) ஆறும் வேற்றுமைச் சொல்லுருபாகிய ''உடைய'' ஈற்றுயிர் மெய்கெட்டு முதல் 'உ' 'அ' ஆகும், 2ஆம் விதியின்படி டகரம் நகரமாகவும் பெறும்.

(18) ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபாகிய ''இடத்திலிருந்து'' என்பது ''இடத்திலையிருந்து'' ''இட்டையிலிருந்து'' என ஐகாரம் பெறும். அக்வைகாரமும் பூரணமாய் ஒலிக்கும்.

(19) விளி வேற்றுமை ஏகாரமும் வினு ஏகாரமும் பூரணமாயொலிக்கிற ஐகாரமாகும். தொகுத்து நோக்குமிடத்து முதலாம் நான்காம் வேற்றுமை யொழிந்த வேற்றுமைகளிலெல்லாம் ஐகாரம் நிறைவாக ஒலிக்கும். மேலை விதிகள் பெற்று வரும் இவ்வுதாரணங்களை நோக்குக :

அவனோடு=அவனோடை, எங்களுடைய=எங்கடை, நேரத்திலே=நேரத்திலை, எங்கே கிடக்கிறது=எங்கை கிடக்கு. என்னுடை அப்பன்=என்ற்றையப்பு, அவனைப்போல்=அவனைப்போலை, அவனால்=அவனாலை, அவனிடத்திலிருந்து=அவனிடத்திலையிருந்து. உங்களைத் தான் (ஐகாரக் குறுக்கம்)=உங்களைத்தான் (ஐகாரம் பூரண வொலி). மட்டகளப்புத் தமிழில் ஐகாரம் அகரமாய் நடக்கும். மேற்காட்டிய உதாரணச் சொற்கள் முறையே எங்கட, நேரத்தில, எங்க கிடக்குது, அவனப்பெல (ஓகாரம் எகரமாயினமையும் நோக்குக) அவனல, அவனிட்டெருந்து, ஓங்களத்தான் (உகரம் ஒகரமாயினமையும் நோக்குக.)

(20) ஒன்று முதல் ஒன்பதுவரையுமுள்ள எண்கள் யாழ்ப்பாணத்தில் ஒண்டு, இரண்டு, (சிறுபான்மை ரண்டு), மூண்டு, நாலு, ஐஞ்சு, ஆறு, ஏளு, எட்டு ஒன்பது என நிற்பன. மட்டக்களப்பில் ஒண்டு, ரெண்டு, மூணு, நாலு, அஞ்சு, ஆறு, ஏளு, எட்டு, ஒன்பது என நிற்பன.

(21) யாழ்ப்பாணத்தில் அகர வீற்றின் பின்னும் யகரம் உடம்படுமெய்யாகும். காணவில்லை=காணயில்லை. மட்டக்களப்பில் "காணல்ல", யாழ்ப்பாணத்திலே யகரத்தின் முன்னிற்கும் அகரம் ஐகாரமாதல் உண்டு : காணையில்லை.

(22) "ஏன்" விகுதி "அன்" ஆகும் : இருக்கிறேன்= இருக்கிறன். வருகிறேன்=வாறன்.

(23) ஓகாரவினாவின் முன்னிற்கும் ஆகாரம் இகரமாகும் : பண்ணுகிறாயோ=பண்ணுகிறியோ, விட்டாயோ=விட்டியோ.

(24) மட்டக்களப்பிலே மொழிமுதல் ஒகர ஓகாரங்கள் எகர ஏகாரங்கள் ஆவதுண்டு : சொல்லுங்கள்=செல்லுங்க, போய்விட்டார்=பேய்த்தார் (பெரும்பான்மை முஸ்லிம்களிடையே காணப்படுவது). மட்டக்களப்புத் தம்பிலிவில் என்னும் கிராமத்திலே மொழிமுதல் ஐகாரம் எகாரமாதல் உண்டு : மைத்துனன், மைத்துனி=மெச்சான், மெச்சி.

(25) நன்னூலார் கூறின "கா" என்னும் அசை நிலை இடைச்சொல் மட்டக்களப்பிலே வழக்கில் உளது : இதனை அதிகமாகப் பெண்கள் வழங்குவார்கள். இதனை அவதானித்த ஒரு புலவன் "ஆடவர் தோளிலுங்கா, அரிவையர் நாவிலுங்கா" என்று கூறினன் என்பதாகக் கேள்வி. ஆடவர்பாற் குடங்களை உறியில் வைத்து காத்தடியின் இருதலையிலுங் கட்டித் தோளில் எடுத்துச் செல்வர். மகளிர், உரையாடும் போது, "என்னகா சொல்றா ? ஏங்கா நீ வரல்லை ? எலக்கா இங்கே சத்து வந் திற்றுப்போ" என்று இப்படிக் "கா" அசைத்துப் பேசுவது அந்நாட்டு வழக்கம். "எலக்கா" என்பதிலே கலித்தொகையில் வரும் "எல்லா" திரிந்து நிற்பதை நோக்குக.

மேற்காட்டிய விதிகளோடு ஒரு புடை யொத்தும் ஒவ்வாதும் வருகின்ற சில வழக்குகளை உதாரண மூலம் விளக்குவாம். யாழ்ப்பாணத்திலுள்ள சில வழக்குகள் வருமாறு : அங்கே=பங்க, இங்கே=பிஞ்ச, உங்கள் ஐயா=கொய்யா, உங்கள் ஆச்சி=கோச்சி,

மகன்=மோன், மகள்=மோள், மேள்; தகப்பன்=தோப்பன். மேல் 5-ஆம் விதியிலே உயிர் பின்வரும் உயிரேறிய ககரம் வடமொழி ''ஹ'' போன்று இசைக்குமெனக் காட்டினும். அது வடமொழி விசர்க்கம்(:) போன்றும், தமிழ் ஆய்தம்(ஃ) போன்றும் இசைக்கும் என்பது வெளிப்படை. ''மஃன்'' எனப் பன்முறை விரைந்து சொல்லின், வடமொழி விசர்க்கத்தைப் போலத் தமிழ் ஆய்தமும் உகரவியற்கை பெற்று, முன்னின்ற அகரத்தோடு கூடி ஓகாரமாதல் ஒலியியலுக்குப் பொருத்தமேயாம் என்பதை மேலே உதாரணங்கள் காட்டுகின்றன. 11-ஆம் விதியிற் கூறியபடி மொழி முதல் வகரம் உகரமாதல் யாழ்ப்பாணத்தில் இல்லை; மட்டக்களப்பில் உண்டு. வீட்டிலே=(யா)வீட்டிலே=(ம) ஊட்டில, ஊட்ட. வயிற்றுக்குள் =(யா) வயித்துக்கை=(ம) வகுத்துக்க. பறஞ்சது என்னும் மலையாள மொழி யாழ்ப்பாணத்து வழக்கில் உண்டு. ''எழு ஞாயிறு'' ''படுஞாயிறு'' போன்ற ''எழுவான்'', ''படுவான்'' மட்டக்களப்பு வழக்கில் உண்டு. போதும்=போரும் என்பதுதென்னிந்தியப் பிராமணர் வழக்கு.

— 3 —

இடவேறுபாட்டாலும், குழுவேறுபாட்டாலும் கொடுந் தமிழ் விகற்பங்கள் பல வேறும் எனக் கண்டாம். இனி, தமிழ் நாடக நூலோர் சுவை, குறிப்பு, சத்துவம், அவிநயம், பொருள் சாதி, யோனி, விருத்தி, சொல், சொல்வகை, வண்ணம், வரி, சந்தி, சேதம், என நாடக வுறுப்புப் பதினன்கு என்பர். வடநூலார்க்கும் இவை ஒப்பனவே. தசரூபகம் 2-ஆம் அதிகாரம் 58-ஆம் சூத்திரம்: ''உலக வழக்கினை நுணுக ஆராய்ந் துணர்ந்து, நாடகக் கட்டுரை நடந்தேறிய தேசத்தாருக்குரிய பாஷை, வேஷம், கிரியை என்னும் இவற்றை மாறுபாடின்றி வழங்கவேண்டும்.'' 59-60-ஆம் சூத்திரம்: ''ஸமஸ்கிருதம் ஆடவருள் உயர்ந்தோராலும், தவத்தராலும் ஒரோவழித்தவ மூதாட்டியராலும், பட்டத்தரசியராலும், மந்திரி புதல்வியராலும், கணிகை மாதராலும் பேசுதற்குரியது. பிராகிருதம் பெண்பாலருக்குரியது. சௌரசேனி, ஆட்வருட் கீழாயினருக்குரியது. பைசாசம் கடையாயினருக்குரியது. மாகதியினியல்பும் அதுவே. பலதேய மாக்களுக்கும் அவ்வத்தேய வழக்குமொழியுரியது''. இந்த விதியினைத் தமிழுக்குக் கொள்ளுங்கால் ஸமஸ்கிருதம் என்ற மொழி நின்ற விடத்துச் செந்தமிழ் எனவும் ஏனையவிடத்துக் கொடுந்தமிழ் எனவுங் கொள்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திலே ''சேரிமொழி'' யெனக் குறிக்கப்பட்டதும் உரையாசிரியராற் ''பாடி மாற்றங்கள்'' என வழங்கப்பட்டதும் ஆங்கிலத்திலே (*Dialects*) என்று குறிக்கப்

பட்டதேயாகும். இஃது இடவேறுபாட்டினாலும் குழு வேறுபாட்டினாலும் வேறுபடும் மரபினை மேலேகாட்டினோம்.

> "சேரி மொழியாற் செவ்விதிற்கிளந்
> தோதல் வேண்டாது குறித்தது தோன்றிற்
> புலனென மொழிப்புலனுணர்ந் தோரே"

என்பது தொல்காப்பிய சூத்திரம். 'சேரி மொழி யென்பதுபாடி மாற்றங்கள். அவற்றானே செவ்விதாகக் கூறி ஆராய்ந்து காணுமைப் பொருட் டொடராானே கொடுத்துச் செய்வது புலனென்று சொல்லுவர் புலன் உணர்ந்தோர் என்றவாறு. அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல் வனவென்பது கண்டு கொள்க' என்பது உரை. கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டினைச் செந்துறை மார்க்கத்தன என்பர். சேரி மொழிச் செய்யுளினை வெண்டுறை மார்க்கமென்றார். இதனாற் செந்தமிழ் கொடுந் தமிழ் என வகைப்படுத்தியது செந்துறை வெண்டுறையென்னும் வகுப்பினோடு ஒரு புடையொக்கும் என அறிகின்றோம்.

'நாடக நூலுக்குக் கொடுந்தமிழ் வழக்கு வருமென்பது ஒரு பாலாக, அறநூல் (*Ethics and Law*) பொருணூல் (*Natural and Social Sciences*) இன்ப நூல் (*Fine Arts*) வீட்டு நூல் (*Religion and Philosophy*) என அறிஞர் வகுத்துரைத்த நூல்களைச் செந்தமிழில் எழுதுவது முறையா? கொடுந்தமிழில் எழுதுவது முறையா? என்னும் வினா எழுகிறது. ஆராய்ந்து கற்கும் அறிவுடையோருக்கு உரிய வாதலாலும், இடவேறுபாடு, பால் வேறுபாடு, வருணவேறுபாடு என்னும் வேறுபாடுகளை இகந்து நிற்பவாதலாலும் அறிவு நூல்கள் செந்தமிழ் மொழியிலே ஆக்கப்பட வேண்டுமென்பது முடிவாகின்றது. அஃதன்றியும் கோட்ட முடைய தமிழ் கொடுந்தமிழ் எனப்பெயரெய்தி நின்றது. நூலோவெனின் மனக் கோட்டத்தைத் தீர்ப்பதற்காக அமைவுற்றது.

> "உரத்தின் வளம் பெருக்கியுள்ளிய தீமைப்
> புரத்தின் வளமுருக்கிப் பொல்லா-மரத்தின்
> கனக்கோட்டந் தீர்க்கு நூலஃதே போன்மாந்தர்
> மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு."

என்பவாகலின், தான் கோடியது பிறிதொன்றினது கோட்டத்தைத் தீர்க்கும் ஆற்றல் இலதாதலின் கொடுந் தமிழிலே நூல் அமையாதென அறிகின்றோம்.

# 11. கலைச்சொல்லாக்கம் *

## I

சென்னை மாகாணத் தமிழர் சங்கத்தாரது பெருமுயற்சியினாலே, பலப் பல அறிவுத்துறையிற் புலமை வாய்ந்தோரும், உயர்ந்த ஆராய்ச்சித் துறைகளில் முயன்றுழைப்போரும், இளைஞர்க்குரிய கல்வி பயிற்றும் சிறந்த தொழிலினை மேற்கொண்டோரும், தமிழ்மொழி வளர்ச்சியில் ஆர்வம் மிக்கோரும், கல்வியிலாகா, பல்கலைக்கழகம் என்றித்தகைய அதிகார சபையாரால் அனுப்பப்பட்டோரும், பிறரும் ஈண்டுக் குழுமியிருக்கின்றனர். நவிலுந்தோறும் நூல் நயம்போலப் பயிலுந்தோறும் இனிமை பயக்கும் பண்புடையாளராகிய இப்பெருமக்களைக் காணுதலினாலே என்னுள்ளம் களிகூருகின்றது.

தமிழ்மொழி வளர்ச்சியைச் சிறந்த குறிக்கோளாகக் கொண்டு, இன்றைக்கு மூன்றாண்டுகட்கு முன்பு நிறுவப்பெற்ற சென்னை மாகாணத் தமிழர் சங்கமானது கலைச்சொல்லாக்க மென்னும் துறையிலே, சென்ற மூன்றாண்டுகளாக முயன்று கொண்டிருக்கின்றது. இதுவரையும் செய்த வேலையை மதிப்பிட்டுத் திருத்தஞ் செய்தலும், இனி நடத்தற்குரிய இவையெனத்தீர்ப்பிட்டு முடிவு செய்தலும் இம்மாநாட்டின் நோக்கங்களாகும்.

மேனாட்டுத் தொடர்பு ஏற்பட்ட காலம் முதலாக அந்நாட்டினரது உயர்வுக்குக் காரணமாயிருக்கின்ற கலைத்துறைகளைத் தம்மொழிப்படுத்த வேண்டுமென்னும் ஆர்வம் இந்திய

---

*சென்னை பச்சையப்பன் கல்லூரிமண்டபத்திலே, சென்னை மாகாணத் தமிழர் சங்கத்தாரினாதரவிலே ''கலைச்சொல்லாக்கம்'' கருதி 1936 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20 ஆம் நாள் கூடிய மகாநாட்டிலே அருட்டிரு விபுலாநந்த அடிகளார் நிகழ்த்திய தலைமைப் பேருரை.

செந்தமிழ்ச்செல்வி : சிலம்பு 15. பக்கம் 99–102, 149–155.

மக்களிடையே இருந்து வருகின்றது. தொன்றுதொட்டுத் தமக்கு உரிமையாக வருகின்ற உண்மை நூல்களின் நிறைவையும், குறைவையும் நன்குணர்ந்த கலைவல்லுநர், குறைவாய துறைகளை நிறைவு செய்யும் வழிகளைத் தேடி நிற்பது இயல்பேயாம். அஃதன்றியும் கலைத்துறைகள் காலதேச விகற்பங்களால் வேறுபடாது ஏந்நாட்டினருக்கும் எக்காலத்தும் வேண்டப்படுவதாதலின், அவை உலகிற்குரிய பொதுவுடைமைகளாகக் கொள்ளும் தகுதி வாய்ந்தன. மேலும் இந்நாட்டின் கல்விமுறை இங்குள்ள பல்கலைக்கழகங்களை அநுசரித்து ஒழுங்கு செய்யப்படுவது. இற்றைக்கு ஏறக்குறைய எண்பது ஆண்டுகளாக நடைபெற்று வருகின்ற சென்னைச் சருவ கலாசாலையின் விதிகளுக்கிணங்கக் கல்வி கற்றுத் தேறிய அறிஞர்களே இந்நாளிற் கலைத்துறைகளிலும் அரசியற்றுறைகளிலும் முன்னின்று இந்நாட்டின் நிர்வாகங்களை நடத்தி வருகின்றனர். இவர் தாம் பயின்ற மேற்றிசைக் கலைத்துறைகளின் சிறப்பினையுணர்ந்து அவை எப்பாலாரிடத்தும் பரவவேண்டுமென விழைந்து நிற்பதுமுறையேயாம்.

## II

"சையன்ஸ்" என்னும் ஆங்கில மொழி ஒருவாறு, நோக்குமிடத்து அறிவுத் துறையனைத்தினையும் குறிக்குமெனினும் "நிலந்தீ நீர் வளி விசும் போடைந்துங் கலந்த மயக்கமாகிய" உலகத்திற் பொறியுணர்வாற் சுட்டியுணரப்படுபவற்றை அளந்தும் இனங்கூட்டியும் ஆராய்கின்ற பூதபௌதீக நூற்றுறைகளே "சையன்ஸ்" என்னும் மொழியாற் சிறப்பாகக் குறியீடு செய்யப்படுகின்றன. அஃது அப்பரிசாக அமைந்ததெனினும், அறநூல், பொருணூல், இன்பநூல், வீட்டுநூல் எனவழங்கும் பாகுபாட்டினோடு *Faculty Laws, Science, Arts, Divinity* என நாற்பாற்படுத்தியமைத்த மேனாட்டு மரபினை ஒப்பவைத்து நோக்கும்போது "சையன்ஸ்" என்னும் மொழி பொருட்பாலனைத்தினையுங் குறியீடு செய்வதெனக் கொள்ளுதலும் ஒருதலை. அளத்தலும், இனங்கூட்டுதலும், வரையறை செய்தலும், பொதுமை காண்டலும், இலக்கணங் கூறலும் என்றிவையனைத்தும் கலைத்துறையனைத்தினுக்கும் ஏற்பட்டவாதலின், தனித்தனித் துறைகளை ஆராய்ந்து அவைதமக்கு வேண்டிய சொற்களை அமைத்துக்கொள்ளுமுன் கலைத்துறையனைத்தினுக்கும் பொதுவாக வேண்டப்படுவனவாகிய சொற்களை ஆக்கிக் கொள்ளுதல் நலமாகும். கலைத்துறைகள் இவை என வகுத்துக் காட்டுவதும், கலைவல்லுநராகிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றியதுமாகிய "நூற்றொகை விளக்கம்" என்னும் நூல் சூத்திரமும் உரையுமாக வமைந்து சிறந்த முடிபுகள் பலவற்றைத் தெளிவுபெற எடுத்துக்

காட்டுகின்றது. புத்தம் புதிய கலைகளை இயற்றும் முயற்சியி லீடுபடுவோருக்கு இந்நூல் இன்றியமையாத கருவியாகும்.

## III

தமிழ்மொழியிலே ஆட்சியிலிருக்கும் சொற்களை ஆராய்ந்து கண்டறிதல் நாம் செய்தற்குரிய முதற்பணியாகும். ''வடமொழி தமிழ் மொழி யெனுமிருமொழிக்கும் இலக்கணம் ஒன்றேயென்றே யெண்ணுக'' என்னும் கூற்றினை நாம் முற்றிலும் ஒப்புக்கொள்ளா விடினும், வடமொழியிலிருந்தெடுத்துத் தமிழான்றோராலே தமிழுரு வாக்கி வழங்கப்பட்ட சொற்களைப் பிறமொழிச்சொற்களெனக் கடிந்தொதுக்குதல் மேற் கொள்ளாது அவைதம்மை ஆக்கத்தமிழ் மொழியாகத் தழுவிக் கொள்வதே முறையாம். இமயம் முதற் குமரி வரையும் பரந்துகிடக்கும் பரத கண்டமெனும் பெருநிலப் பரப்பின் அறிவுச் செல்வம் பிளவுபடாத ஒன்றேயாம் என்பதை நாம் மறந்து விடுதல் கூடாது. சாதிசமய வேறுபாடின்றி இந்திய நாட்டுப் பேரறிஞர் கலைத்துறையிலே ஆழப்புகுந்து ஆராய்ந்து கண்ட சிறந்த முடிபுகளை வடமொழியிலெழுதும் வழக்கம் தொன்றுதொட்டு இந்தநாட்டிலே யிருந்து வருகிறது. இதனுல் வழக்கு மொழிகள் கலைத்துறைகளிலே பெருக்கமடையாது ஒழிந்தன. உதாரணமாகச் சிற்பக் கலையினை எடுத்துக் கொள்வோம். தேவர்கோட்டம், மன்னன் கோயில், மக்களில்லம் என்னுமிவைதம்மையமைக்கும் முறைகளையும் தெய்வச்சி லையுருவங்களை யமைக்கும் கணித நுட்பங்களையும் பண்டைத் தமிழர் நன்குணர்ந்திருந்தனரென்பதற்குத் தமிழ் நாட்டிலுள்ள திருக் கோயில்களே சான்று பகர்கின்றன. இவை தம்மை யமைக்கும் ஆற்றல்வாய்ந்த சிற்பியர் தமிழ் நாட்டில் இன்றும் உளர். அங்ஙன மாயினும் இக்கலை நுட்பங்களனைத்தினையும் உணர்த்தும் ஆகமநூல்கள் வடமொழியிலேதான் எழுதப்பட்டிருக்கின்றன. இவை தம்மை வழக்கு மொழிகளிலே பெயர்த்தெழுதல் சாலவும் வாய்ப்புடைத்து. இம்முயற்சியிலே வடமொழி வல்ல தமிழறிஞர் இனிமேலாவது ஈடுபடுவாராக.

## IV

சாங்கியம், யோகம், நியாயம், வைசேடிகமாகிய நான்கு சாத்திரங்களிலும் கலைநூலுணர்ச்சிக்கு வேண்டிய பொருள்மலிந்து கிடக்கின்றது. பாரத நாடு செய்த அருந்தவப் பயனுகத் தோன்றிய சுவாமி விவேகாநந்தரியற்றிய ''இராஜயோக'' நூலினை மொழி பெயர்க்குந் தொழிலில் யான் ஈடுபட்டிருந்த காலத்திலே

யோகசாத்திரத்திற்கு முதனூலாகிய ''பதஞ்சலி யோக சூத்திர'' நூலினைத் தமிழில் மொழிபெயர்த்தெழுத நேரிட்டது. அம்மொழி பெயர்ப்பு சுவாமி விவேகாநந்தரியற்றிய நூல்களின் தமிழ்மொழி பெயர்ப்பாகிய ''விவேகாநந்த ஞானதீப'' முதற்றொகுதியிலே வெளியிடப் பட்டிருக்கிறது. அதனைப்படித்த அன்பர் பலர் மிகவுயர்ந்த நுண்ணிய கருத்துக்களைத்தூய தமிழிலே எழுதுதல் கூடும் என்னும் முடிபிற்கு வந்தனர். நியாய வைசேடிக நூல்களையும் மொழிபெயர்த்தெழுத முயன்றேன். ஓய்வு ஏற்படாமையால் அம்முயற்சிநிறைவு பெற்றிலது.

ஓரோவிடத்து ஆட்சிப்பட்ட வடமொழிப்பதங்களைத் தமிழில் வழங்குதல் குற்றமாகாது. பிங்கலந்தை, திவாகரம், சூடாமணி நிகண்டு என்னும் நிகண்டுகளிலே வந்த பதங்களையெடுத்தாள்வது எவ்வாற்றானும் பொருத்தமுடையதாகும். சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலிய உண்மை நூல்களில் வழங்கிய வடமொழிப் பதங்கள் ஆன்றோர் வழக்காதலின் எம்மால் உவந்தேற்றுக் கொள்ளப்படுவனவேயாம். சித்தர்நூல், வைத்தியநூல், சோதிடநூல் என்னும் இவை தம்முள்ளும் தலையாயினாரியற்றிய நூலில் வரும் மொழிகள் தமிழில் வழங்குவதற் குரியவேயாம். இவையெல்லாம் புதுச் சொல்லாக்கத்திற்கு அடிப் படையாக அமைந்துள்ளன.

சொற்களைப் பொருள் பற்றுக்கோடாக வகைப்படுத்தி வழங்க முயன்ற நிகண்டு நூல்கள் புதுச்சொல்லாக்கத்திற்கு பேருதவி புரிவன. 'டாக்டர் றோஜெட்' என்பவர் ஆங்கில மொழியிலியற்றிய ''தெசாறுஸ்'' என்னும் நிகண்டு நூலினை நோக்குவாருக்கு இவ்வுண்மை நன்கு புலப்படும். கலைச்சொல்லாக் கத்திற்கென வடமொழி, ஆங்கில மொழி, தமிழ் மொழியாகிய மும் மொழியினும் பொருட்பாகுபாடு செய்யும் ஒரு மும்மொழி நிகண்டினை வகுத்தமைத்தல் பெரும் பயன்றருவதாகும்.

பிறமொழியிலிருந்து எடுத்த பதங்களைத் தமிழில் வழங்குமிடத்து அவை தம்மை எவ்வாறு தமிழாக்கிக் கொள்ளுதல் வேண்டுமென்பதைக் குறித்து ஒரு சில குறிப்புக் கூறுவாம். ஒவ்வொரு மொழிக்கும் சிற்சில சிறப்பியல்புகளுள. அவைதம்மை மாறுபடாது பாதுகாத்தல் ஆன்றோர்க்கியல்பு. யாப்பியலிற் கூறிய காசு, நாள், மலர், பிறப்பு என்னும் நால்வகை வாய்ப்பாடும் பற்றி நடப்பன, ஓரெழுத்தொரு மொழியும் ஈரெழுத்தொரு மொழியும், இரண்டிறந்திசைப்பனவனைத்தும் தொடர் மொழியே யாம். அவைதாம் ஈரசை கொண்டும் மூவசை புணர்ந்தும்

சீரியைந்திறுவன. ஈரசை மொழிகளே பெருவரவின. மூவசை யின் மிக்க மொழிகள் தமிழிற் பயில்வதில்லை. மொழி முதலிலும் இறுதியிலும் நிற்றற்குரிய எழுத்து இவையாமெனவும் இன்ன இன்ன எழுத்துக்களின் முன்னர் இன்ன இன்ன எழுத்துக்கள் மயங்காவெனவும் இலக்கண நூலாசிரியர் வகுத்துக் காட்டியிருக் கின்றனர். அவர் ஆராய்ந்தமைத்த விதிகளுக்கு இயைவாகச் சொற்களையாக்கிக் கொள்ளுதல் முறையாகும். உயிருள்ள மொழி யானது பிறமொழித் தொடர்பு கொண்டு தனக்குரிய சொற் களஞ்சியத்தைப் பெருக்கிக் கொள்ளுதல் வேண்டும். வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சுகிளவி, தொகைமொழி, தொடர்மொழி என்றின்னவற்றிற்கு இலக்கண நூலாசிரியர் கூறிய வரம்பினைக் கடைப்பிடிப்பது எவ்வாற்றானும் இன்றியமையாததேயாம்.

வாங்கு, மேசை, கதிரை என்னும் மொழிகள் *Bench, Table, Chair* என்னும் ஆங்கிலச் சொற்களின் மொழி பெயர்ப்பாக ஈழநாட்டில் வழங்கப்படுகின்றன. இவை போர்த்துக்கீச மொழியி லிருந்து தமிழில் வந்து வழங்குந் திசை மொழிகளா மென்பதைப் பெரும்பாலார் அறிந்து கொள்வதில்லை. இச்சொற்கள் தமிழுருவுடையவாதலின் வேறுபாடின்றி வழங்கப்படுகின்றன. ஒரேயினப் பொருள்களைக் குறிக்குஞ் சொற்கள் ஒரேவிகுதி பெற்று நிற்றலும், முரணிய வினைச் சொற்கள் ஒரே வாய்ப்பாட்டால் நடந்து பெரும்பாலும் ஒரேயெதுகையாக நிற்றலும் தமிழ் வழக்கு. அறம், மறம், எனும் முரணிய வினைச் சொற்கள் ஒரே யெதுகையவாக அமைந்து நிற்றலை நோக்குக. இம்முடிபுகளுக்கு எடுத்துக்காட்டாக ''மின்சார சாத்திர வரலாறு ''என்னும் பொருள் பற்றி யானெழுதிய கட்டுரையினொரு பாகத்தைப் படிக்கின்றேன்.

'' ஊசிக்காந்தத்தினியல்பு மிகப் பழைய காலந்தொட்டுப் பல தேசத்துப் பண்டிதர்களாலும் அறியப்பட்டுவந்தது. காந்தக் கோட்டையினருகே சென்ற கப்பலொன்றிலிருந்த ஆணிக ளெல்லாங் கழன்றுபோகக் கப்பல் அழிந்து போயிற்று எனக்கூறும் பழங்கதையும் உண்டு. காந்தக் கட்டியினால் உரிஞ்சப்பட்ட இரும்புத்துண்டு காந்தத்தினியல்பினைப் பெறுமென்பதை முன்னோரறிந்திருந்தனர். யவன புரத்திலே மிலேத்துஸ் என்னும் பகுதியில் வதிந்த தாலேஸ் என்பாரொருவர், பொன்னம்பர் என்னும் ஒரு வகைப் பிசின் கையினால் உரிஞ்சப்படின் கடிதத்துண்டு போன்ற பாரமற்ற பொருள்களைக் கவரும் வன்மையைப் பெறுமெனக் கண்டறிந்தனர். பின்னளிற் பதினேழாம் நூற்றாண்டினாரம்பத்திலே இலண்டன் பட்டினத்தில் வசித்த கில்பேர்ட் என்பார் ஓராசிரியர், பலவகைப் பொருள்களையும் பரீட்சித்ததின் பயனாகக் கண்ணாடி, கந்தகம்,

முத்திரைமெழுகு, வைரம், கோமேதகம், குங்கிலியம் ஆகிய பொருள்கள் பட்டுத்துணி முதலியவற்றால் உரிஞ்சப்படின் ஒருவகைக் கவரும் சக்தியைப் பெறுமெனக் கண்டு பிடித்தனர். இப்பொருள்களையெல்லாம் பொன்னம்பரைக் குறிக்கும் யவனபுர மொழியினாலே'' ''எலேக்ரிறிக்ஸ்'' எனக் குறியீடு செய்தனர். இவருக்கு ஒரு நூற்றாண்டினுக்குப் பிறகு வாழ்ந்த ஸ்டீபன் கிரே (1670–1736) என்னும் ஆங்கிலேயர் மேற்கூறிய கவருஞ் சக்தி உலோகப் பொருள்களாலான தந்திகள் வழியாக எளிதிற் பாயுமென்றும் பட்டுத்துணி முதலியவற்றினாலே தடைப்படுமென்றுங் கண்டனர். ஆங்கது பற்றி இவர் பொருள்களை உகைவன *(Conductors)*, தகைவன *(Non–Conductors: Insulators)* என இருதிறப்படுத்திக்கூறினர். (ஊர்தல், உய்த்தல், உகைதல், ஒட்டல், நடத்தல், செலுத்தல் என்பன ஒரு பொருட் சொற்கள். தகைதல், தடுத்தல், சிறைப்படுத்தல் என்பன ஒரு பொருட் சொற்கள்). இவர் காலத்தில் வசித்த டூபே (1698–1739) என்னும் பிராஞ்சியர் உரிஞ்சுதலாற் பிறக்குஞ் சக்தி இருவகைப் படுமெனக் கண்டு அவற்றினை *Vitreous* (கண்ணாடியைச் சார்ந்த), *Vemous* (குங்கிலியத்தைச் சார்ந்த) என வெவ்வேறு அடை கொடுத்து வழங்குவாராயினர். 1746ஆம் ஆண்டிலே பீட்டர்வன் முஸ்சென்புறூக் என்னும் ஒல்லாந்த தேசத்து ஆசிரியர் 'லேடன்சால்' என வழங்கும் இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். 'லேடன்' என்பது ஒல்லாந்த நாட்டிலுள்ள நகரின் பெயர்; சால் (ஜாடி)–ஈங்கு, கண்ணாடியாற் செய்த ஒரு பாத்திரத்தைக் குறிக்கும். உள்ளும் புறம்பும் உலோகத்தகட்டினால் மருவப்பட்ட ஒரு கண்ணாடிப் பாத்திரத்தினால் அமைத்தது இவ்வியந்திரம். இதனைப்பற்றிப் பின்னர்க் கூறுவாம். இவ்வியந்திரத்திலிருந்து எழுந்த சக்தியின் தாக்கல் பலருக்கு அதிசயத்தை விளைத்தது. அக்காலத்திலே அமெரிக்க நாட்டில் வாழ்ந்த 'பெஞ்சமின் விறுங்கிளின்' (1706–1790) என்பார் 'லேடன்சாலி'லிருந்தெழுந்த தாக்கலும் *(Discharge)* ஒளிவீச்சும் *(Light effect)* மேகத்திலிருந்தெழும் இடியேற்றையும் மின்னலையும் நிகர்த்ததாமெனக் கண்டனர். இவர் மின்னலின் தன்மையைப் பரீட்சிக்கக்கருதி உலோகப் பொருளினாலான தந்தியொன்றினைக் காற்றாடிப் பட்டத்திற் கட்டி மேலேற்றி ஆராய்ச்சி செய்தார். இத்தகைய ஆராய்ச்சிகளின் பயனாகப் பொன்னம்பர் கண்ணாடி முதலியவற்றை உரிஞ்சுதலாற் பிறக்குஞ்சக்தி மின்னற் கொடியாக மேகத்திற்றோன்றுகிற மின்சக்தியோடு ஒன்றாகிய நீர்மையதே எனக் கண்டறிந்தார். டூபே முதலியோர் கூறியது போல இச்சக்தி இருவகைப்படாது ஒருவகையே யாமெனவும், அது மிகை *(Positive)* குறை *(Negative)* என்னும் வேறுபாட்டினாலே இருவேறு நீர்மையதாகி, கூட்டு *(Plus)* மின்சக்தி, கழி *(Minus)* மின்சக்தியென இரண்டாகுமெனவுங் கண்டார். தகைவு செய்யப்பட்ட

ஒரு பாத்திரத்திலுள்ள உலோகக் கோலொன்றில் இரண்டு மெல்லிய பொற்றகடுகளைத் தொங்கவிட்டபின் குறித்த கோலினை மின்சக்தி யேறிய ஒரு பொருளினுற் றெட்டாற் பொற்றகடுகள் அகன்று நிற்பனவா மெனக் கண்ட ஹாக்ஸ்பி (1706) என்பார் மின்காட்டி (Electroscope) என்னுங் கருவியை யமைத்தார். ஹென்றி கவெண்டிஷ் (1731–1810) என்னும் ஆங்கிலேயரும் சார்ள்ஸ் அகுஸ்தின் கூலம்ப் (1736–1806) என்னும் பிராஞ்சியரும் மின்சக்தியின் கவர்ச்சி, தாக்கல் என்னுமிவற்றின் அளவுகளைக் கணித்தறியும் மார்க்கங்களையும் கருவிகளையும் அமைத்தனர்.

''மேற்குறித்த ஆராய்ச்சிகள் நடந்து கொண்டிருக்குங் காலத்திலே இத்தாலி தேசத்து வைத்திய பண்டிதரான ''லுய்கி கல்வானி'' (1737–1898) என்பார் ஒருவகை மீன்கள் மின் சக்தியின் தாக்கலையொத்து தாக்கலைத் தருகின்றனவெனக் கண்டு அப்பொருளைத் தொடர்ந்து விசாரித்து நீர்வாழ் சந்துக்களின் நரம்பு மண்டலங்களை ஆராய்வாராயினர். ஒரு நாள் அவர் தவளையின் பின்னங்காலிரண்டையுஞ்சேர்த்துச் செம்புக் கம்பியிற் கோத்துத் தூக்கியிருந்தார். காற்று வீசத்தவளையின் கால் அணித்தாகவிருந்த இரும்புச்சலாகையிற் பட்டது. பட்டவுடனே அவை தவளை பாயும்போது ஒடுங்கி நிமிர்வது போல் ஒடுங்கி நிமிர்ந்தன. நரம்பிலிருந்தே அம்மின்சக்தி தோன்றியதெனக் கல்வானி நினைத்தார். அவர் தேயத்தவரான அலெக்சாந்திரோ வொல்தா (1745–1827) என்பவர் கல்வானி கொண்ட முடிபு சரியன்றெனவும் இதுவேறு உலோகங்கள் ஒன்றினையொன்று தீண்டுவதனுல் மின்சக்தி பிறக்கிறதெனவுங் காட்டித் துத்தநாகம், செம்பு என்னும் இவற்றுற் செய்த தகடுகளை ஒன்றின் மேலொன்றுக மாற்றியடுக்கி அவற்றிடையே உப்பு நீராற் றேய்த்த ஊறுதாள்களை வைத்து அடியிலிருந்த செப்புத் தகட்டோடு மேலேயிருந்த துத்தநாகத்தைச் செப்புக் கம்பியினுலிணைத்து அவற்றின் வழியாக மின்னருவி பாய்வதைக் காட்டினர். பல கண்ணுடிப் பாத்திரங்களில் உப்புநீரை நிறைத்து அவற்றினுள்ளே செப்புத்தகடு, துத்தநாகத்தகடு என்னுமிவற்றை நிரைபட வைத்துச் செம்புக் கம்பியினுலிணைத்து மின்னருவி பாயுமியல்புகளைக் காட்டினர். இங்ஙனம் பிறப்பிக்கப் படுகின்ற மின்னருவியானது நீரினை நாரம், அனலம் என்னும் இரு வேறு வளிகளாகப் பிரித்துவிடும் என்பதை 1800 ஆம் ஆண்டிலே **நிக்கல்ஸன், கால்லைல்** என்னும் இருவர் கண்டுபிடித்தனர். 1802ஆம் ஆண்டிலே ''**ஸேர் ஹம்பிரி டேவி**'' என்பார் மின்னெகிழ்வு முறையினுலே நீரினைப் பிரித்து அதனிடையேயுள்ள நீரகம், தீயகம் என்னும் இரண்டு வளிகளிலும் இரண்டு பங்கிற்கு ஒரு பங்கு விகிதமாக அமைந்துளவாமெனக் காட்டினர்.

''மின்சக்திக்கும் காந்தசக்திக்குமிடையேயுள்ள தொடர்பினைக் கண்டுபிடித்த பெருமை டென்மார்க் தேசத்துச் சாஸ்திர பண்டிதராகிய **ஹான்ஸ் கிறிஸ்தியன் ஓயர்ஸ்ரெட்** *(1777–1857)* என்பவருக்குரியது. இவர் கொப்பனேஜன் நகரத்துப் பல்கலைக்கழகத்திலே பேராசிரியராயமர்ந்திருந்தார். கல்வானி மின்னருவித் தொடர் ஒன்றின்மீது இவர் பரீட்சை செய்து கொண்டிருக்கும்போது தற்செயலாக ஒரு காந்த ஊசியை மின்னருவிபாயுங் கம்பிக்குச் சமீபமாகக் கொண்டு வந்தார். வடக்குத் தெற்காக நின்ற கம்பி தன்னிலையினின்று விலகியது. அருவி பாயுங் கம்பியை எதிர்த்திசையாகப் பிடித்தார். கம்பி மறுபுறமாக விலகியது. இந்தச் சோதனைக் கிரியையை **ஓயர்ஸ்ரெட்** வெளியிடுதலும் புதியதோர் ஆராய்ச்சித் துறை ஏற்பட்டிருப்பதைக் கண்ட ஐரோப்பிய அறிவு நிலையங்கள் இத்துறையை விசாரிக்கத் தொடங்கின. இதனைப் பெருகவாராய்ந்து சிறந்த முடிபுகளைக் கண்டவர் **அந்திரேமாரி அம்பியர்** என்னும் பிரஞ்சிய விஞ்ஞான சாஸ்திரியார் ஆவார். இவர் 1775 ஆம் ஆண்டிலே பிறந்தது 62 ஆம் வயதிலே 1836 இல் உயிர் துறந்தார். தொடுத்துக் கணிதசாஸ்திரத்தில் வல்லவராகிய இவ்வறிஞர் ஓயர்ஸ்ரெட் வெளியிட்ட உண்மையினைப் பூரணமாக ஆராய முற்பட்டார். இவர் கண்டுபிடித்த விதி காந்த ஊசியைப் பார்த்த வண்ணமாக ஒருவன் மின்னருவியோடு நீந்துகிறானென்று வைத்துக் கொள்வோமாயின், ஊசியின் வடகோடி அவனது இடக்கைப் பக்கத்திற்கும் தென்கோடி வலக்கைப் பக்கத்திற்கும் விலகும். மேற் செல்வதன் முன் மின்னருவித் தொடர்களைப்பற்றிச் சில குறிப்புச் சொல்வது இன்றியமையாததாகின்றது. மின்னருவித்தொடர் முழுவதும் ஒரு வலயமாக அமைந்து நிற்கும் பொழுதுதான் மின்னருவி பாயும். அவ்வலயத்தைத் தொடுத்தலினாலும் வெட்டி விடுதலினாலும் மின்னருவிப்பாய்ச்சலை ஓடவும் நிற்கவுஞ் செய்தல்கூடும். வட்டாகாரமாக அமைந்த செம்புக் கம்பியின் நடுவிலே காந்தசக்தி தாக்கும். அச்சக்திதாக்கலினளவு மின்னருவியின் வேகத்தைக் கணிப்பதற்குச் சாதனமாகும். பலசுற்றுக்களாலமைந்த செம்புக்கம்பி நாளத்தினுள்ளே இரும்புத் துண்டினை வைத்தால் அது காந்த சக்தி பெறும். உருக்குநிலைபேறுகிய காந்தமாகும். மின்னருவியின் காந்த சக்தியினாலே அவ்வருவியின் வேகத்தையளப்பதற்கு அமைந்த கருவி கல்வினோமானி யெனப்படும். மின்னருவி வேகத்தை யளப்பதற்குரிய அலகு விஞ்ஞான சாஸ்திர பண்டிதருடைய பெயரினால் 'அம்பியர்' என வழங்கப்பெறும். இதைக் குறித்துப் பின்னர்க் கூறுவாம்.

'' இனி **ஜோர்ஜ் சைமன் ஓம்** என்பவர் செய்த ஆராய்ச்சிகளைப் பற்றிச் சிறிது சொல்லுவோம். இவர் ஜெர்மானியர். ஏர்லங்கன் நகரத்திலே *(1789–1854)* பிறந்தார். அனற் பெருக்கமானது

ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தினுக்கு ஓடுதலைப் பற்றிய முடிவுகளை 1822 ஆம் ஆண்டிலே **ஜோஸெப் பூரியர்** என்பவர் ஆராய்ந்து வெளியிட்டார். குறித்த காலவெல்லையிலேயோடுகிற அனலின் மொத்த அளவு அனலோடுகிற உலோகக் கோலின் எல்லைகளில் ஏற்பட்ட மதுகை வேறுபாட்டுக்கு நேர் விரோதமாகுமென்பது பூரியர் கண்ட முடிபு. ஓம், இம் முடிபைக் குறித்துச் சிந்தித்து மின்னருவியின் பாச்சளவு அவ்வருவிபாய்கின்ற கோலின் ஈரந்தத்திலுமேற்பட்ட மின்மதுகை வேறுபாட்டிற்கு நேர் விகிதமாக அமையும் என்பதைக் கண்டார். இதைக் குறித்து ஓம் செய்த சோதனைகளிலே ஒரே உலோகத்தினாலமைந்து ஒரே கண்ணறையளவுடையவாய்ப் பலவேறு நீளங்களையுடைய தந்திகளின் மூலம் மின்னருவியைப் பாய்ச்சினார். உலோகமும் நீளமும் மாறுபாடற்றிருக்கக் கண்ணறையளவை வேறுபடுத்திச்சில பரீட்சைகளைச் செய்தார். இவற்றின் பயனாக இவருடைய நாமத்தினால் வழங்குகிற ஓம்விதி என்பதனைக் கண்டுபிடித்தார். வேறு வேறாகிய உலோகங்கள் வேறு வேறளவாக மின்னருவியை உகைக்கும் என்பது இவரது முடிபு. உகைப்புந் தகைப்பும் ஒன்றினுக்கொன்று விலோமமாவன.

''அருவி வேகமானது, முடுக்கத்திற்கு நேர் விகிதமாயும் தகைப்புக்கு விலோம விகிதமாகவும் அமைத்து நிற்கும் தகைப்பு வலயத்தின் தகைப்பும், மின் காலத்தின் தகைப்பும் ஒன்று கூட்டிய கூட்டுத் தொகையாகும். இவ்விதியைக் கொண்டு மேற்குறித்தவற்றை அளந்தறிதல் கூடும்.''

## VI

கலை நூல்களை நாட்டு மொழியிலெழுதும் பெரு முயற்சி இந்தியாவின் பல பாகங்களிலும் நடந்து கொண்டிருக்கின்றது. ஐதரபாத் சமஸ்தானத்தினாதரவிலே நடைபெறும் ''ஒஸ்மானியா'' சர்வகலாசாலையானது நாட்டு மொழியாகிய உருது பாஷையிலே எல்லாக் கலைத்துறைகளையும் பயிற்றுதற்கு ஏற்பாடு செய்திருக்கின்றது. இந்தியாவின் பல பாகங்களிலும் உயர்ந்த விஞ்ஞானக் கலையாராய்ச்சிக்குப் பொது மொழியாக ஆங்கில மொழியமைதலும் ஒவ்வொரு மாகாணத்தினும் ஏழை மக்கள்தாமும் எளிதிற் பயின்றுகொள்ள வேண்டிய கலைத்துறைகளனைத்தும் நாட்டு மொழியிலமைந்து நிற்பதும் பொருத்தமாகும்.

தொகுத்துரைக்குமிடத்துக் கலைநூல்கள் நாட்டிற் பரவுவதற்கு எவ்வெச்சாதனங்கள் வேண்டப்படுபவோ ஆங்கவற்றைத் தாமதமின்றி ஆக்கித்தருவது அறிஞரது கடனாகும்.

இற்றைக்கு ஒரு நூற்றுண்டின் முன் யாழ்ப்பாணத்திலே ஆங்கிலக் கல்விச்சாலை நிறுவி, உயர்தரக் கல்வி பயிற்றுவித்த அமெரிக்க மிஷன்குருமார் செய்த முயற்சியினுலே வெளிவந்த வீச கணிதம், நியாய சாத்திரம், வான சாத்திரம், அங்காதி பாதம், சுகரணவாதம், உற்பாலனம், கெமிஸ்தம் முதலிய நூல்கள் ஒரு குறித்த மரபு பற்றிச் சொற்களை யமைத்துச் சொல்லுகின்றன.

# 12. தென்னாட்டில் ஊற்றெடுத்த அன்புப்பெருக்கு வடநாட்டிற் பரவிய வரன் முறை

'பிரபுத்தபாரத' 1941 நவம்பர் மாத வெளியீட்டில் 'ஆசிரியர் கருத்துரை' யாக யான் எழுதிய (*Religious Revival in medieval India* என்னும்) பொருளுரையினைத் தமிழன்பர்கள் பொருட்டு ஈண்டு மொழி பெயர்த்துத் தருகிறேன்.

வேத இருடிகள் அறிவு நெறி நின்று மேலான உண்மைப் பொருளைக் காண முயன்றனர்கள். உபநிடதகாலத்து அறிஞரும் வாதராயணரென்னும் பெரியாரும் போற்றி வளர்த்த வைதிக ஞானநெறியானது சங்கரரது அத்வைதஞானமாக நிறைவுபெற்றது. ஆதலினாலே, சங்கரர் பழைய இந்தியாவில் வைதிகத் தொன்னெறி நிறுவிய பெரியோர் வரிசையிலே இறுதியில் நிற்றற்குரியர். இராமாநுஜர் (கி.பி. 1027–1137) ஒரு புதிய யுகத்தினைத் தொடங்குகின்றார். தமிழரது அறிவுச்செல்வம் இராமாநுஜருக்கு முதுசொத்தாகக் கிடைத்த வரன்முறையினைத் தமிழ் நாட்டுக்குப் புறத்தேயுள்ளோர் அதிகம் அறியார். சடகோபர் எனப் பெயரிய நம்மாழ்வார் ஞானக் கடலினுள்ளே முழுகித் தமிழ் மொழிக்கு அணியாகத் திரட்டிவைத்த அருமணிக்களஞ்சியம் இராமாநுஜருக்கு உரிமைப் பொருளாயிற்று. திருநெறித்தொண்டர் பலரைத் தோற்றுவித்த செழுமைமிக்க தமிழ்க் குடியானது பாவலர்க்குப் பாவலராகவும், நுண்ணறிவினருள் நுண்ணறிவினராகவும், தொண்டர் பரவும் தொண்டராகவும், விளங்கிய சடகோபரை உலகிற்கு அளித்தது. அவரது திருவாய்மொழி தமிழ்க் கவிச் செல்வத்திற்குத் தலையணியாயிற்று. 'வாய்மை'யென்பது 'உண்மை' ஆதலின், 'வாய்மை—மொழி' என நின்ற 'வாய் மொழி' 'உண்மையுரை' என்னும் பொருளினது.

அவ்வுண்மையும் தருக்கமுறையினாற் பெறப்படும் சிற்றுண்மையாகாது, ஞானயோகநெறியினால் எய்துதற்குரிய பேருண்மையாகும். பரிபாடல் முதலிய சங்கத்தமிழ் நூல்களிலே 'வாய்மொழி' வேதநூலுக்குப் பெயராக வழங்கப்பட்டது. 'திரு' என்பது 'செம்மை',

---

செந்தமிழ்: தொகுதி - 40. (1942) பக்கம் 73 - 80, தொகுதி 41 (1943) பக்கம்; 41 - 46, 81 - 96.

